'உயிர்த்துணையை நாடிக் கண்ணீர் சொரியவிரு கரங்குவித்து' என்றனர். சிவஞானப்பிரகாச வெண்பா: "ஆசானைக் காண்டோறு மன்புருகக் கைகுவியு, மாசாருடம்பு மயிர்க்குச் செறியும்-பேசாத, வானந்த முள்ளூறு மக்கணமே பாசங்க, டாநந்த முத்தி தரும்" எனவும், அதிரகசியம்: "கண்டான் குருவைக் கண்ணூரக் கதறி வீழ்ந்தான் கமலமிசை, யண்டர் வரனே நெடுமாலே யயனே யென்று னகமகிழ்த்தான், றொண்டா லியலும் பணிசெய்யத் துணிந்தான் பணிந்தான் மும்முறையே, பண்டா னிறைந்த பாவாலுங் காவா யென்னப் பாடினன்" எனவும் வருவனவற்றுற் காண்க.

குருவைத் தரிசித்தமாத்திரத்து வணங்கவேண்டுமென்பார் தொழுதல் செய்வாம் என்றனர். சிவஞானதீபம். "திருமறைமா முனிவருக் கன்றாலநீழற், றிருந்தவற முரைத்தபெருந் தகைதா னிந்த, விருநிலமே லருளுருவாய் வந்து தோன்றி, யிசைந்திடுநெற் றவிடுமுமி யுமிபோ லேய்ந்த, திரிமலவே ரினை கினைவா லுரையால்ஞானச், செய்கையினு லறுத்திருதாள் சென்னி சூட்டுங், குருபரனை மருளுலக வாதை நீக்குங், குணக்கடலை மனத்திலுற வணக்கஞ் செய்வாம்." என்றதனுற் காண்க. (௨௪)

அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறு
யமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி யல்ல வாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத வறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம்.

(இ-ள்.) அகரவுயிர்-அகரவுயிரானது, எழுத்தனைத்தும்-எல்லா வெழுத்துக்களும், ஆகி-தானேயாகி, வேறாய்-அவற்றிற்குவேறாகி, அமர்ந்ததென-அமைந்து நிற்பதுபோல, அகிலாண்டம் அனைத்துமாகி-சகலாண்ட சராசரங்களுந் தானேயாகி, பகர்வன எல்லாமாகி-சொல்லப்படுவனவாகிய பொருள்களெல்லாமாகி, அல்லதாகி-அவையல்லாததாகி, பரமாகி-எல்லாப் பொருள்களுக்கும் மேலானபொருளாகி, சொல்லரிய-சொல்லுதற்கரிய, பான்மையாகி-தன்மையதாகி, துகளறு-குற்றமற்ற, சங்கற்ப விகற்பங்களெல்லாம்-சங்கற்பமும் விகற்பமுமாகிய எல்லாவற்றிலும், தோயாத-படியாத, அறிவாகி-ஞானவடிவாகி, சுத்தமாகி-புனிதமாகி, நிகரில்-ஒப்பற்ற, பசுபதியான-ஆன்மாக்களுக்கு இறைவனாகிய, பொருளை-வஸ்துவை, நாடி-உத்தேசித்து, நெட்டுயிர்த்து-பெருமூச்செறிந்து, பேரன்பால்-பெரிதான அன்புடனே, நினைதல் செய்வாம்-தியானிப்போம் (யாம்.) என்க

(விரை.) அகரம் ஆகாரமாதி வடிவங்களெடுத்துக் ககரமுதலியமெய்களை யியக்குமாறுபோல,சிவன்எண்ணிறந்த வடிவங்களெடுத்துச் சீவர்களை யியக்குவன். மெய்யெழுத்துக்கள் அரைமாத்திரை யொலியோடுகூடி யிருப்பினும் தாமேயொலிக்காத வாறுபோல, சேதனுசேதனமாகிய பிரபஞ்சத்திற்கு முன்றேயே ஞானமுங்கிரியையு மிருப்பினும் தானேயியங்கா. ஒருமாத்திரையோடுங் கூடிய அகர முபகரிப்ப மெய்கள் ஒலிப்ப போல, சேதனப்பிரபஞ்சம் அறிவித்தாலறியும், அசேதனப்பிரபஞ்சம் அசைவித்தாலசையும். ஒற்றொலிபோன்ற சீவன் அறியுந்தன்மையுடையதும், உயிரொலிபோன்ற சிவம் அதற்கறிவிப்பதுமாம். ஒலிக்குமெழுத்தினையும் ஒலிப்பிக்கு மெழுத்தினையு மோரினமென்ற லடாதுபோல, சிவனும் சீவனுமொன்ருகா. மெய்யெழுத்து அரைமாத்திரையும், உயிரெழுத்து ஒருமாத்திரையுங் கொண்டு முறையே யொலித்தும், ஒலிப்பித்தும் நடைபெறுங்கா லிரண்டுங் கூடியதுகொண்டு ஒன்றரை மாத்திரையாகாமலொருமாத்திரையேயாகுந் தன்மையினைப்போல, சிவ சீவர்கள் கூடியிருக்குமுறைமையு மிவ்வாறேகொள்ளத்தக்கது. ஆகலினன்றே சிவசீவர்களைவேதம் இரண்டென்னுது ஏகமென்றும், தனித்தனிப்பிரித் தரியக்கூடாமையின் அத்துவிதமென்றும், அறியுஞ்சித்தும் அறிவிக்குஞ்சித்து மாயிருக்குந்தன்மையில் துவிதமென்றுங்கூறியது. ஆகலின் 'அகரவுயி ரெழுத்தனைத்துமாகி வேருயமர்ந்ததென' என்ருர். திருக்குறள். "அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு" எனவும், திருவருட்பயன்; "அகரவுயிர்போ லறிவாகி யெங்கு, நிகரி லிறைநிற்கு நிறைந்து" எனவும், சிவசிவவெண்பா: 'விற்பிரம்பா லுற்றவடு மேவவுல கெங்குநிறை, சிற்பரனே தெய்வஞ் சிவசிவா- சொற்சிறந்த, அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு" எனவும், முதுமொழிவெண்பா: "சீர்கொளிறை யொன்றுண்டத் தெய்வநீ யென்றெப்பாற், சோர்விலடை யாற்றெளிந்தோஞ் சோமேசா-வோரின், அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு" எனவும் வருவனவற்ருற் காண்க.

உடலும் உயிரும்போலவும், பாலுநீரும்போலவும், பரிதியு மதியும்போலவும் உலகத்தோடு வேற்றுமையின்றிக் கலப்பாலொன்ருய் நிற்றலின் 'எல்லாமாகி' எனவும், உயிரும், பாலும், பரிதியு மொன்ருகாது பொருட்டன்மையால் வேருய்நிற்றலின் 'அல்லதாகி' எனவும் கூறினர். தேவாரம்: "பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதிபா, ரெற்றுநீர் தீக்காலுமேலை விண்ணிய மானனேடு, மற்றுமாயதோர் பல்லுயிராய் மாலயனுமறைவன், முற்றுமாகி வேறுமானன் மேயது முதுகுன்றே" என்றதனுற் காண்க.

பிரபஞ்சத்தோற்றக் கேடுகளிற் றனக்கு விருப்பும் வெறுப்புமில்லையென்பார் 'சங்கற்ப விகற்பங்களெல்லாந் தோயாத அறிவாகி' என்றனர். திருக்குறள். "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க், கியாண்டு

மிடும்பையில" எனவும், சிவாநுபூதிவிளக்கம்: "வெறுப்பு விடுப்பென்று வேறுரைந்தா லெந்தை, யுறுப்பிற் குறையாதோ யுணர்வுடையோர் சொல்லுவரோ" எனவும், "வேண்டலும்வேண்டாமையுமாய் மேவும்வினைப் பயனு, மாண்டகை யோடுற்ற வனுபூதியானதே" எனவும் வருவனவற்றுற் காண்க.

தேவர்கட்குப் பசுத்வம் ஸ்வபாவமும், முதல்வனுக்குப் பசுபதித்வம் ஸ்வபாவமும் உண்மையாகலின் 'பசுபதியானபொருளை' என்றனர். பாசுபதோபநிஷதம்: "ஸ்வதஸ்ஸிவ: பஶுபதிஸ்ஸாக்ஷீ ஸர்வஸ்ய ஸர்வதா ஸர்வேஷாம் ப்ரஹ்மவிஷ்ணுருத்ரேந்த்ராணாம் பஶூநாம் நியந்தா" எனவும், ஆதித்தியபுராணம். ப்ரஹ்மவிஷ்ணு ஸுரேந்த்ராத்யா: ஸர்வே பஶவ: ஸ்ம்ருதா: । தேஷாம்பதித்வாத் தேவேஶஶ்ஶிவ: பஶுபதி ஸ்ம்ருத:" எனவும் வருவனவற்றுற் காண்க. (உ௯)

---

## சின்மயானந்தகுரு.

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அங்கைகொடு மலர்தூவி யங்கமது புளகிப்ப
வன்பினு லுருகி விழிநீ
ராருக வாராத முத்தியின தாவேச
வாசைக் கடற்குண் மூழ்கி
சங்கர சுயம்புவே சம்புவே யெனவுமொழி
தழுதழுத் திடவ ணங்குஞ்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
தண்ணருள் கொடுத்தாள் வையோ
துங்கமிகு பக்குவச் சனகன்முதன் முனிவோர்க
டொழுதருகில் வீற்றி ருப்பச்
சொல்லரிய நெறியையொரு சொல்லா லுணர்த்தியே
சொரூபாநுபூதி காட்டிச்
செங்கமல பீடமேற் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணமூர்த்தியே
சின்மயா னந்த குருவே,

(இ-ள்.) அங்கை கொடு-அழகிய கைகளால், மலர்-மலர்களை, தூவி-சொரிந்து, அங்கமது-சரீரமானது, புளகிப்ப-புளகங்கொள்ள, அன்பினால்-அன்பினால், உருகி-மனங்கரைந்து, விழிநீர்-கண்ணீர், ஆருக-ஆறாகிப் பெருக, ஆராத-தெவிட்டாத, முத்தியினது-மோட்சத்தினது, ஆவேச-ஆவேசத்தோடுகூடிய, ஆசை-ஆசையாகிய, கடற்குள்-சமுத்திரத்தில், மூழ்கி-முழுகி, சங்கர-சங்கரனே, சுயம்பு-சுயம்புவாயிருப்பவனே, சம்பு-சம்புவாயிருப்பவனே, எனவும்-என்று, துதித்தும், மொழி-மொழி, தழுதழுத்திட-குழறும்படி, வணங்கும்-தொழுகின்ற, சன்மார்க்கநெறி-நன்னெறி, இலா-இல்லாத, துன்மார்க்கன்-துன்மார்க்கனாகிய, எனையும்-என்னையும், தண்ணருள் கொடுத்து-குளிர்ச்சியாகிய கருணைசெய்து, ஆள்வையோ-ஆண்டருள்வாயோ; துங்கமிகு-பரிசுத்தமிகுந்த, பக்குவம்-பக்குவத்தையுடைய, சனகன்முதல்-சனகன்முதலாகிய. முனியோர்கள்-முனிவர்கள் நால்வரும், தொழுது-வணங்கி, அருகில்-சமீபத்தில், வீற்றிருப்ப-வீற்றிருக்க, சொல்லறிய-சொல்லுதல் அருமையாகிய, நெறியை-ஞானமார்க்கத்தை, ஒருசொல்லால்-ஒருமொழியால், உணர்த்தியே-அறிவுறுத்தி, சொரூபானுபூதி காட்டி-சொரூபானுவத்தைக்காட்டி, செங்கமலபீடமேல்-செவ்விய பத்மாசனத்தின்மீது, கல்லாலடிக்குள்-கல்லாலின்கீழ், வளர்-எழுந்தருளியிருக்கின்ற, சித்தாந்தம்-முடிவு செய்யப்பட்ட, முத்திமுதலே-மோட்சப்ரதமான முதற்பொருளே, சிரகிரி- சிரகிரியின்கண், விளங்கவரும்-ஆன்மாக்கள் பிரகாசிக்க எழுந்தருளிய, தக்ஷிணாமூர்த்தியே-தக்ஷிணாமூர்த்தியே, சின்மயானந்த-ஞானானந்தங்களைக்கொடுக்கின்ற, குருவே-சதாசாரியனே, என்க.

(வி - ரை.) மலர்தூவப்பெறும் அருமையைப்பெற்றமையால் 'அங்கை'என விசேடித்தார். சிவபூசையில் மலர்கொண்டருச்சித்தல் இன்றியமையாத கடமையாகலின் 'அங்கைகொடு மலர்தூவி' என்றனர். திருவாசகம் "ஏய்ந்த மாமல ரிட்டுமுட் டாததோ ரியல்பொடும் வணங்காதே, சாந்த மார்முலைத் தையனல் லாரொடுந் தலைதடு மாருகிப், போந்து யான்றுயர் புகாவண மருள்செய்து பொற்கழ லிணைகாட்டி, வேந்த னாய்வெளி யேயென் முன்னின்றதோ ரற்புதம் விளம்பேனே" எனவும், தேவாரம். "பூக்கைகொண்டரன் பொன்னடி போற்றிலார், நாக்கைக் கொண்டரனுமநவில்கிலார், ஆக்கைக் கேயிரை தேடிய லமந்து, காக்கைக்கே யிரையாகிக் கழிவரே" எனவும், "மலர்பரித் திட்டுண்ணாரூரு மூரல்ல அவையெல்லா மடவி காடே" எனவும், பிரபுலிங்கலீலை: "பிறவு மானிடப்பிறப்பு வாய்ந்தால், லேடவிழ் மலரிஞ விரையைப் பூசியார், பாடமை நாவினலாம் பாழுக் கின்றப்பவர், மூடரை யெண்ணுங்கான். முந்தி யிற்பரே" எனவும் வருவனவற்றாற் காண்க.

உடல் புளகித்தலும், கண்ணி லானந்தநீ ரொழுகுதலும், வசனந்தழுதழுதலும் ஆகிய குணங்கள் அன்பரிலக்கணமாகலின் 'அங்கமது புளகிப்ப வன்

பிறுவ்ருசி விழிநீர்; ஆருக...மொழி தழுதழுத்திட வணங்கும்' என்றனர். திருவாசகம்: "மெய்தானரும்பி விதிர்விதிர்த் துன்விரையார்கழற்கென், கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம், பொய்தான் றவிர்த்துன்னைப் போற்றி சயசய போற்றியென்னுங், கைதா னெகிழ விடேனுடை யாயெனைக் கண்டுகொள்ளே." என்றதனுற் காண்க.

சுகத்தைக்கொடுத்தலின் 'சங்கரன் எனவும், தானேயுண்டாதலின் 'சுயம்பு' எனவும், சுகமுண்டாதற் கிடமாயிருத்தலின் 'சம்பு' எனவும் அருமைத் திருநாமங்க ளுண்டாம். சன்மார்க்கநெறியென்பது சித்தாந்தமார்க்கத்தினை. தாபத்தினைத் தவிர்க்கக் குளிர்ச்சியினை விரும்புதல்போல, ஆதியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகமென்னும் தாபத்திரயத்தினை நீக்கிக்கொள்வான் 'தண்ணருள் கொடுத்தாள்வையோ' என்றார்.

'பக்குவ' மென்பது மலபரிபாகத்தினை. இது இருவினையொப்பால் வருவது, இப்பக்குவம் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரமென நான்காம். மந்ததரமாவது இலிங்க மாகேசுர ரிடங்களிலே பத்தியுண்டாக அதனுலே பரமசிவன் சாதகாசாரியனை யதிட்டித்துச் சமயதீட்சைபண்ணி அவன்மனமொழி மெய்களைச் சரியைத் தொழிலிலே புரிவிப்பது. மந்தமாவது-சிவார்ச்சனையால் ஆதரவுண்டாக்கிப் போதகாசிரியனை யதிட்டித்து விசேடசமய முடித்துச் சிவார்ச்சனை கற்பித்து அந்தரியாக வகிரியாகங்களிலே அவன்மனமொழி மெய்களைப் புரிவிப்பது. தீவிரமாவது-யோகவாஞ்சை யுண்டாய் அவ்வாசிரியனுல் அட்டாங்கயோக வுண்மையை யறிவித்துக் காமாதி யறுவிதமும் விடுத்து அதன்சித்தத்தைத் தியானத்திஞலே நிறுத்திச் சமாதியிலே யொடுக்குவது. தீவிரதரமாவது-சிவஞானிகளிடத்திலே பத்தியும் திரிபதார்த்த சொரூபமறியவேண்டுமென்னு மறிவுதோன்றித் தேகாதிப் பிரபஞ்சங்களை நீக்கவேண்டுமென்னும் வைராக்கியமும், முத்தியி லாசையும், பிறவியிலே பயமும், இகலோக பரலோகத்திலே வெறுப்பும், நமக்கிந்தக் கவர்ச்சியைநீக்கிச் சிவரூபத்தை தரிசிப்பிக்கு நாதராவர் யாவரென்று பசித்தவன் அன்னதாதாவைத் தேடுமாறுபோலவும், பிறவிக்குருடனுன அநாதன் கோடைகாலத்தின் மத்தியானத்திலே நீர் தேடித்திரியுமாறு போலவும் ஞானசாரியனைத் தேடி மிகவும் வருந்துகின்ற வாஞ்சையுண்டாவது. இங்குக் குறித்த பக்குவம் தீவிரதரத்தினை.

சனகன்முதன் முனிவோர்களாவார்.புத்திரர்களாகிய சனகன். சனந்தனன், சனுதனன், சனற்குமாரன் என்பவர், இம்முநீந்திரர் நால்வரும் வேதங்களையும், உபநிடதங்களையும் நெடுநாள்வரையும் ஓதி ஞானநிலை பெருதவராகிப் பின் கைலையினையடைந்து சிவபெருமான் சந்நிதானத்திலிருந்து ஆகமாந்தமென்னும் பெயரையுடைய சித்தாந்தத்தை யோதினராகலின், 'முனிவோர்கள் தொழுதருகில் வீற்றிருப்ப' என்றனர். 'சொல்லரிய நெறி' என்றது சுத்தாத்துவிதத்தினை அடைதற்கேதுவாகிய ஞானத்தினை.

ஒருசொல்லென்றதனைச் சிலர் பிரணவமென்றும், சிலர் மகாவர்க்கிய [illegible], சிலர் வேறாக்கூறுவர். எவ்வெவர்கூறும் சொல்லின் பொருளி [illegible] தன் அடக்கிக்கொண்டு விளங்கும் அருமையான துரியமொழி [illegible] னை வைகரிவாக்காலாவது, வரிவடிவாலாவது விளக்குவதன்று. [illegible] சொல்லாமற் சொல்ல நற்சீடன் தெரியாமற்றெரிந்து கொள்ளுந் [illegible] யினையடைய்து [illegible] உண்மையினை மெய்கண்ட பரம்பரை [illegible] வந்த சித்தாந்த ஞானிகள்பாலறிந்து தெளிக. சொரூபானுபூதியி [illegible] காட்டுதலாவது சித்தாந்த அநுபவத்தினைச் சின்முத்திரையாற் [illegible].

[illegible] லடிக்கீழ் வளவென்றது ஸ்ரீதட்சிணாமூர்த்தியாகிய சிவபரஞ்சுட [illegible] எழுந்தருளியது கல்லாலின் கீழ் என்று தெரிவித்ததாயிற்று. கல்லாலின் [illegible] அவ்வருட்பெருந்தகைகல்லையுங்கனியச் [illegible] அன்றியும் கல்துளிர்த்தல்கூடாது அது [illegible] டையாரத்தகைய கரடுபற்றிய வுயிரை [illegible] யாள்வரென்னுங் கருணையை வியந்த [illegible]. ஆணவபாசத்தாற் பீடிக்கப்பட்ட வுயிர்களையவ்வாணவத் [illegible] போக்கித் தமது திருவடியின்பத்தைத் தந்தருளும் அருளாற்றலுடை [illegible] கற்பமேற் பதம் முடிவென்றறிக. கல்துளிர்க்கச்செய்தவர் பாச [illegible] துளிர்க்கச்செய்தல் எளிதிற் கூடுமென்றுணர்க. கன்மலையினைவளைத் [illegible], கன்மலையை யிருக்கையாகக் கொண்டதுவும் இங்ஙனமே பொருள் [illegible] மெனக்கொள்க.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தம் ஸநகாதியோகிகளுக்கு வேதாகமங்களின் றுணி [illegible] யுபதேசித்து வீடுபேற்றைநல்கின சிவனாரது இருபத்தைந்து [illegible]. தென்முகமாக யெழுந்தருளிய கோலமென்பது [illegible] பொருள். இந்த மூர்த்தத்தை "ருத்ரயத்தேதக்ஷிணம் முகம் தேந [illegible]" என்று துதித்து, தேவரீருடைய தக்ஷிணமுகமான து [illegible] ரக்ஷிக்கக்கடவது என்னும் பொருடோன்றச் சுருதிவிதந்தோதியத [illegible]. இந்தக்கோலம் யோககோலம். கந்தபுராணம். "இருவருமுணரா [illegible] ண்ணலேன வெள்ளெயிறியாமை, சிரக்கரையகந்தகோடி திளைத்திடுமாரத் [illegible] சீரொள், கரதலமொன்று சேர்த்தி மோனமுத்திரையைக்காட்டி, யாருசணஞ் செயலொன்றின்றியோகு செய்வாரினூற்றான்" எனவும். [illegible] னையதோர்தன்மைகா [illegible] பிரானுணர்த்தக்கண்டு, சனகனே முத [illegible] லுள்ளோர் தவலரு [illegible], டனுவலின்னவன்றன்றேனும் பான் [illegible] மையைத்தெரிந்திமுக்கட், [illegible] ளாற்றந்தம் புந்தியினொடுக்கம்பெற் [illegible]" எனவும், "தற்பரனிலையாற்றாற் ருபதருணருந்தன்மை, யற்புத [illegible] போத மளித்திடுங் கணமதொன்றின், முற்படு கமலப்புத்தேண்முத [illegible] மரர்க்கெல்லாம் பற்பலயுககள்சென்ற பிறக்கினிப்பகர்வதென் [illegible]" எனவுங் கூறுவனவற்றாற்காண்க. சித்தாந்தமுத்தி என்றது சுத்தாத் [illegible] முத்தியினை. திரிசிரா-சிராமலை. அது பூர்வத்தில் திரிசிரனால் ஆளப் [illegible] ட்டது. செவ்வந்திப்புராணம். "துதித்திடுந்திரிசிராசொல்லின் சொல்

லினன், மதிச்சடைமுடியினன் வரங்கொடுத்தலா, லுதித்திடுமௌகையே யொப்பதாகுமப், பதிப்பெயர் திரிசிராப்பள்ளியானதே'' ''முன்பரக்கருக் கதிபதியிராவணன் முனிவாய்த், தென்புலத்துறை திரிசிரன் றூடணன்க ரனே, யென்பவர்க்கருஞ் சிறப்பளித்திம்மலையிடத்தின், வன்பு பற்றியப கைதழித் திடும்படி வைத்தான்'' '' கரனிருந்துறை கொடுமுடியவன்பெயர் காட்டும், பெருகுதூடண னுறையிடமவனதுபெயராங், திரிசிராவதினுறை தலாற் றிரிசிரா மலையா, மிருவர்பேரொழிந்தொருவன் பேராகவே யிலங் கும்'' என வருவனவற்றாற்காண்க.

ஆக்கையெனு மிடிகரையை மெய்யென்ற பாவிநா
னத்துவித வாஞ்சை யாத
லரியகொம் பிற்றேனை முடவனிச் சித்தபடி
யாகுமறி வவிழ வின்பம்
தாக்கும்வகை யேதிநாட் சரியைகிரி யாயோக
சாதனம் விடுத்த தெல்லாஞ்
சன்மார்க்க மல்லவிவை நிற்கவென் மார்க்கங்கள்
சாராத பேரறிவதாய்
வாக்குமன மணுகாத பூரணப் பொருள்வந்து
வாய்க்கும் படிக்கு பாயம்
வருவித்து வட்டாத பேரின்ப மானசுக
வாரியினை வாய் மடுத்துத்
தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண்
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

(இ-ள்.) ஆக்கையெனும் - சரீரமென்கிற, இடிகரையை - இடிகரை யை, மெய்யென்ற-உண்மையென்று எண்ணியிருக்கிற, பாவிநான்-பாவியா கிய நான், அத்துவிதம்-அத்துவிதப்பொருளின்மேல், வாஞ்சையாதல்-இ சை வைத்தல், அரிய-எட்டுதற்கரிய, கொம்பிற்றேனை-கொம்பிற் கட்டப்ப டிருக்கிற தேனை (யுண்ண),முடவன்-முடவன், இச்சித்தபடி-விரும்பின வி மாகும், (இவ்வாறுனபின்) அறிவு-(எனது) அறிவானது, அவிழ-விகசிக்கு படி, இன்பம்-சுகம், தாக்கும்வகையேது-உண்டாகும்வகையேது,இந்நா இந்நாளளவும், சரியைகிரியாயோகசாதனம்-சரியை கிரியை யோகம் எ பவற்றின் பழக்கத்தை, விடுத்ததெல்லாம்-விட்டுவிட்டதெல்லாம், சன்மா கமல்ல-நல்லநெறியன்று, இவைநிற்க-இவைநிற்கட்டும், என் மார்க்கங்க எத்தன்மையான மார்க்கங்களும், சாராத-அணுகாத, பேரறிவதாய்-பெ

அறிவுருவாகி, வாக்கு-வாக்கும், மனம்-மனமும்,அணுகாத-பொருந்தாத,பூரணப்பொருள்வந்து-பூரணவஸ்துவானது வந்து, வாய்க்கும்படிக்கு-கிடைக்கும்படிக்கும், உபாயம்-உபாயத்தை, வருவித்து-உண்டாக்கி, உவட்டாத-தெவிட்டாத, பேரின்பமான-பேரானந்தமான, சுகவாரியினை-இன்பசாகரத்தை,வாய்மடுத்து-வாய்வைத்து, தேக்கித்திளைக்க-நிறைய அநுபவிக்க, நீமுன்னிற்பது-நீஎனக்குப் பிரத்தியட்சமாவது, என்றுகாண்-எக்காலம், சித்தாந்த முத்திமுதலே என்க.

(வி-ரை.) உடம்பு தத்துவங்களால் ஆக்கப்படுதலின் ஆக்கையெனப்படும். இடிகரையாவது ஆற்றோரத்தின் வெள்ளத்தால் கீழறுக்கப்பட்டு நின்றகரை. பொய்யாகிய உடலை மெய் என்பது மங்கலவழக்கு. அநித்தியமாகலின் இடிகரையென்றனர். பிரமாணங்கள் பதினெந்தாவது பத்தொன்பதாவது பக்கங்களிற்காண்க. ஈண்டு அத்துவிதமென்றது சிவனடியிரண்டறக்கலக்குஞ் சித்தாந்த முத்தியினை. இதனையடைதலருமையினு மருமையென்பார், அத்துவிதவாஞ்சையாதல் அரிய கொம்பிற்றேனை முடவனிச்சித்தபடியாகும் என்றனர். சிவஞானசித்தியார் "புறச்சயநெறி நின்று மகச்சமயம்புக்கும் புகன் மிருதிவழியுழன்று புகலுமாச்சிரம, வறத்துறைகளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள்படித்தும், சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் வேதச்சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத், திறத்தடைவரிதிற் சரியை கிரியா யோகஞ்செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச்சேர்வர்", என்றதனாற்காண்க. அத்துவிதத்தினை யடைந்தாலல்லது இன்பநிலைகிட்டுவது அருமையாதலால், அடையாதபோது இன்ப நிலையினை அடைவது எங்ஙனமென்பார், அறிவவிழவின்பந்தாக்குவலைகயேது என்றனர்.

சரியை கிரியை யோகங்கள் ஞானத்திற்கு இன்றியமையாத சோபானமாயிருத்தலினாலும், அம்மூன்றினும் பழகாதவழி ஞானமடைதல் கூடாதாகையினாலும், சரியை கிரியாயோக சாதனம் விடுத்ததெல்லாம் சன்மார்க்கமல்ல என்றனர். முக்கூற்றுப்புறச்சமயங்களும் தத்துவங்களுக்குட்பட்டனவாகலின் தத்துவாதீதன் சமயங்களிற்கெட்டாதவனாகிச் சமயாதீதனாக விளங்குவனாகலின், சன்மார்க்கங்கள் சாராதபேரறிவதாய் என்றனர். வாக்கும் மனமும் சூக்குமையாதிகளையும் தத்துவங்களையும் முறையேகொண்டு பிறக்கின்றமையால்,வாக்கு மனமணுகாத பூரணப்பொருள் என்றனர்,முன்னிற்பதென்றுகாண் என்றதனால், சகலனாகிய அடியேனுக்குப் படர்க்கையில் ஆசாரியமூர்த்தமா யெழுந்தருளிவந்து செய்யவேண்டிய அனைத்தையுஞ்செய்து முடித்தனை, இனிப்பிரளயாகலருக்கு அனுக்கிரகிப்பதுபோல மான்மழு சதுர்புஜகாளகண்ட திரிநேத்திரனாய் அம்மையிடத்தனாய் இடபாரூடனாய் முன்வந்தருளுவது எக்காலம்? அதற்குரிய பக்குவத்தினையடியேன் வாய்ந்திலனோ எனக்குறிப்பித்துக் கொண்டபடியாம். (உஎ)

ஔவிய மிருக்கநா னென்கிற வாணவ
மடைந் திட்டிருக்க லோப
மருளின்மை கூடக் கலந்துள் ளிருக்கமே
லாசா பிசாச முதலாம்
வெவ்விய குணம்பல விருக்கவென் னறிவூடு
மெய்யனீ வீற்றிருக்க
விதியில்லை யென்னிலோ பூரண னெனும்பெயர்
விரிக்கினுரை வேறுமுள்தோ
கவ்வுமல மாகின்ற நாகபா சத்தினுற்
கட்டுண்ட வுயிர்கண் மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே
கதியான பூமி நடுவுட்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுண மேருவே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

(இ-ள்.) ஔவியம்-பொறாமையானது, இருக்க-இருக்கவும், நான் என்கின்றஆணவம்-நான் என்கின்ற ஆணவமானது, அடைந்திட்டிருக்க-சேர்ந்திருக்கவும், லோபம்-லோபகுணமும், அருளின்மை-அருளில்லாமையும், கலந்துஉள்ளிருக்க-கலந்துஉள்ளேயிருக்கவும், மேல்-பின்னும், ஆசா பிசாசமுதலாம்-ஆசையென்னும் பேய்முதலிய, வெவ்வியகுணம்-கொடிய குணங்கள், பலஇருக்க - அனேகம் தங்கியிருக்கின்ற, என் அறிவூடு-என் னறிவிடத்தில், மெய்யன்-மெய்யனாகிய, நீ வீற்றிருக்க-தேவரீர் எழுந்தருளியிருக்க, விதியில்லையென்னில்-விதியில்லையென்று சொல்வாயாயின், பூரணன் எனும்பெயர்-பூரணன் என்கிற (உன்) திருநாமத்தை, விரிக்கில்-விரித்தால், உரை - அதின்பொருளானது, வேறும்உளதோ-வேறாயும் இருக்குமோ, கவ்வும்-பற்றுகின்ற, மலம்ஆகின்ற-ஆணவமாகிய, நாகபாசத்தினுல்-நாக பாசத்தால், கட்டுஉண்ட-பிணிப்புண்ட, உயிர்கள்-உயிர்களுடைய மூர்ச்சை-மூர்ச்சித்துக்கிடக்கின்றநிலை, கடிதுஅகல-விரைவாக நீங்கும்படி வலியவரும்-பிரார்த்தியாமலேவரும், ஞானசஞ்சீவியே-ஞானசஞ்சீவினியே, கதிஆன-மோட்சமென்கிற, பூமிநடுஉள்-நிலத்தினிடையில், செவ்விதின்-செவ்வையாக, வளர்ந்துஓங்கு-வளர்ந்தியர்ந்த, திவ்யம்-தெய்விகமான குணமேருவே-குணமலையே, சித்தாந்தமுத்திமுதலே என்க,

(விரை.) வினா. இருளுமொளியும் ஓரிடத்தில் நில்லாததுபோல் ஔவியமுதலான தீக்குணத்தொகுதியோடு கூடிய உள்ளத்தில் மெய்யனாகிய சிவமிருப்பதெங்ஙனம்? வினா வெண்பா. "இருளுமொளியு நிறையிருளுமோ ரிடத்துக், கூடவரிது கொடுவினையேன்-பாடிதன்று, மென்றுவார்சோலை யுயர்மருதச் சம்பந்தா, நின்றவா றெவ்வாறு நீ." என்றதனாற்காண்க.

விடை. உள்ளத்தைவிட்டு நீங்காமல் நிற்கிற முறைமையநாதியே தொடங்கி உண்டாயிருக்கும். சிவஞானபோதம். "மெய்ஞ்ஞானந்தன்னில் விளையாத சத்தாக, லஞ்ஞானமுள்ள மணைதல்காண்-மெய்ஞ்ஞானந், தானேயுளதன்றே தண்கடலி ருப்புப்போற், றானேயுளமுளவாய்த்தான்." என்றதனாற்காண்க.

வினா. அங்ஙனமாயின் அறியாமை வருவானேன்?

விடை. ஆன்மாவினோடு மநாதியே கூடிவரப்பட்ட வாணவமலம் விட்டு நீங்காதபடியினாலறியாமை யுண்டானது.

வினா. அங்ஙனமாயின் ஆன்மாவினைவிட்டு முதல்வன் நீக்கமாகவொதுங்கி நின்றருளுமோ?

விடை. ஆன்மாவினுடன் கூடியே நின்று அருளும்.

வினா. அஞ்ஞானத்துடன் கூடியிருக்கப்பட்ட ஆன்மாவினுடன் முதல்வன் கூடியிருக்குமாகில் பொய்யென்கிற அஞ்ஞானத்தைச் சேதிக்கிறவனென்று முதல்வனைச் சொல்லவேண்டுவதில்லையே? அன்றியும் அநாதி சுத்தனாயிருக்கிறவனென்றும், நின்மலனென்றும், எல்லாவற்றிற்கு மேலான ஆதியந்தமில்லாத பேராளியாயிருக்கப்பட்ட முதல்வனென்றும் சொல்லப்படாது.

விடை. அங்ஙனமன்று ஆன்மாவினுடன் கூடிநிற்பதில்லை. அறிவிற்கறிவாக வேறுநின்றே யறிவித்துநிற்பன். சிவஞானபோதம். "மன்று சிவன் சந்நிதியின் மற்றுலகம் சேட்டித்த, தென்னுமறையி னியன்மறந், தாய்-சொன்னசிவன், கண்ணாவுளம் வினையாற் கண்டறிந்து நிற்குங்கா, ணெண்ணான் சிவனசத்தையின்று." என்றதனாற்காண்க.

வினா. அப்போது முதல்வனுக்குப் பூரணனெனும் பெயரில்லையாய் ஆன்மாவினுக்குச் சாயுச்சியமென்கிற பேறுமில்லையாம். தேவாரம். "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமான னாயெறியுங் காற்றுமாகி, யருநிலைய திங்களாய் ஞாயிறாகி யாகாயமா யட்டமூர்த்தியாகி" யென்னுந் திருத்தாண்டகத்தின்படி பூரண நிலையாகிய திருக்கூத்தும் முதல்வனுக்கு இல்லையாகவேண்டும்.

விடை. பரிபூரணத்திற்குக் குறைவில்லை. முதல்வன் மலபரிபாகம் வாராத ஆன்மாக்களிடத்துப் பசுமரத்தில் தீப்போலப் பிரகாசமில்லாமலிருக்கும். மலபரிபாகம்வந்த ஆன்மாக்களிடத்து உலர்ந்த மரத்தில் தீப்போ

லப் பிரகாசித்து மலநாசஞ்செய்து ஆன்மப்பிரகாசத்தை யுண்டாக்கி காக்குமென் வறிக. சிவதநமோத்தரம். "பரமசிவன் பராசத்தி பல்லுயிர்க் கும் பயின்றிருக்க, விரவுவ தென்னிரு ளெனிற்கேள் வெய்யவழற்பசு மரத்தின், விரவியதே பசுமரமும் வெந்தவல வெந்துவிழும், பருவமுறக் காணமுறப் பதியுமுறப் பழுதறவே." என்றதனாற் காண்க.

இதுகாறும் வினு விடைகளாற் கூறிய நுட்பங்களனைத்தும், 'ஒளவியமிருக்க' என்றது முதல் 'வேறுமுளதோ' என்ற வரையில் உள்ளுறையாக அடங்கியிருத்தலை யூகித்தறிக.

ஆன்மாக்கள் ஆணவமலத்தினுல் அனுதியே கட்டுண்டிருத்தலால் கவ்வு மலமாகின்ற நாகபாசத்தினுற் கட்டுண்ட உயிர்கள் என்றனர். சிவ ஞானசித்தியார். "அறிவில னமூர்த்தனித்த னராகாதி குணங்களோடுஞ் செறிவிலன் கலாதியோடுஞ் சேர்விலன் செயல்களில்லான், குறியிலன் கர்த்தாவல்லன் போகத்துக் கொள்கையில்லான், பிறிவிலன் மலத்திறுேடு வியாபிகேவலத்திலான்மா." என்றதனாற் காண்க. ஆணவமலத்தினை நாகபாசமென உருவகப்படுத்தினதற்கேற்ப முதல்வனை ஞானசஞ்சீவினி என்றனர். இதனுல் முதல்வன்றனருளினுல் ஆணமல மடங்குமென்பதுண்மை யெனலாயிற்று. சலித்தலின்மையின் குணமே என்ருர். "குணமென்னுங் குன்று" என்ருர் செந்நாப்போதாரும். (உ அ

ஐவகையெ னும்பூத மாதியை வகுத்ததனு
ளசரசர பேத மான
யாவையு வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதி நூலையும் வகுத்துச்
சைவமுத லாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்த மோன
சமரசம் வகுத்தநீ யுன்னைநா னணுகவுந்
தண்ணருள் வகுக்க விலையோ
பொய்வளரு நெஞ்சினர்கள் காணுத காட்சியே
பொய்யிலா மெய்ய ரறிவிற்
பேரகாதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்றபொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணுமூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

(இ-ள்.) ஐவகைபெனும்-ஐவகையென்று சொல்லப்படுகிற, பூதம் ஆதியை-பூதங்கள் முதலான பிரபஞ்சத்தை, வகுத்து-படைத்து, அதனுள் அதனிடத்தில், அசரம் சரம் பேதமான-அசரம் சரம் என்று வேறுபட்டிருக்கின்ற, யாவையும்-உயிர்களெல்லாவற்றையும், வகுத்து-படைத்து, நல்லறிவையும், வகுத்து-(அவைகளுக்கு) நல் உணர்வையும் படைத்து, மறை ஆதி நூலையும்-வேதமுதலான நூல்களையும், வகுத்து-படைத்து, சைவமுதலாம்-சைவமுதலாகிய, அளவில் சமயமும் வகுத்து-அளவில்லாத சமயங்களையும் படைத்து, மேல்-அதற்குமேல், சமயங்கடந்த-சமயாதீதமான, மோன சமரசம் வகுத்தநீ-மோனமாகிய சமரசநிலையைப்படைத்தநீ,உன்னை நான் அணுகவும்-உன்னை யான் அடையவும், தண் அருள் வகுக்கஇலையோ-குளிர்ந்த கிருபையைப் படைக்கவில்லையோ, பொய் வளரும்-பொய்யானது விருத்தியடைகின்ற, நெஞ்சினர்கள்-மனத்தையுடையவர்களாகிய அஞ்ஞானிகள், காணாத காட்சியே-காணக்கூடாத காட்சியே, பொய்யில்லா-பொய் யில்லாத, மெய்யர் அறிவில்-மெய்யரது அறிவினிடத்து, போதபரிபூரண-ஞானபரிபூரண, அகண்டித ஆகாரமாய்-அகண்டிதரூபமாகி, போக்குவரவு-போக்குவரவுகள், அற்ற-இல்லாதிருக்கின்ற, பொருளே-வஸ்துவே, தெய்வமறை முடிவு ஆன்-தெய்வீகமான வேதத்தின் முடிவாகிய, பிரணவசொரூபியே-ஓங்காரசொரூபனே, சித்தாந்தமுத்திமுதலே. என்க.

(வி-ரை.) பஞ்சபூதமாதியாலமைந்த பிரபஞ்சம் நிமித்தகாரணனாகிய முதல்வனால் உபாதானகாரணமாகிய மாயையினின்றும் காரியப்படுகையால், ஐவகையெனும் பூதமாமாதியை வகுத்து என்றனர். சிவஞானசித்தியார்." காரியகாரணங்கண் முதறுணை நிமித்தங்கண்டாம், பாரின்மண்டிரிகை பண்ணுமவன் முதறுணை நிமித்தந், தேரின்மண் மாயையாகத் திரிகை தன் சத்தியாக, வாரியன் குலாலனுய்நின் றாக்குவ னகிலமெல்லாம்" என்றதனுற் காண்க. அசைவோடுகூடிய சேதனப்பிரபஞ்சம் முதல்வன் அசைவித்தாலசையுமாகலினாலும், அறிவோடுகூடிய சேதனப்பிரபஞ்சம் முதல்வன் அறிவித்தா லறியுமாகலினாலும், அசர சரபேதமான யாவையும் வகுத்து என்றனர். முதல்வன் தனது சமவாய திரோதான சத்தியினைக்கொண்டு ஆன்மாக்களைப் பக்குவப்படுத்தலின், நல்லறிவையும் வகுத்து என்றனர், பரமகாரணராய முதல்வன் கிருபையினா லனந்தேஸ்வர ஸ்ரீகண்டேஸ்வராதி மூர்த்திகளைத் திருமேனியாகக்கொண்டு பிரமாதிதேவர்கட்கும்,சனற்குமாரராதி தேவருஷிகளுக்கும், வசிஷ்டாதி மநுஷ்ய ருஷிகளுக்கும், சேஷன் முதலிய சர்ப்ப ராஜர்கட்கும் வேதாகமங்களை யுபதேசியாதிருக்கிற் சொல்லுவாரு மறிவாருமின்றிக் குருசிஷ்ய சம்பிரதாயப் பிரவிர்த்தியுமின்றித் தருமார்த்தகாம மோக்ஷமென்னுஞ் சதுர்வித புருஷார்த்தங்களையுமடைவாரற்றுப்போமாகையால் மறையாதி நூலையும் வகுத்து என்றனர். இதனால் வேதம் ஒருவராற் கூறப்பட்டதன்று, அநாதிநித்தியமென்னும்பரட்

டபிரபாகர மதங்களை மறுத்தவாறாயிற்று. ஆதியென்றதனால் ஆகமத்தி னையுங்கொள்க. இதனை சம்ஹிதாக்கிரமம் கௌகக்கிரமமென விருவிதமாக வுண்டாக்க அது பாசபந்த முதலிய அறுவிதமாயும், பஞ்சவிதமாயும் ஒரு வர் உபதேசவழியாக வருவது.

சம்ஹிதாக்கிரமமாவது-சதாசிவதேவநாயனார் காமிக முதலிய சிவபே தம் பத்தினையும் முதற்கண் அனுசதாசிவர்க்கும்,பின்பு அநாதிஸ்வயஞான முதலான பதினெட்டு ருத்திரர்கட்கு மனுக்கிரகஞ்செய்வது,

கௌகக்கிரமமாவது-சிவன் அட்டவித்தியேசுரர்க்கு முதலனுக்கிரகஞ் செய்து, பின்பு கீழுள்ள உருத்திரர்களுக்குரைப்பது.

சம்பந்தமாறுவன – பாசசம்பந்தமாவது-சிவனுக்கும் அனுசதாசிவர்க்கும்.

மகாசம்பந்தம்-அனந்த தேவர்க்கும் சீகண்டர்க்கும்.
அந்தராளம்-சீகண்டர்க்கும் தேவர்க்கும்.
திவ்வியம்-தேவர்களுக்கும் ருஷிகளுக்கும்.
திவ்வியாதிவ்வியம்-முனிவர்க்கும் மனிதர்க்கும்.
அதிவ்வியமாவது-குருக்களுக்குஞ் சீஷர்களுக்குமாம்.

இவற்றில் அனாதியிலனு சதாசிவரை நீக்க மற்றவை பஞ்சசபந்தமென ப்படும். மற்றுமிவற்றின்விரிவை வாதுளத்தினும், கிரணத்தினுங்காண்க. **சிவஞானசித்தியார்.** "ஆரணமாகமங்க ளருளினாலுருவுகொண்டு, காரண னருளானுகிற் கதிப்பவரில்லையாகு, நாரணன் முதலாயுள்ள சுரர்நரர் நா கர்க்செல்லாஞ், சீரணிகுருசந்தானச்செய் தியுஞ் சென்றிடாவே" எனவும், **கந்தபுராணம்.** "ஆன தன்னியற்கைகளனைத்தும் கண்ணுறக்காணவனுகம மறையின் வாய்மையான், மேனிகழ்தொகைவகை விரியதாகவே, தான ருள்புரிந்தனன் றலைவிகேட்கவே" எனவும் "வேதமே முதலா யுள்ள வியன்கலையனைத்துந் தொன்று, ளோதிறுனவனை யெங்கட்குரைத் திடவுணர்ந்தாமன்றே, யீதுநீ யவற்றிற் காண்டியாகுமொன்றுகக்கொண் டாய், பேதையோ பெரிதுமென்னப் பிரமகளினையசொற்றான்" என வும் வருவனவற்றாற்காண்க.

ஆன்மாக்களின் பலவகைப்பட்ட கன்மங்களுக்கேற்ப வேதத்தின் கண்ணே பொதுவாக முதல்வன் பல சமயங்களைக் கூறியிருத்தலானுக லின், சைவமுதலா மளவில் சமயமும் வகுத்து என்றனர். அச்சமயங்களனை த்து மெய்யன்றெனக் கண்டு திருவருளே துணையாகக்கொண்டு வேதாந்தத் தினுண்மையினைத் தேர்ந்து, சகல சமயங்களையுஞ் சோபானமாகக்கொண்டு அதீதமாக விளங்கும் சமயாதீதமாகிய சித்தாந்த சைவநெறியை யனுபவிப் பார்க்கு யாவுஞ் சமரசமாகலின், சமயங்கடந்த மோன சமரசம் வகுத்து என்றனர். இத்தகைய அரிய காரியங்களையெல்லாம் வகுத்த நீ அடியேன் தேவரீருடன் இரண்டறக் கலப்பதற்கேதுவாகிய திருவருள் என்னிடத் திற் பதிதற்குக் கருணைவைத்தாயில்லையே யென்பார், உன்னை நானாக வுந் தண்ணருள் வகுக்கவில்லையோ என்றனர்.

தன்னை விரும்பாதவர்கட்குப்பொய்யருய் விளங்குவனென்பார், பொய்யரு நெஞ்சினர்கள் காணுத காட்சியே என்றும், தன்னை விரும்பினவர்க்கு மெய்யருய் விளங்குவனென்பார், பொய்யிலா மெய்ய ரறிவிற் போதபூரண அகண்டிதாகாரமாய்ப் போக்குவரவற்றபொருளே என்றுங்கூறினார். தேவாரம். "மெய்யானைத்தன்பக்கல் விரும்புவார்க்கு விரும்பாதவருக்கு அரியவர்கட்கென்றும், பொய்யானைப்புறங்காட்டிலாடலானைப் பொன்பொதிந்த சடையானைப் பொடிகொள்பூதிப், பையானைப்பையரவமசைத்தான் தன்னைப் பரந்தானைப் பவளமால் வரைபோன்மேனிச், செய்யானைத்திருநாகேச்சுரத்துளானைச் சேராதார் நன்னெறிகட்சேராதாரே." என்றதனுற் காண்க.

ஏகாக்ஷரமாகிய ஓம் என்னுமந்திரத்திலே சர்வ வியாபகராகிய சிவபெருமானுளர் ஆகலின், தெய்வமறை முடிவானசொரூபியே என்றனர். சிவருமோத்தரம். "[illegible]" எனவும், திருசிம்மதாபினி. "[illegible]" எனவும், மாண்டூக்கியம். "[illegible]" எனவுட், வருவனவற்ருற்காண்க. (உகூ)

ஐந்துவகை யாகின்ற பூதபே தத்திஞ
லாகின்ற வாக்கை நீர்மே
லமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்னநா
னறியாத கால மெல்லாம்
புந்திமகி ழுறவுண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி யென்றி ருந்தேன்
பூராய மாகநின தருள்வந் துணர்த்தவிவை
போனவழி தெரிய வில்லை
எந்தநிலை பேசினு மிணங்கவிலை யல்லா
லிறப்பொடு பிறப்பை யுள்ளே
எண்ணிஞ னெஞ்சது பகீரெனுந் துயிலுரு
திருவிழியு மிரவு பகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கமிவை யென்கொலோ
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

(இ-ள்.) ஐந்துவகையாகின்ற - ஐந்துவகையாயிருக்கின்ற, பூதபேதத்திஞல் - பூதங்களின் வேறுபாட்டால், ஆகின்ற ஆக்கை - உண்டாக்கப்படுகின்ற சரீரமானது, நீர்மேல்அமர்கின்ற - நீரின்மேலமைந்த, குமிழின - மொச

குள்போல, நிற்கின்றது என-நிற்கின்றதென்று, நான் அறியாதகாலமெ
லாம்-நான் உணராதகாலமுழுதும், புந்திமகிழ்உற-மனமகிழ்ச்சி மிகும்படி
உண்டு உடுத்து இன்பம் ஆவதே-உண்டு உடுத்து இன்பம் அனுபவிப்பதே
போந்தநெறி என்று இருந்தேன்-கைவந்த நல்லமார்க்கமென்று நினைந்திரு
ந்தேன், நினது அருள்வந்து-உனது திருவருள்வந்து, பூராயமாக உண
ர்த்த-ஆத்யந்தமாக அறிவிக்க, இவை-இவைகள், போனவழிதெரியஇல்லை
போனவழிதோற்றவில்லை, எந்தநிலை பேசினும்-எந்தநிலையை எடுத்துப்
பேசினாலும், இணங்கஇல்லை-சம்மதிக்கவில்லை, அல்லால்-அல்லாமலும், இறப
பொடுபிறப்பை-மரணத்தோடு ஜனனத்தையும், உள்ளே எண்ணினால்-மனத்
தில் நினைத்தால், நெஞ்சது-மனமானது, பகீர் என்னும்-பகீரென்றது
இருவிழியும்-இரண்டுகண்களும். துயில் உறாது-நித்திரைசெய்யாது, அர
சம்-சரீரமானது, இரவுபகலாய்-இரவுபகலாக, செந்தழலில்-செந்தீயில்
ட்ட, மெழுகு ஆனது-மெழுகாயுருகுகின்றது, இவை எல்-இத்தன்மைகள்
என்னிடத்துண்டாவதற்குக்காரணம்யாது, சித்தாந்த முத்திமுதலே. என்க

(வி-ரை.) ஐந்துவகையாகின்ற பூதமாவன: பிருதிவி, அப்பு, தேயு, வாயு
ஆகாயமுதலியன. பேதத்தினால் என்றதனால்-தன்மாத்திரைகளாகிய சத்தம்
பரிசம், ரூபம், ரசம், கந்தம், ஐந்தினையும்; அந்தக்கரணங்களாகிய மனம்
புத்தி, சித்தம், அகங்காரம், நான்கினையும்; கன்மேந்திரியங்களாகிய வாக்கு
பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் ஐந்தினையும்; ஞானேந்திரியங்களாகிய
மெய், வாய், கண், மூக்கு, செவி ஐந்தினையுங்கொள்ளல்வேண்டும். ஆகிய இவ்
விருபத்து நான்கு தத்துவங்களும் உடலினுக்குஇன்றியமையாதனவாகலின்
ஐந்துவகையாகின்ற பூதபேதத்தினாலாகின்ற வாக்கையென்றனர். இவ்விரு
பத்து நான்கிற்கும் ஆன்மதத்துவம் என்றுபெயர். பிரசினோபநிஷதம் "ப்ரு
திவீ ச ப்ருதிவீமாத்ரா சாபஶ்சாபோமாத்ரா ச தேஜஶ்ச தே
ஜோமாத்ரா ச வாயுஶ்ச வாயுமாத்ரா சாகாஶஶ்சாகாஶமாத்ரா ச
சக்ஷுஶ்ச த்ரஷ்டவ்யம் ச ஶ்ரோத்ரம் ச ஶ்ரோதவ்யம் ச க்ராணம் ச க்ராதவ்யம் ச ரஸ
ஶ்ச ரஸயிதவ்யம் ச த்வக்ச ஸ்பர்ஶயிதவ்யம் ச வாக்ச வக்தவ்யம் ச ஹஸ்தௌ
சாதாதவ்யம் சோபஸ்தஶ்சானந்தயிதவ்யம் ச பாயுஶ்ச விஸர்ஜயிதவ்யம் ச பாதௌ ச கந்தவ்யம் ச மனஶ்ச மந்தவ்யம் ச புத்திஶ்ச போத்தவ்யம் சாஹங்
காரஶ்சாஹங்கர்தவ்யம் ச சித்தம் ச சேதயிதவ்யம் ச தேஜஶ்ச
வித்யோதயிதவ்யம் ச ப்ராணஶ்ச விதாரயிதவ்யம் ச" என்றதனாற்
காண்க.

ஆன்மதத்துவங்களாலாக்கப்பட்ட ஆக்கை, நிலையற்றதென்பார், ஆக்கை
நீர்மேலமர்கின்ற குமிழ் என்றார். சித்தாந்தசரிசனம். "நீர்க்குமிழி மின்னற்
றேமுண்டு நிலையில்லை, யாக்கைக்கென்றெண்ணியறிந்து." எனவும், நீரிற்குமி
ழியிளமைநிறைசெல்வம், நீரிற்சுருட்டுநெடுந்திரைகள்-நீரில், லெழுத்தாகும்

ளைக்கி, யொன்று மொருவன்றனைப்போலக் கருப்பாசயப்பை யுறுத்து லான், மலந்தவு தகி மறிந்தாழ்வான் வருத்தமென்னவருந்தியிடு, நின்ற கரு பாசயவுதகவெள்ளங்கொள்ள நிறையமுந்தே" எனவும், "அங்கிய தனிற் ற கியிடு மயோமயத்த கும்பத்திற், றங்குமொருவன் றபனம்போற் றப மெய்துங் காயுதாத், தங்கிசுடவே யழலனைய சூசியுந்தளைவாசத்தைப், பங்கித் டவே படுமிடரிலிரு நாற்குணிதம்பட்டழுங்கும்" எனவும், "கருப்பாசய கட்டறாதா மதனி னதிகங்கடுங்காலு, முரிக்க மிகவு மோகமுற முன்னை ணர்வுமங்கிலையே, மரிக்கவாலைக் கருப்பெனவே யோனிவழியின் வலிதெ லைய, நெருக்கப்பட்டு நிலமிசையே தோன்று முயிரு மிலையுடனே" என வும், 'தனத்தினை மனைதனைத் தானியந்தனை, நினைத்தினி யெவரனுபவி பவர் நீங்குநா, ளெனக்கிவை யன்னிய மாகுமேயெனு, மனத்துயர் மலி வே மாயுமாவியே" எனவும், மெய்ஞ்ஞான விளக்கம். "வந்திடு மரண துன்ப மறித்துரை செய்யப்போமோ, வுந்திமேலையும் பித்து முணர்வொ பொறிகலங்கி, நந்திடா விருளேமூடி நாவுலர்ந்தலமந் தென்னே, யிந்தம விறப்பிற்றுன்பம் பவத்துன்பத் தெண்மடங்கே" எனவும், **திருக்கடை காப்பு.** "புலனைந்தும் பொறி கலங்கி நெறிமயங்கி யறிவழிந் திட்டை மேலுந்தி, யலமந்த போதாக வஞ்சேலென் றருள் செய்வா னமருங்கோ யில், கலம்வந்து மடவார்க ளடமாட முழவதிர மழையென் றஞ்சிச், சி மந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்குந் திருவையாறே" எனவும் வரு வனவற்றுற் காண்க. (௫௦)

காரிட்ட வாணவக் கருவறையி லறிவற்ற
கண்ணிலாக் குழவி யைப்போற்
கட்டுண் டிருந்தவெமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட் டதற்கி சைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவினை யமுத மூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவினை யாட்ட மைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பி னமனைவிட்
டிடருற வுருக்கி யிடர்தீர்த்
திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினி
லிசைந்து துயில் கொண்மி னென்று
சீரிட்ட வுலகன்னை வடிவான வெந்தையே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

(அ-ள்.) கார் இட்ட-கருமையாகிய; ஆணவக்கரு அறையில் - ஆண வத்தால் உளதாகின்ற கருவாகிய சிறைவீட்டில், அறிவு அற்ற-உணர்ச்சியில்

ாத, கண் இல்லா - கண்ணற்ற, குழவியைப்போல் - குழந்தையைப் பால, கட்டுண்டு இருந்த எம்மை - கட்டுப்பட்டிருந்த எங்களை, வெளி ல்விட்டு-வெளியில்வரச்செய்து, அல்லல் ஆம் காப்புஇட்டு-துன்பமாகிய ாவலை அமைத்து, அதற்கு இசைந்தபேர்இட்டு-அதற்குப்பொருத்தமான பயரமைத்து, மெய்யென்றுபேசு-உண்மையென்று பேசப்படுகின்ற,பாழ் பாய் உடல்-பாழாகிய நிலையற்ற சரீரமானது, பெலக்க-வலிமைபெறும் டி, விளை அமுதம் ஊட்டி-விளைகின்ற (பலவகை) உணவுகளைஉண்பித்து, பரிய புவனத்தினிடை-பெரிதாகிய உலகத்தின்கண், போக்குவரவு உறு ன்ற - இறப்புப் பிறப்புகளாகப் பொருந்துகின்ற, பெரியவிளையாட்டு மைத்திட்டு - பெரிதாகியலீலையை அமைத்துவைத்து, ஏர் இட்ட-அழகு பாருந்திய, தன்மொழி-தன்சொல்லாகிய, சுருதி-வேதமார்க்கத்தில், தப் ல்-தவறினால், (அப்படிதவறினவுயிர்களை) நமனைவிட்டு-யமனை அனுப்பி, டர் உற உருக்கி-துன்பப்படும்படி தண்டித்து, இடர்தீர்த்து-அத்துன்பத் தயும்நீக்கி,இரவுபகல் இல்லாத-இராப்பகல்கள் அற்ற, பேரின்பவீட்டி ில் இசைந்து-பேரானந்தவீட்டில் பொருந்தி, துயில்கொண்மின் என்று- ங்குங்கள் என்று, சீரிட்ட-(எங்களுக்கு எல்லாச்சிறப்புகளையும்)-அமை துவைத்த, உலகு அன்னைவடிவு ஆன எந்தையே-உலகமாதாவின் உருவ ான எமது தந்தையே, சித்தாந்த முத்திமுதலே, என்க.

(வி-ரை.) பூதவிருளானது எல்லாப்பதார்த்தங்களையு மறைத்துத் தன் னக்காட்டி நிற்கும். ஆணவமலமானது தன்னையுங்காட்டாது,தனக்குள்ளே ருக்கிற ஆன்மாவையுங் காட்டாது இருக்குமாகலின், காரிட்டவாணவம் ன்றனர். திருவருட்பயன். "ஒருபொருளுங் காட்டா திருளுருவங்காட்டு, ருபொருளுங்காட்டாதிது" என்றும், சிவப்பிரகாசம். "ஏகமாய்த்தங்கால வல்லுயிர்களின்மீறு, மெண்ணரிய சத்தியதாயிருளொளிரவிருண்ட, மோக ாய்ச் செம்பிலுறுகளிம் பேய்ந்துநித்த, மூலமல மலமா யறிவு முழுதி னயு மறைக்கும்" எனவும் வருவனவற்றாற் காண்க.

சகலவுயிர்களையும் ஆணவமலம் பிடித்து மாணிக்கமணியை நஞ்சுவாய் து அடக்கின சர்ப்பம்போலவும், பச்சையாய்முளைத்து விறகாகுமட்டும் க்கினியைத் தெரியாமல் மறைத்து வைத்திருந்த காட்டம்போலவும், ானக்கண்ணை மறைத்து அறிவுஞ்செயலு மிறக்கும்படி செய்யுமாகலின், றிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டிருந்தவெம்மை என்ற ர் போற்றிப்பஃறொடை. "மாமணியை யுள்ளடக்கு மாநாகம் வன்னித த்,தானடக்குங் காட்டத்தகுதியும்போல்-ஞானத்தின், கண்ணைமறைத்த டய தொழிலாணவத்தர், லெண்ணுஞ்செயன்மாண்ட வெவ்வுயிர்க்கும்." ன்றதனாற் காண்க.

மாதாவினிடத் துண்டான சுரோணிதத்திலே பிதாவிடத்துண்டா ய சுக்கிலம்பவளப்பையில் முத்தைவைத்தாற்போலப்படுகிறபோளிற்,சீவனு

னது பிராணவாயு வாகனமாகவும் மனது வழியாகவுஞ் சிவனுடைய க
ளையாலே சென்று, சுக்கில சுரோணிதத்தின் தலையிலே பதிந்து, க
திக்கிடாக மூன்றரைக்கோடி யுரோமத்துவாரமும், எழுபத்திராயிர
யும், வாயுவிற் பிரதானமான தசவாயுவும், நவத்துவாரமும், எண்சாணு
பும், ஏழுதாதுவும், ஆறுதாரமும், ஐந்துபொறியும், நாலுகரணமும், மூ
மண்டலமும், இரண்டு வினையுமெனப் பேர்பெற்று இவற்றை யொன்
னப் போர்த்த புறத்தோலுமாக ரூபிகரித்து, இந்தரூபத்தையுடைய சி
மன்னரசத்திற்குப் பிராரத்தமளவுந் தன்னுடையதேகத்தி லுந்திச்சக்
தின் மேலேகிடந்து ஆறுமாதமுத லுந்தி நாளத்தாலே மாதாவிடத்தி
அன்னரசமுங்கொண்டு, அந்த அன்னரசத்தின் மிகுதியாலே சுழுமுனை
யடைபட்டு இடையும் பிங்கலையுந்திறந்து, பிராணவாயு புகுந்துமேலே
நாசித்துவாரங்களாலே விட்டவெழுத்தாலே நாளொன்றிற் கிருபத்தோ
யிரத்தறுநூறு சுவாச வுச்சாரணந்தோன்றி, முப்பத்திரண்டு நூறுயி
நாற்பதினாயிர முருச்சென்றவாறேயு நரகன்மந்தொலைந்து, மாதாவின்
தண்டான பிராணவாயுவிலே முதல்வனுடைய காருண்யத்தாலே ச
யதிஷ்டித்துக்கொண்டு, இந்தச்சத்திபலத்துடனே வாயுவானது பிரசூ
யைப் பூமியிலே பதிக்கவேண்டிப், 'பிராஜாபத்திய'மென்னும் பேர்பெ
இவனுடைய போதம்போல இவனுடைய தேகமுங் கீழ்நோக்கி வி
டித் தன்னுடைய பலத்தாலே தலைகீழாகத்தள்ளிப் பூமியில் வரச்செ
னுகலின், கட்டுண்டிருந்த வெமைவெளியில்விட்டுஎன்றனர் திருவுந்திப
"மூலையிலிருந்தாரை முற்றத்தேவிட்டவர், சாலப்பெரியரென்றுந் தி
தவத்திற்றலைவரென்றுந்தீபற" என்றதனாற்காண்க.

பாலகுமார விருத்தப்பருவத்துச் சகலாவத்தைப்படுத்தி, பருவத்
கேதுவான கலாதிஞானத்தினைக்கொடுத்துச், செயலற்ற வுயிர்கள் வாழ
கொள்ள வாள்வதற்கேற்ற முப்பத்தாறுவகைக் கருவிகளையுங்கொடுத்
ருக்குயிராயிருந்து காப்பனாகலின் அல்லலாங் காப்பிட்டு என்றனர். இக்
பினை அல்லலென்பதென்னையோவெனின்? இக்காப்பு கன்மத்தினுக்
தக்கபடியமைய ஆகாமியமேறுதற்குக் காரணமாய்ச் சென்மத்தினை
டாக்குமாதலால் என்க. போற்றிப் பஃறொடை. "பாளைப்பசும்பதத்
பாலனுமப்பதத்தின், நாளுக்கு நாட்சகல ஞானத்து-மூள்வித்துக், கெ
டாள வாளக்கருவி கொடுத்தாக்கி நின்று, பண்டாரியான படிபோற்
என்றதனாற்காண்க.

பிறந்த நட்சத்திரத்திற்குரிய பெயர்வைக்கவேண்டு மாகலானும்,
பெயரும் பாசப்பெயர் பசுப்பெயராக வில்லாமல் பதிப்பெயராக இரு
கவேண்டுமாகலினும், அதற்கிசைந்த பேரிட்டு என்றனர். பாசப்பெ
களாவன-உலகத்தி லழிதற்பாலனவாகிய பொருள்களின் பெயர்கள். ப
பெயர்களாவன-பிறத்தலை இறத்தலையுடைய சிறு தெய்வப் பெயர்
பதிப்பெயர்களாவன- பரமேஸ்வரன் பெயர்களும் அவருடைய அடி
பெயர்களுமேயாம், இறைவனிட்ட பெயர் சிவன். அமுதமென்பது

த்திய சாப்பிடத் தகுந்த அனைத்திற்கும் அன்னமென்றே பெயராகும். போக்கு என்பது மரணம். வரவு என்பது பிறப்பு.

வேதாகமங்களிற் கூறிய விதிவிலக்குகளை யறிந்து அவ்வழி நடவாத ர்கள் யமனால் தண்டிக்கப்படுவராகலின், சுருதிமொழிதப்பி னமனை ட்டைடருற்றவுறுக்கி என்றனர் போற்றிப் பஃறொடை. "தான்மாள, ர்திக்கும் அதர் வேகத்துடன்வைத்து, பர்தித்தம் வெங்குருவின்பாற் கா -விற்றைக்கு, மில்லையோபாவி பிறவானை பென்றெடுத்து, நல்லதோ ச்சொனபடிவாசச் - சொல்லியிவர், செய்திக்குத்தக்க செயலுறுத்துவீ ரன்று, வெய்துற்றுரைக்க விடைகொண்டு-மைபருருஞ், செக்கினிடைத் ரித்துச் சிவாபிஷேட்டெரித்துந், தக்க செருப்புத்தூண் டழுவித்து-மிக் ாய்ந்து, காராசங்காய்ச்சிச் செவிமடுத்து நாவரிந்து, மிராவுன்றனைத் ன்னென்றடித்தும்-பேராம, லங்காழ்நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம் வக்கோபமாறுத் வேட்கையரா-யிங்கொருநா, ளெண்ணிமுதற் காணுத ன்னற்கநரகம், பன்னெடுநாட்செல்லும் பணிகொண்டு" என்றதனுற் ணக. இங்ஙனம் தண்டிக்கப்படுதலினால் பாவமனைத்துந் தீரப்பெற்றுச் மடைவராகலின்', இடர்தீர்த்து என்றனர்.

உணர்ந்தகாலத்து மாயையும், ஒடுங்கினகாலத்து ஆணவமுங் கூடா ல், ஞானமு மானந்தமுமே பிரகாசிக்கத்தக்க பரமாகாயத்திலே கூடிப் பாருந்தி நின்றனுபவிக்கச் செய்வனாகலின், இரவுபகலில்லாத பேரின்ப ட்டிலிசைந்து துயில் கொண்மினென்று சீர்ட்ட என்றனர். திருவுந்தி ர். "இரவுபக லில்லா வின்பவெளியூடே விரவி விரவி நின்றுந்தீபற, ரைய விரைய நின்றுந்தீபற" என்றதனுற்காண்க.

ஒருபுத்திரனைத் தனது வயிற்றினின்று வெளிப்படுத்தலும், காப்பிடுத ம், பேரிடுதலும், அமுதூட்டுதலும், விளையாட்டமைத்தலும், உருக்கி டர்தீர்த்தலும், துயில்கொள்ளச் செய்தலுமாகிய தொழில்களைச்செய்யும் லகன்னையைப்போல இறைவனை உருவஞ்செய்தனராகலின்,உலகன்னை டிவான வெந்தையே என்றனர். (௬௧)

கருமருவு குகையனைய காயத்தி னடுவுட்
 களிம்புதோய் செம்பனையயான்
காண்டக விருக்கநீ ஞானவனன் மூட்டியே
 கனிவுபெற வுள்ளுருக்கிப்
பருவமது கண்டுநின் னருளான குளிகைகொடு
 பரிசித்து வேதி செய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
 பக்ஷத்தை யென்சொல் லுவேன்

அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்த
மாதியா மந்த மீதும்
அத்துவித நிலையரா யென்னையாண் டுன்னடிமை
யானவர்க ளறிவி னூடும்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

(இ - ள்.) சருமருவு-கருப்பையிற் பொருந்திய, குகையனைய-கு
கையை யொத்த, காயத்தின் நடு உள்-சரீரத்தி னிடையில், களிம்புதே
களிம்புபற்றிய, செம்பு அனைய-தாமிரத்தை யொத்த, யான் - நான், க
தக இருக்க-காணலாம்படி யிருக்க, நீ ஞான அனல் மூட்டி-நீ ஞானநெ
பினை மூள்வித்து, கனிவுபெற-இளகும்படி, உள் உருக்கி-உள்ளே தா
உருகப்பண்ணி, பருவமது அறிந்து-பக்குவமுணர்ந்து, நின் அருள் ஆ
உன் திருவருள் ஆகிய, குளிகைகொடு பரிசித்து - குளிகையினால் தீண்
வேதி செய்து-வேதித்து, பத்துமாற்றுத் தங்கம் ஆக்கி-பத்துமாற்றுப் ப
பொன்னாகச் செய்து, பணிகொண்ட- (என்னை) அடிமைகொண்ட, பட்
தை-உனது பெருங் கருணையை, என் சொல்லுவேன்-என்ன சொல்வே
அருமைபெறு-அருமையைக் கொண்ட, புகழ்பெற்ற-கீர்த்தியையடை
வேதாந்த சித்தாந்தம்-வேதாந்த சித்தாந்தங்களாகிய, ஆதியாம் அந்
தும்-ஆதியந்தங்களின் மேலும், அத்துவித நிலையராய்-அத்துவித நிலை
யுடையராகி, என்னை ஆண்டு அடியனை-ஆட்கொண்டு,உன் அடிமை ஆன
கள்-உனக்கு அடிமைப்பட்டவர்களுடைய, அறிவின் ஊடும்-அறிவினி
லும்,திருமருவு-அழகு பொருந்திய, கல்லால் அடிக்கீழும்-கல்லாலமரத்தி
அடியிலும், வளர்கின்ற-சிறந்திருக்கிற, சித்தாந்த முத்திமுதலே:-என்க

(வி - ரை) மூசையொன்றில் களிம்புடன் கூடிய செம்பினையி
அனலில் வைத்து அது உருகிவருஞ் சமயத்துப் பரிசன வேதியைக் கூ
டிப் பெரியோர்தங்கமாக்குதல்போல, உடலிலே ஆணவமலத்துடன் கூ
சீவனுக்கு ஞானத்தினைத்தந்து அந்த ஞானத்தால் அச் சீவன் பரிபக்
மடையுந் தருணத்து அருளினைக் கூட்டி யாசாரியர் சீவன் முத்தனா
யாண்டுகொள்வராகலின், கருமருவு குகையனைய..............யென் செ
லுவேன் என்றனர். சிவஞான சித்தியார். "செம்பிரதக் குளிகையினா
களிம்பற்றுப் பொன்னாய்ச் செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தா
சீவ-னம்பனுடன் கூடுமெனிற் பொன்போலல்ல னற்குளிகைபோல வ
னுகு மலம்போக்கி, யம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறக்கு
ளிகைதானும் பொன்னாசாதாகு, மும்பர்பிரா னுற்பத்தியாதிகளுக்கு
னுயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே." என்றதனாற் காண்

பணிகொண்ட என்றதனால், செம்பொன் இரதக்குளிகை தாக்கக், களிம் பற்றுப் பொன்னுமாறுபோல, ஆன்மாவுஞ் சிவஞானத்தினாலே மலம் போய்ச்சிவனையடைந்தவிடத்து இவனு மவனைப்போலப் பஞ்சகிருத்தியங் களையுஞ் செய்தற்குறித்தாவனென்னுஞ் சிவசமவாதியை மறுத்தவாறு யிற்று. என்னை? களிம்பினைப்போக்கினபொன்னானது தான்வேறேயொரு செம்பிற் களிம்பைப்போக்கமாட்டாது; குளிகையே போக்குமிது பொன்னா கவே யிருக்குமாகையினாலும், மலநீங்கியவழியுஞ் சிவானுபவமொன்றற்கே சுதந்திரமாய் உயிர், ஐந்தொழி லெல்லாவற்றிற்குஞ் சுதந்தரனாகிய முதல் வனோடொத்தன்றாதல் செல்லாமையானும் என்க.

வேதாந்தமென்பது-ஆன்மாக்களுக்குப் பொதுவாகக் கூறியுள்ள வேத முடிவு சித்தாந்தமென்பது-இருவினையொப்புமலபரிபாகம்வாய்ந்த சத்திநி பாத வுத்தமர்க்குச் சிறப்பாகக் கூறியுள்ள ஆகமமுடிவு. ஆதியா மந்தமி தம் என்றதனால் நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்த முதலிய வைகளைக் கொள்க. இதனை 'வீறியவே தாந்தமுதன் மிக்க கலாந்தவரை, யாறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நாளோ'' என இவ்வாசிரி யர் கூறுவதனானுங் காண்க.

அத்துவித நிலையரா யென்னையாண்டு' என்றதனால், அத்துவித மென்ற சொல்லிற்கு ஒன்றென்று சாதிப்பார் மதமறுக்கப்பட்டு, இரண் டல்ல என்றபொருள்படும் உண்மையினை நிறுத்தியவாறாயிற்று; அத்துவி தமென்ற சொல்லிற்கு ஒன்றெனப் பொருள்கொளின், என்னையாண்டு என்னுஞ் சொற்களுடன் மாறுபடுமென்பதனை யூகித்தறிக, ''சிவமாக்கி யெனையாண்ட'' என்றார் ஆளுடையவடிகளும்.

கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
குவித லுடன் விரித லற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
குறியற்று மலமு மற்று
நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்று விந்து
நாதமற் றைவகைப் பூதபே தமுமற்று
ஞாதுருவின் ஞான மற்று
வாடுதலு மற்றுமே லொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமு மற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்ட வசமாய்த்

தேடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(இ-ள்.) கூடுதலுடன் பிரிதல் அற்று-கூடுதலுடன் பிரிதலும் இல்லாததாகி, நிர்த்தொந்தம் ஆகி-தொந்தமில்லாததாகி, குவிதலுடன் விரிதல் அற்று-கூம்புதலும் மலர்தலும் இல்லாததாகி, குணம் அற்று-குணரகிதமாகி, வரவினொடு போக்கு அற்று-வருதலும் போகுதலும் இல்லாததாகி, நிலையான குறிஅற்று- நிலையாகிய அடையாளம் இல்லாததாகி, மலமும் அற்று-மலரகிதமாகி, நாடுதலும் அற்று-நினைத்தலும் இல்லாததாகி, மேல் கீழ் நடு பக்கம்என-மேல்கீழ்நடுபக்கமென்று, நண்ணுதலும் அற்று-சொல்லப் பொருந்துதலும் இல்லாதாகி, விந்து நாதம் அற்று-விந்துநாதங்கள் இல்லாததாகி, ஐவகை பூதபேதமும் அற்று-பஞ்சபூதவேறுபாடுகளும் இல்லாததாகி, ஞாதுருவின் ஞாதுருவோடு,ஞானம் அற்று-ஞானமும் இல்லாததாகி, வாடுதலும் அற்று வாட்டமடைதலும் இல்லாததகி, மேல்-மேலும், ஒன்று அற்று-ஒன்றாந்தன்மை இல்லாததாகி, இரண்டுஅற்று-இரண்டாந்தன்மை இல்லாததாகி, வாக்கு அற்று-வார்த்தையில்லாததாகி, மனமும் அற்று-மனமும் இல்லாததாகி, மன்னு-நிலைபெற்ற, பரிபூரணம்-பரிபூரணமாகிய, சுகவாரிதன்னில்-இன்பசாகரத்தில், வாய்மடுத்து உண்டு-வாய்மடுத்தருந்தி, அவசமாய்-பரவசமாகி, தேடுதலும் அற்ற இடம்-தேடுதலும் இல்லாத இடம், நிலை என்ற-உண்மைநிலையென்று உபதேசித்த, மௌனியே. மௌன குருவே, சித்தாந்த முத்திமுதலே. என்க.

(வி-ரை.) எல்லாப்பொருள்களினும் கலந்துங் கலவாது மிருத்தலின், 'கூடுதலுடன் பிரிதலற்று' என்றனர் அதாவது எல்லாமாய்அல்லதுமாயிருக்குந் தன்மையினை விளக்கியதாயிற்று. திருவாசகம். "வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி, யூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்; கோனாகி யானென தென் றவரவரைக் கூத்தாட்டு, வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே, எனவும், தேவாரம். "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமான னாயெறியுங் காற்றுமாகி, யருநிலைய திங்களாய் நாயிறாகி யாகாசமாயட்ட மூர்த்தியாகிப், பெருநலமுங் குற்றமும் பெண்ணுமாணும் பிறருருவும் தம்முருவுந்தாமேயாகி, நெருநலையா யின்றாகி நாளையாகி நிமிர்புன்சடைகணின்றவாறே" எனவும், "மண்ணல்லை விண்ணல்லை வலயமல்லை மலையல்லை கடலல்லை வாயுவல்லை, யெண்ணல்லை யெழுத்தல்லை யெரியுமல்லை யிரவல்லை பகலல்லை யாவுமல்லை, பெண்ணல்லை யாணல்லை பேடுமல்லை பிறிதல்லை யானாயும் பெரியாய் நீயே, யுண்ணல்லை நல்லார்க்குத் தீயையல்லை யுணர்வரிய வொற்றி யூருடைய கோவே" எனவும் வருவனவற்றாற் காண்க.

தனக்கெனச்சுகதுக்கமின்மையின் 'நிர்த்தொந்தமாம்' என்றனர். திருவாசகம்: "இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே" என்றதனாற் காண்க. விருத்திக்ஷய மின்மையின் 'குவிதலுடன் விரிதலற்று' என்றனர். குவிதலாவது-அணுரூபமாக விளங்குவது, விரிதலாவது-மகத்து ரூபமாக விளங்குவது. அற்று என்றதனால் இவையிரண்டு மின்றியிருப்பது. சிவபுராணம்: "அணோரணீயாந் மகதோமஹீயா நயமவ்யய:" எனவும், கைவல்யோபநிஷதம்: "அணோரணீயாநகமேவ தத்வந் மஹாநஹம் விசித்ரம்" எனவும்வருவனவற்றாற்காண்க. 'பிறப்பு இறப்பின்மையின், வரவினொடு போக்கற்று என்றனர். பிருகதாரணியோபநிடதம்: "ஸவாஏஷமகாநஜ ஆத்மாஜரோமர:" எனவும், தேவாரம்: "பிறவாது மிறவாதும் பெருகினானைப், பேய்பாட நடமாடும் பித்தன்றன்னை, மறவாதமனத்தகத்து மன்னினானை, மலையானைக் கடலானை" எனவும் வருவனவற்றாற்காண்க. நாமரூபமின்மையின் 'நிலையான குறியற்று' என்றனர். திருவாசகம்: "திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை, யுருநாமமறியவோ ரந்தணனா யாண்டுகொண்டா, னொருநாம மோருருவமொன்று மில்லாற்காயிரந், திருநாமம்பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ" என்றதனாற் காண்க,

அசுத்தமாயை பிரகிருதிமாயைகளைக் கடந்ததேயன்றிச் சுத்த மாயையினையுங்கடந்திருத்தலின், 'விந்துநாதமற்று' என்றனர். "நாதவிந்துகளாதீநமோநம:" என்றதனாற் காண்க, ஒன்றற் றிரண்டற்று என்றதனால் ஏகான்மவாதியரையும், துவைதவாதியரையு முறையே மறுத்து, "ஒன்றாகாம லிரண்டாகாமல், ஒன்றுமிரண்டு மின்றாகாமல்" என்னுஞ் சுத்தாத்வைத சித்தாந்த நிறுத்தியவாறாயிற்று. திருக்களிற்றுப்படியார்: "ஒன்றன்றிரண்டன் றுளதன் றிலதன்று, நன்றன்று தீதன்று நானன்று நின்ற; நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று, தலையன் றடியன்று தான்" என்றதனாற் காண்க.

தாராத வருளெலாந் தந்தருள மௌனியாய்த்
தாயனைய கருணைகாட்டித்
தாளிணையென் முடிசூட்டி யறிவிற் சமாதியே
சாசுவத சம்ப்ரதாயம்
ஓராமன் மந்திரமு முன்னுமன் முத்திநிலை
யொன்றே டிரண்டெனாமல்
ஒளியெனவும் வெளியெனவு முருவெனவு நாதமா
மொலியெனவு முணர்வு றாமல்
பாராது பார்ப்பதே யேதுசா தனமற்ற
பரமவநு பூதி வாய்க்கும்
பண்பென் றுணர்த்தியது பாராம லந்நிலை
பதிந்தநின் பழவடியர்தம்

சீரா யிருக்கநின தருள்வேண்டு மையனே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

(இ-ள்.) தாராத அருள் எல்லாம்-தரக்கூடாத உனது திருவருள் முழுதும், தந்து அருள் - தந்தருளும்படி, மௌனியாய் - மௌனகுருவாகி தாய் அனைய - தாயையொத்த, கருணைகாட்டி-கிருபைசெய்து, தாள்,இணை இரண்டு திருவடிகளை, என் முடிசூட்டி-என்சிரசில் தரித்து, அறிவில் சமாதியே-அறிவினிடத்துக்கூடும் நிஷ்டையே, சாசுவத சம்பிரதாயம் (என்று) நிலையாகியசம் பிரதாயமென்றும், ஓராமல்-பகுத்துணராமலும், மந்திரமும் உன்னாமல்-மந்திரத்தை நினைக்காமலு, முத்திநிலை-மோக்ஷ நிலையானது, ஒன்றோடு இரண்டு என்னாமல்-ஒன்று இரண்டு என்று சொல்லாமலும், ஒளி எனவும்-ஒளியென்றும், வெளியெனவும்-வெளியென்றும், உரு என வும்-உரு என்றும், நாதம் ஆம் ஒலி எனவும்-நாதமாகிய ஒலியென்றும், உணர்வு உறாமல்-அறியாமல், பாராது பார்ப்பதே-காணுமற்காண்பதே, ஏது சாதனம் அற்ற-எவ்வகைப்பட்ட சாதனங்களும் இல்லாத, பரம அநுபூதி வாய்க்கும் பண்பு என்று-மேலான அனுபூதி கிடைதற்குரிய உபாயமென்றும், உணர்த்தியது-நீ அறிவுறுத்தினவை, பாராமல்-பகுத்தறியாமல், அந்நிலை பதிந்த-அந்த நிலையிற்றங்கிய, நின் பழ அடியர்தம்-உனது பழைய அடியார்களுடைய, சீர் ஆய் இருக்க-சிறப்பையடைந்திருக்க, நினது அருள் வேண்டும்-உன் திருவருள் வேண்டும். ஐயனே-கடவுளே, சித்தாந்த முத்தி முதலே என்க.

(வி-ரை.) முதல்வன் சகலர்கள் புண்ணிய பாவங்கள்தொலையொத்த காலம் பார்த்துப், பூமியின்கண் ஆசாரியரை யதிட்டித்துக்கொண்டு, மந்த மதியான நால்வகைச்சத்திநிபாதானுகுணமாகத் தீவினையைச் செய்தவர்கள் பாசத்தைச் சேதித்தவர்களறிவை விளக்கி, யதிபக்குவரா யுள்ளவர்களைச் சிவானந்தானுபூதியிற் றிளைத்திருக்கும்படி யருளெலாந்தந்து, கருணையினைக் காட்டுவனாகலின், 'தாராதவருளெலாந் தந்தருள்மௌனியாய்த் தாயனைய கருணைகாட்டி' என்றனர். சிவஞானபோதம்: "மெய்ஞ்ஞானந் தானே விளையும் விஞ்ஞானகலர்க், கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்-மெய்ஞ்ஞானம், பின்னுணர்த்து மன்றிப் பிரளயாகலருக்கு, முன்னுணர்த்துந் தான்குருவாய்முன்" எனவும், சிவஞானசித்தியார்: "உரைதருமிப்பசுவர்க்க முணரின் மூன்று முயரும் விஞ்ஞானகலர் பிரளயா கலர்சகலர், நிரையின் மலமல கன்மமலங்கன்மமாயை நிற்கு முதலிருவர்க்கு நிராதாரராகிக், கரையிலருட் பரன்றுவிதா சத்திபாதத்தாற் கழிப்பன்மலஞ்சகலர்க்குக் சன்ம வொப்பிற், றரையிலாசான் மூர்த்தியாதாரமாகித் தரித்தொழிப்பன்மலஞ் சதுர்த்தா சத்திநிபாதத்தால்" எனவும், போற்றிப் பஃறொடை "தன்னி

ன்று நீங்காச்சகலர்க்கவர்போல, முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள் கையன்னவனுக், காதிகுண மாதலினு லாடுந்திருத்தொழிலுஞ், சோதி மணிமிடற்றுச் சுந்தரமும்-பாதியாம், பச்சையிடமும் பவளத்திருச்சடை மேல், வைச்சநதியு மதிக்கொழுந்து மச்சமுற, வாடுமரவு மழகார் திருநு தன்மேல், நீடுருவ வன்னிநெடுங்கண்ணுங்-கேடிலயங், கூட்டுந் தமருகமுங் கோலவெரியகலும், பூட்டரவக்கச்சும் புலியதளும்-வீட்டின்ப, வெள்ளத் தழுத்தி விடுந்தாளினுமடியா, ருள்ளத்தினும் பிரியாவொண்சிலம்புங்-கள் ளவினை, வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீரக்கழலு, மொன்று முருத் தோன்றும வுள்ளடக்கி-யென்று, மிறவாதவின்பத் தெமையிருத்தவேண் டிப், பிறவாமுதல்வன் பிறந்து" எனவும் வருவனவற்றாற்காண்க. திரு மேனிகொண்டெழுந்தருளிவந்த தம்பிரான் திருவடிதீட்சைசெய்த பின்ன ரே அனுக்கிரகிக்க வேண்டுமாகலின், தாளிணையென் முடிசூட்டிஎன்றனர். திருமந்திரம்; "திருவடி வைத்தென் சிரத்தருணோக்கிப், பெருவடிவு தந்த பேர்சக்தி தன்னைச், குருவடிவிற்கொண்ட கோனையென் கோவைக், கருவழி மாற்றிடக்கண்டுகொண் டேனே." அன்றியும், "திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந், திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந், திருவடி ஞானஞ் சிறை மலமீட்டுந், திருவடி ஞானந் திண்சித்தி முத்தியே," எனவும், சிவஞானக் கலம்பகம்; "அடங்க வெலும்புந் தோலுமாயருவருப்புற் றமிழ்ந்தின்ற வுடம்பை நானென்றிருந்தேனை பொழிவில்கருணைச் சிவஞானி, கடந்த பிரம நீயென வேகழற்கா லென்புன்றலைவைத்தான், முடங்கு சுருள்வா ளுப்ச் சொ பொன்முடி சூட்டின னெம்பெருமானே." எனவும், சிவ ஞானசித்தியார் "என்னையிப்பவத்திற்சேராவகை யெடுத்தென் சித்தத்தே, தன்னைவைத்; தருளினாலே தாளிணைதலைமேற் சூட்டும்" எனவும், திருக் களிற்றுப் படியார்; "சிந்தையிலுமென்றன் சிரத்தினிலுஞ்சேரும் வகை, வந்தவனை நாம் வாராமற்-றந்தவனை" எனவும் வருவனவற்றாற் காண்க. போதமுனையாது பதைப்புநீக்கி வறிதேயிருந்து அறிவிடத்து கூடுஞ் சமா தியே நிட்டைமுறையாகலின், அறிவிற்சமாதியே சாசுவத சம்ப்ரதாயம் என்றனர். தத்துவப் பிரகாசம்; "உயிரெனவும் பரையெனவுஞ் சிவமெ னவு மூன்று முருக்காண விலையான் உயிர்நடத்தலானும், பயிலுமிடத்துஞ் சுட்ட வரியதெனலானும் பார்த்ததெல்லா மப்பதியின் செயலோதலானும், வியனுலக மிவனாலே சேட்டித்தலெனினும் வியர்நுரைத்தார்க் குணர் வரிய ளுப்ச்சோடலானும், பயனளித்தல் சொளல்காணப் படுதலானும் பார்த்தமுந்தா நிலையாகும் பதைப்பற்றுப் பாரே." என்றதனாற் காண்க.

ஆன்மாவுஞ் சிவமு மொன்றல்லவாகலினாலும், ஆன்மாக்கள் சீவிக்கு மிடத்துஞ் சிவனறிவிக்கவறிந்து பிரிவற நின்று சீவிக்கையால் இரண்டல்ல வாகலினாலும், 'ஒன்றேயிரண்டென்றேமல்' என்றனர். இருபாவிருபஃது; ஒன்றாகாம லிரண்டாகாம லொன்றுமிரண்டு மின்றாகாமல்" என்றதனாற் காண்க, இதுவே அத்துவிதமாம். உலகத்துப் பொருளுடன் கூடுவானாகில்

முதல்வன் சாகாரியாவாணுகையால் அங்ஙனங் கூடாவியல்பை யுடைய ஞய் நிராதிகாரியா யிருப்பனுகலின், 'ஒளியெனவும் வெளியெனவு முரு வெனவு நாதமாமொலியெனவு முணர்வுறுமல் என்றனர். சிவஞானசித்தி யார்; சிவனரு வுருவுமல்லன் சித்தினே டசித்துமல்லன், பவமுதற் ஜெ ழில்களொன்றும் பண்ணிடு வானு மல்லன், தவமுத லியோகபோகந் தரிப்பவ னல்லன்ருனே, யிவைபெற விபைந்து மொன்று மியைந்திடா வியல்பினனே.''எனவும்,தேவிகாலோத்தரம். விஜ்ஞாநோமே து ஹிஸதா ஸகலவஸ்துவஸதந்ஹோத் ஸகலவிரஞெர் நாஷெயஹெயொ வஹ்ந வுதொஷிஷந ஹநாலேதஹோயொவிஷோகஃ। யொஸஎ ஸவெஷஹஸவெஷு வஹெவஹிஹோஹொஃ॥ சுகாயொநிரூ ணொஹீஷி நிராஜஙு நிஷஷிஷிதிஸீஷஃ। உநஸஷிஸ்ஸாவாஜிமதஷ நிவெஶிவஸகஷி.'' எனவும் வருவனவற்ருற் காண்க.

தற்போதத்தை முன்னிட்டுப் பாராமல் திருவருளை "முன்னிட்டுப் பார்ப்பதுவே சிவத்திணைக் சார்தற் சேதுவாகலின், பாராது பார்ப்பதே யேது என்றனர். ஒழிவிலொடுக்கம். ''வாலே முகமாய் வரவானை யேறி ஞர், போலவுன் போதமோ போய்த்தீண்டுஞ் சாட், பெருஞ்சிரிப்பாந் தன்னைப் பிடித்தாட்டும் பேயைத் தெரிஞ்சிருக்கத் தேடுஞ் செயல்.'' என்ற தனுற் காண்க.

போதமா யாதிநடு வந்தமுமி லாததாய்ப்
புனிதமா யவிகா ரமாய்ப்
போக்குர வியலாத வின்பமாய் நின்றநின்
பூரணம் புகலி டமதா
ஆதரவு வையாம லறிவினை மறைப்பதுநி
னருள்பின்னு மறிவின் மைதீர்த்
தறிவித்து நிற்பதுநி னருளாகி லெளியனேற்
கறிவாவ தேத றிவிலா
ஏதம்வரு வகையேது வினையேது வினைதனக்
கீடான காய மேதென்
இச்சாசு தந்தரஞ் சிறிதுமிலை யிகபர
மிரண்டினுண் மலைவு தீரத்
தீதிலருள் கொண்டினி யுணர்த்தியெனை யாள்வையோ
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

(இ - ள்.) போதமாய்-ஞானவடிவாகி, ஆதி நடு அந்தமும் இல்லாதது ஆய் - ஆதியந்தரகிதமாகி, புனிதமாய் - பரிசுத்தமாகி; அவிகாரம் ஆய் - நிர்விகாரமாகி. போக்கு வரவு இல்லாத இன்பம் ஆய்- போக்குவரவற்ற சுகவடிவாகி, நின்பூரணம்-உன்னுடைய பரிபூர்ணநிலையையே, புகல் இடமதி ஆ - அடைக்கலத் தானமாகக்கொண்டு, ஆதரவு வையாமல் - அதனிடத்து விருப்பம் வைக்காதவகை, அறிவினை மறைப்பதும் - என்னறிவைத் தடுப்பதும், நின் அருள்-உன் திருவருளே, பின்னும்-மேலும், அறிவு இன்மை தீர்த்து - அறியாமையை நீக்கி, அறிவித்து நிற்பதும் - (என்னுளிருந்து) உணர்த்தி நிற்பதும், நின் அருள் - உன் திருவருளே, ஆகில், ஆனால், எளியனேற்கு - எளியேனுக்கு, அறிவு ஆவது ஏது - அறிவாவது யாது; அறிவு இலாத ஏதம் வருவகை ஏது - அறிவில்லாத குற்றம் உண்டாகும் வகையாது; வினை ஏது - அறிவறியாமைகட்குக் காரணமான வினை யாது; என் இச்சா சுதந்தரம்-எனனுடைய இச்சா சுதந்தரங்கள், சிறிதும் இல்லை - சொஞ்சமுமில்லை; இகம் பரம் இரண்டினும் - இகபரமென்னுமிரண்டிடத்தும், மலைவு தீர - எனது பிராந்தி நீங்கும்படியாக, தீது இல் அருள்கொண்டு-குற்றமற்ற திருவருளைக்கொண்டு, இனி உணர்த்தி - இனியேனும் அறிவுறுத்தி, என்னை ஆள்வையோ - என்னை அடிமைகொள்வையோ, சித்தாந்தமுத்தி முதலே -என்க.

(வி-ரை.) முதல்வனுடைய சொரூபவிலக்கணம் இன்னபடித்' தெனக் கூற வொண்ணாமையின், போதமா யாதிநடு வந்தமுமிலாததாய்ப் புனிதமா விகாரமாய்ப் போக்குவரவில்லாத வின்பமாய் நின்றநின் பூரணம்' என்றனர். தத்துவப்பிரகாசம்: "உருவுமருவுங் கலப்புமா யன்றிக்குறியு, முறையுமுணர்ந் தறிவரிதாய்க் குணமெல்லையிலவா, யருபரமா யானந்தக்குறியாயற்புதமாய் யநாமயமாய் நிராமயமாய் சலமாயின்பாய்த், தெரிவரிதா யநுபவமாய் முத்தசித்தாய னுவாய்ச், செல்கதியாய்ப் பல்லுருவாய்த் தீமைநன்மையின்றாய், யுரையிறந்து கரையிறந்த வொளியாகி வெளியா,யோங்குவது தற்சிவமென் றோங்குரைக்குநூலே." என்றதனாற் காண்க.

கன்மசாமீபமான ஆன்மாக்களுக்குப் பரிபாகமான மலங்களினுடைய வீரியத்தைத் தடுத்தலும், ஆன்மாக்களுக்கு ஆணவமுதலிய குற்றங்களைப் போக்கி ஞானத்தினைக் கொடுத்து வீட்டையடையச் செய்தலும் முதல்வனருளே யாகையால், 'அறிவினைமறைப்பது நின்னருள்பின்னு மறிவின்மை தீர்த்தறிவித்து நிற்பது நினருளாகில் என்றனர். சிவஞானசித்தியார்: "அழிப்பிளைப் பாற்றலாக்க மவ்வவர் கன்மமெல்லாங், கழித்திட னுகரச் செய்கைகாப்பது கன்மவொப்பிற், றெழித்திட மலங்களெல்லா மறைப்பருட் செய்திதானும், பழிப்பொழி பந்தம்வீடு பார்த்திடி னருளேயெல்லாம்." எனவும், தத்ரைவ; "வ[illegible]

ஷா ॥ யஜொீ-லெநஊயஜெ்த தஜா நஈமூாஹிகொ ந்ஈஷஈதி." எனவும் வருவனவற்றுற் காண்க

வி௵.—அறியாமையாகிய ஏதமும், வினையும், காயமு மடியேனுக்கு வந்தவா றேது?

விடை.—நீயுனது முந்திய சென்மத்தினுற் றேடிக்கொண்ட மலங்கள் கூட்டி வைத்தன.

வி௵.—சேட்டையற்ற சடமாகிய மலங்கள் எங்ஙனங்கூட்டி வைக்கும்?

விடை.—நீ யறிவுற்றவனுகையால் உன்னுடன் அம்மலங்கள் கூடுகையில் அவைச் சேட்டைப்படும்.

வி௵,—கடபடங்களாயுள்ள சால் குடம் புடவை சீலை முதலாயுள்ளவை அடியேனுடன் கூடின அவசரத்துச் சேட்டைப்படக் கண்டேனில்லையே?

விடை.—மலங்கள் கடபடாதிகள் போலன்று. விடத்தையுடைய வசநாவ முதலாயுள நஞ்சுகள் சடமாயினும், அறிவாயிருந்த ஆன்மாக்கள் அவற்றைப் புசித்த அவதரத்து அறிவையழித்து அவற்றின் குண மேலிட்டு மயக்கினுற்போல, அந்தமலங்கள் சடமாயினும்அறிவுள்ள உன்னுடன் சம்மந்தமான அவசரத்து அவைகட்குச் சேட்டை யுண்டாம்.

வி௵.—மலங்களுக்கு உவமையாகக் கொண்ட நஞ்சுகள் மலங்களைப்போல பல குணங்களைச் செய்யக்கண்டதில்லை. அன்றியும் மலங்கள் சடம னபடியால் அவை தாமேயடியேனை வந்துபொருந்தா. அடியேனு அவற்றை வேண்டுமென வுண்டாக்கிக்கொள்ளேன். முதல்வன் நின் மலனுகையால் அஞ்ஞானமாகிய மலங்களை அடியேனுக்கு உண்டா கப் போகிறதில்லை. மலங்களால் விளைத்தவா றெங்ஙனம்?

விடை.—அம்மலங்கள் ஆன்மாவாகிய நீயுள்ளவன்றே சுபாவமாக வுன்ல டத்திலுளவாம்.

வி௵.—பாலில்வெளுப்பும், கருமையிற்கறுப்பும் இயல்பாயுள்ளனவாகலின் சுபாவத்திற் கொருகாலத் தினுநீக்கமில்லையே?

விடை.—நெல்லின்க ணுளதாகிய முளையைத் தோற்றுவிக்கு மாறுபோல கன்மமலம் உன்னுடைய சுகத்துக்கங்களை முதற்காரணமாய் நின் தோற்றுவிக்கும், முளைத்தற்கு அனுகூலஞ்செய்து உடனிற்கு தவிடுபோல, மாயாமலம்—அச்சுகதுக்கங்களாண்டுத் தோன்றுத குத் துணைக்காரணமாய் தன்காரியமாகிய தனுகரண முதலியவ றையும் உயிரையு மியைவித்து நிற்கும், அம்முளை ஆண்டுத்தோன் தற்கு நிமித்தகாரணமாகிய உமிபோல, ஆணவமலம் அத்தோ

றக்கிற்று நிமித்தகாரணமாய் அவற்றை முறுகுவிக்துகின்ற அச் சுகதுக்கங்களை உயிர் நுகருமாறு நிலைபெறச்செய்யும். இவற்றை யிங்ஙனங்கூட்டிவைப்பான் முதல்வனென்றறிக.

இவ்விருவிடைகள், ஏதம் வரும்வகையேது வினையேது வினைதனக் கான காயமேது எனக்கூறியுள்ள வாக்கியத்தின் உள்ளுறைகளா மெனக் காள்க.

ஆன்மாவொன்றை யறியுமிடத்துந் தானே யறியாமல் அறிவிக்க யுறியுந் ன்மை யுடைத்தாகலின், இச்சாசுகந்தாஞ் சிறிதுமிலே என்றனர். சிவப்பிர சம் "இருணனிபிரவிதான் வந்திரிக்கலு மிரவிலெண்ணும், பொருணிலை ண்டொக்தர் பொருந்திடுமாறுபோல, மருணிலையெங்குநீங்க மகிழ்ந்துயிர் ன்னுண்மன்னு, மருளையுமொழியஞாலந் தறிந்தவாறறியுமன்றே." என்றத ற்காண்க. இகத்திலும் பரத்திலும் முறையே திரோதான சத்தியினைக் கொ டும் அருட்சத்தியினைக்கொண்டும் காத்துவர வேண்டுமென்பார், இகபர ரண்டிலுண் மிலவுசிரத் தீதிலருள் கொண்டினி யுணர்த்தி யெனையாள் வையோ என்றனர். (கூரு)

பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்
  பாப்பைவல மாக வந்தும்
பாவையிடை மூழ்கியு நதிகளிடை மூழ்கியும்
  பசிதாக மின்றி யெழுநா
மந்திரிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
  வன்பசி தனக்க டைத்து
மவுனத் திருந்துமுயர் மலைநுழை தனிற்புக்கு
  மன்னுதச நாடி முற்றுஞ்
சுத்திசெய் தும்மூல ப்ராணனொ டங்கியைச்
  சோமவட் டத்த டைத்தும்
சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல் கற்பங்க
  டோறுநிலை நிற்க வீறு
சித்திசெய் துஞ்ஞான மலதுகதி கூடுமோ
  சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
  சின்மயா னந்த குருவே.

(இ-ள்.) பத்திநெறி - பத்திமார்க்கத்தில், நிலைநின்றும் - நிலையாய்நின் றும், நவகண்ட - ஒன்பது கண்டங்களோடுகூடிய, பூமிப்பாப்பை - பூமியின் பரப்பினை, வலமாகவந்தும் - பிரதட்சணமாய்வந்தும், பாவை இடை

மூழ்கியும் - கடலில் ஸ்நானம்பண்ணியும், நதிகளிடை மூழ்கியும் - நதிகளில் ஸ்நானம்பண்ணியும், பசிதாகம் இன்றி - பசிதாகங்க ளில்லாமல், எழுநாமத்தி இடைநின்றும் - நெருப்பின் நடுவினின்றும், உதிர் சருகு - உதிர்கின்ற சருகுகளையும், புனல்வாயுவினை - சலத்தினையும் வாயுவினையும், வன்பசிதனக்கடைத்து - வலியபசிக்குநிரப்பி, மவுனத்து இருந்தும் - மௌனநிலையில் இருந்தும், உயர்மலை நுழைஞ்னில்புக்கும் - உயர்ந்த மலைக்குகைகளில் பிரவேசித்தும், மன்னு - நிலைபெற்ற, தசநாடிமுற்றும் - தசநாடி முழுவதையும், சுத்திசெய்தும் - சுத்தப்படுத்தியும், மூலப்ராணனோடு - மூலாதாரத்திலுள்ள ப்ராணவாயுவுடன், அங்கியை - அக்கினியை, சோமவட்டத்து அடைத்தும் - சந்திரமண்டலத்தில் சேர்த்தும், சொல் அரிய - சொல்லுதற்கரிதாகிய, அமுது உண்டும் - அமிர்தத்தைப் புசித்தும், அற்ப உடல் - அற்பசரீரம், கற்பங்கள்தோறும் நிலைநிற்க - ஊழிகள்தோறும் நிலைநிற்கும்படி, வீறு - மேலான, சித்திசெய்தும் - சித்தியையடைந்தும், ஞானம் அலது - ஞானமுண்டானு லல்லது, கதிகூடுமோ - மோட்சஞ்சித்திக்குமோ, சித்தாந்த முத்திமுதலே - என்க.

(வி-ரை.) செங்நெறியினைக் கடைபிடித்தொழுகுவார் செய்யுஞ் சாதனங்கட்கு ஆதரவு அவசியமாகலின் பத்திநெறி நிலைநின்று என்றனர். ஆதரவு - பத்தி. திருமந்திரம். "ஒத்துலகேழு மறியாவொருவனென், றத்தனிருந்திடமாறிவார் சொல்லப், பத்தர்தம்பத்தியிற் பாற்படிலல்லது, முத்தியினையார் சொல்லமுந்துகின்றாரே." எனவும், சிவதருமோத்தரம். "ஆதரவே பரமான வறமதாகு மாதிநடு வந்தமிவற்றனைத்துமாகு, மாதரவற்றவரீகை யறமேயாகாதாதலினு லாதரவே மூலமாகு, மாதரவே பிரகிருதி யான்மாவீசனெனும் பொருளு மறிவிக்கு மமலன்றானு, மாதரவே யடைவிக்கு மாதலாலே யனைத்தினுக்கு மாதரவே மூலமாமே." என்றதனாற்காண்க.

நவகண்டமாவன - பரதகண்டம், கிம்புருடகண்டம், அரிகண்டம், இளவிர்தகண்டம், பத்திராசுகண்டம், கேதுமாலிகண்டம், இரமியகண்டம், குருகண்டம். இந்நாவலந்தீவில் மனுகுலத்தில் வந்த அரசன் அக்கினிகோத்திரன் அவனுக்குப் புத்திரரொன்பதின்மர், இக்கண்டங்களை யொவ்வொருவராக வொன்பதின்மரும் பிரித்தாண்டமையா லவரவர் பெயரா லக்கண்டங்களுக்குப் பெயராயிற்று. சிவதருமோத்தரம். "மனுகுலத்தில் வருமங்கி கோத்திரனு மன்னவன்றன், றனையர்பர தனைமுதலோர் சவுரிய ரொன்பதின்மருளர் இனையவர்க ளாண்டமையி னெய்தியபே ரெனவிவற்றை, நினைக பரதனுக்குரிமை பரதமே நிகழ்த்துங்கால்." என்றதனாற் காண்க. சாந்திராயணம் தட்சணயணம், தை மாதப்பிறப்பு, ஆடிமாதப்பிறப்பு, சித்திரைவிசு, அமாவாசை, பூரணை, திருவாதிரை, விதிபாதயோகம், கிரகணகால முதலான காலவிசிட்ட முணர்ந்து சமுத்திர ஸ்நானம் நதிஸ்நானஞ் செய்தல் புண்ணியமா

கடவா ரஞ்ஞானத்தா லுறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞானந்தா, ஞனத்தாலது போவதலர்கதிர் முன்னிருள்போலஞ்ஞானமறப்பந்த மறமுத்தியாகு, மீனத்தார் ஞானங்களல்லா ஞானமிறைவனடி ஞானமே ஞானமென்பர்.'' எனவும் வருவனவற்றுற் காண்க. (நு௬)

## மௌனதரு வணக்கம்.

ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி
யாங்கார முளையை யெற்றி
அத்துவித மதமாகி பதமாறு மாருக
வங்கையின் விலாழி யாக்கிப்
பாசவிரு டன்னிழ லெனச்சுளித் தார்த்துமேற்
பார்த்துப் பரந்த மனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டுமுக
படாமன்ன மாயை நூறித்
தேசுபெற நீவைத்த சின்முத்தி ராங்குசச்
செங்கைக்கு ளேய டங்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
றிருவருட் பூர்த்தி யான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகஜ மெனவ ளர்த்தாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(இ - ள்.) ஆசைநிகளத்தினை - ஆசையாகிய விலங்கினை, நிர்த்தூளிபட உதறி - நிர்த்தூளியாம்படி உதறி, ஆங்காரமுளையையெற்றி - ஆங்காரமாகிய முளையைப் பிடுங்கி யெறிந்து, அத்துவிதமதம் ஆகி - அத்துவிதமென்கிற மதத்தினைக் கொண்டு, மதம் ஆறும் - ஆறுமதங்களும், ஆறு ஆக - நதிகளாக அங்கையின் விலாழியாக்கி - துதிக்கையின் விலாழியாகச்செய்து, பாச இருள் - பாசமாகிய இருளை, தன் நிழல் என - தன்னுடைய நிழலென்று நினைத்து, சுளித்து - கோபித்து, ஆர்த்து - ஆரவாரித்து, மேல் - மேலே, பார்த்துப் பரந்த - நோக்கிப் பரவிய, மனதை - மனத்தினை, பாரித்த கவளமாய் - பெருங் கவளமாய், பூரிக்க உண்டு - நிறைய உண்டு, முகபடாம் அன்ன - நெற்றிப் பட்டத்தினை யொத்த, மாயைநூறி - மாயையினை அரைத்து, தேசுபெற - ஒளிபெற, நீவைத்த - நீ அமைத்த, சின்முத்திராங்குசம் - சின்முத்திரையாகிய அங்குசத்தினைத்தரித்த, செங்கைக்குள்ளே அடங்கி - செங்கையினிலடக்கி, சின்மயானந்த சுகவெள்ளம்படிந்து - ஞானமயமாகிய பேரானந்த வெள்ளத்

நிலைமூழ்கி, நின்திரு அருள் பூர்த்தியான - உனது திருவருளின் நிறைவாகிய, ரசம் உ.றுசற்சாரமீது-வசித்தல்பொருந்திய கூட்டத்தில்,என்னை-அடியேனை, ரு ஞான மத்தகஜம் என வளர்த்தாய் - ஞானமதத்தினை யுடைய யானையைப் போல வளர்த்தனை, மந்த்ரகுருவே - மந்த்ராசாரியனே, யோகதந்த்ர குருவே - யோகதந்த்ராசாரியனே, மூலன் மரபில்வரும்- திருமூலரது மரபில்வந்த, மௌன குருவே - மௌனகுருவே. என்க.

(வி - ரை.) வித்தியாதத்துவத்தில் தோன்றிய அராகம் ஆன்மாக்கள் செய்த கன்மத்திறுக் கீடாகப் பிரகிருதியினின்றும் பிறந்த சுகாநுபவங்களை மேலுமேலும் புசிக்கையின் பொருட்டுப் பண்ணுவிப்பது ஆசை. சிவஞான சித்தியார் "விச்சையிலிராகந்தோன்றி வினைவழி போகத்தின்க,ணிச்சையைப் பண்ணிநிற்குந் தொழிலறி விச்சைமூன்றும், வச்சபோ நிச்சாஞானக் கிரியை முன் மருவியான்மா, நிச்சயபுருடனாகிப் பொதுமையினிற்பனன்றே." என்ற தனுற்காண்க. இவ்வாசையால் விடயவிச்சை விளையும், இவ்விளைவால் பந்த முண்டா மாதலினுல் ஆசை நிகளத்தினை என்றனர். இத்தகைய ஆசையினை நீக்கிக் கொள்ளவேண்டுவ தத்தியாவசிய மாகலின் நிர்த்தூளிபட வுதறி என்ற னர். கந்தரனுபூதி "தூசா மணியுந்துகிலும் புனைவா, ணேசமுருகா நினைதன் னருளா, வாசாங்களந் துகளாயினபின், பேசாவனுபூதி பிறந்ததுவே." எனவும், திருக்குறள். "அஞ்சுவதோருமறனே யொருவனை, வஞ்சிப்பதோருமவர்," எனவும், திருமந்திரம். "ஆசையறுமின்க ளாசை யறுமின்க, ளீசனோடாயினு மாசையறுமின்க, ளாசைப்படப்பட வாய்வருந்துன்பங்க, ளாசைவிடவிட வானந்தமாமே." எனவும் வருவனவற்றுற்காண்க.

புத்திதத்துவத்தினின்று மனத்திற்கு மூலமாகத் தோன்றி யானென தென்பதற் கேதுவாகப் பிரதிபுருஷ நியதமாய், குலதனவித்யாதிகளினலெனக் குச் சமானமில்லை யென்றும், யானென்றும், எனதென்று மபிமானஞ் செய்து கொண்டு மோட்சபரியந்த மான்மாவை நீங்காது நிற்பதுவாய் சரீரத்துவ பிராணுதி வாயுக்களைச் சேட்டிப்பது அகங்காரம். சிவஞான சித்தியார் "ஆங்கா ரம் புத்திபின்க ணுதித் தகந்தைக்கு வித்தா, யீங்கார்தா னென்னோ டொப்பா ரென்றியா னென்னதென்றே, நீங்காதே நிற்கும்." என்றதனுற் காண்க. இவ் வாங்காரத்தினை யொழித்துக் கொள்ள வேண்டியது கட்டாய மாகலின் ஆங் கார முளையை யெற்றி என்றனர். இவ்வாசிரியரே "ஆங்கார மற்றுன்னறி வான வன்பருக்கே, தூங்காத தூக்கமது தூக்கும் பாராபரமே" என்றதாலுங் காண்க.

மதமாறுவன: உலகாயதம், பௌத்தம், சமணம், மீமாஞ்சை,மாயாவாதம், பாஞ்சராத்திரம் ; இப்புறச்சமய மாறினையும் நிராகரிக்க வேண்டுமென்பார் யானை பரிபூரீராகிய விலாழிக் குவமையாக்கி, மதமாறு மாறுகவங்கையின் விலாழியாக்கி என்றனர். திருவாசகம் "உலகச்சமயங்க ளொவ்வாத சாத்திர

மாஞ்,சவலைக்கடலுள ளாய்க்கிடந்து தடுமாறுங், கவலைக் கெடுத்துக் கழலிணைக டந்தருளுஞ், செயலைப் பரவிநாந் தெள்ளேணங் கொட்டாமோ." எனவும், திருவுந்தியார் "சாவிபோ மற்றச்சமயங்கள் புக்குநின்றுவியாறுதேயென் றுந்தீபற, அவ்வுரைகேளா தேயுந்தீபற." எனவும் வருவனவற்றாற்காண்க.

ஈண்டுப் பாசமென்றது ஆணவமலத்தினை; உலகத்துவெவ்வேறு வகைப் பட்ட குணங்களையுடைய பொருள்க ளெல்லாவற்றினையும், ஒருபொருளாக வேற்றுமை தோன்றாது மறைத்துக்கொண்டு நிற்பது ஆணவமாகிய விருளாக லின், பாசவிருள் என்றனர். திருவருட்பயன் "இருளான தன்றி யிலதெவையு மேகப், பொருளாகி நிற்கும்பொருள்." என்றதனாற்காண்க. இவ்வாணவவிருள் நீங்கினாலல்லது அருள்கூடாதாகலின் இதனைக்கடிய வேண்டுமென்பார், பாச விருடன்னிழ லெனச்சுளித்து என்றனர். திருக்கோவையார் "உருகுதலைச் சென்ற வுள்ளத்துமம்பலத்து,மொளியே பெருகுதலைச் சென்றுநின்றேன்." என்றதனாற்காண்க.

மனமானது தைசதவகங்காரத்திற் றோன்றிப் புத்தியகங்காரங்களுக்கு முன்னே தானொரு பொருளைப்பற்றிச் சங்கற்பவிகற்பங்களைப் பண்ணிக்கொ ண்டு சம்சய ரூபமாகி நிற்றலின் பரந்தமனதை என்றனர். சிவஞானசித்தியார். "மனமது தைசதத்தின் வந்தொரு பொருளைப்பற்றி, நினைவதுஞ் செய்தங் கையநிலைமையி னிற்குமாங்கே, யினமலி சோத்திராதி கன்மவிந் திரியமெல்லா, முனமுரைசெய்த வைகாரிகந்தருமென்பர் முன்னோர்" என்றதனாற்காண்க.

ஆன்மபோதம் நிகழ்தற்கேதுவாகிய மனதினைத் திருவருளிலே யொடுக்க வேண்டுமாகலான், மனத்தைப்பாரித்த கவளமாய்ப் பூரிக்கவுண்டு என்றனர் திருவிளையாடற் புராணம். "உள்ளமென்னுங்கூடத்தி னூக்கமெனுந் தறி நிறுவியுறுதியாகத்தள்ளரிய வன்பென்னுந்தொடர்பூட்டி யிடைப்படுத்தித் தறு கட்பாசக், கள்ளவினைப்பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணையென் னும், வெள்ளமதம்பொழி சித்திவேழத்தை நினைந்து வருவினைக டீர்ப்பாம்" என்றதனாற்காண்க.

ஆனையின்முகத்தில் படாமானது யாவருங்காண அலங்காரத்துடன் பி. காசிப்பதுபோல, மாயையானது ஆன்மாக்களுக்குச் சகலத்தில்தனுகரணபுவன போகமாக விரிந்து பிரத்தியட்சமாக விளக்கிக்கொண்டிருத்தலின், பட மன்ன மாயை என்றனர். இத்தனுகரணபோகங்களின் காரியப்பாட்டினை விசாரித்து அநித்தியமெனக்கண்டு அவற்றையு நீங்கவேண்டுமென்பார், ம யைநூறி என்றனர்.

ஆகமத்துணிபால் முப்பொருட்செய்தியினை விரல்களாற் காட்டல் சி முத்திரையெனப்படும். வருமாறு, பெருவிரல்பதி, ஆள்காட்டிவிரல்பசு, ம

ரையமூன்றுவிரல்கள் ஆணவம் கன்மம் மாயையாம் காத்தினைச் சுபாவமாக வைத்துக்கொண்டிருக்கையில் பசுவாகிய விரல் எக்காலத்தும் பதிவிரலுடன் லவாமல் ஆணவாதி விரல்களுடனேயே சேர்ந்திருக்கும், பசுவிரல் நுனி ம் பதிவிரல் நுனியுமொன்றாகச்சேர்ந்தபோது மற்றைய ஆணவாதிவிரல்கள் னியேசின்றுவிடும், இங்ஙனமே பசுவானது ஆணவாதிமலங்களை நீங்கிப் பதி யோடு கலக்கவேண்டுமென்னு முண்மையினைத் தெரிவிப்பதாம். மற்றுஞ்சில ண்மை இவ்விரல்களா லறியலாம். அவற்றைச் சித்தாந்த ஞானிகளினை டுத்தறிக.

ஆன்மாவாகிய தன்னையானையாக வுருவகஞ்செய்ததற்கேற்பப் பிறவிக்கு டமாக்கும் ஆசையினைச் சங்கிலியாகவும், தன்னைத் தருக்கிக் கெடுப்பதாகிய ஆங்காரத்தினை முளையாகவும், ஒன்றிரண்டென்று அத்துவிதநிலையினை மத மாகவும், புறச்சமயங்களை விலாழியாகவும், பாசவிருளை நிழலாகவும், மனத்தைக் வளமாகவும், மாயையினை முகபடாமாகவும், சின்முத்திரையினை அங்குச மாகவும் இவைபுருவகமாகக் கூறினர். (கூஎ)

ஐந்துவகை யாகின்ற பூதமுத லாதமு
மடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்க
ளறிவாக நின்ற நிலையில்
சிந்தையற நில்லென்று சும்மா விருத்திமேற்
சின்மயா னந்த வெள்ளம்
தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்கநீ
செய்சித்ர மிகநன் றுகாண்
எந்தைவட வாற்பரம குருவாழ்க வாழவரு
ளிபரந்தி மாபு வாழ்க
என்றடியர் மனமகிழ வேதாக மத்துணி
பிரண்டில்லை யொன்றென் னவே
வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேச குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே.

(இ - ள்.) ஐந்துவகை ஆகின்ற-ஐந்துவகையாகிய, பூதம் முதல் - பூதங் களமுதலாக, நாதமும்அடங்க - நாதத்துவமும் ஆகிய முழுதும், வெளி யாக வெளிசெய்து -பகிரங்கமாக வெளிப்படுத்தி, அறியாமை அறிவு ஆதி - அறியாமை அறிவுமுதலியவைகளை, பிரிவுஆக அறிவார்கள் - வேறுபிரித்தறிய

வல்லார், அறிவாகநின்ற நிலையில் - அறிவுருவாக நின்றநிலையின்கண், சிந்தை அறநில் என்று - மனமற நிற்பாயென்று, சும்மாஇருத்தி - சும்மாயிருக்கும் படிசெய்ய, மேல் - அதன்மேலும், சின்மயாநந்த வெள்ளம் - ஞானரூபமாகிய ஆநந்தப் பிரவாகத்தில், தேக்கி திளைத்து - நிறைய அனுபவித்து, நான் அது ஆய் இருக்க - நானதுவாயிருக்கும்படி, நீ செய் சித்ரம் - நீசெய்த விசித்திரம், மிகநன்று - மிகவும் நன்று, எந்தை - எமது தந்தையாகிய, வடவால் - வடவானிழற்கீ ழெழுந்தருளிய, பரமகுருவாழ்க - பரமாசிரியர்வாழ்க, வாழ அருளிய - அப்படி வாழும்படி அருளிச்செய்த, நந்திமரபுவாழ்கஎன்று - நந்திமரபு வாழ்கஎன்று, அடியர் - அன்பர்கள், மனம்மகிழ - மனமகிழும்படி, வேதாகமத்துணிபு - வேதாகமநிச்சயம், இரண்டு இல்லை - இரண்டாயிருக்கவில்லை, ஒன்றுஎன்னவே-(பதி) ஒன்றென்று அருளிச்செய்தற்காகவே, வந்தகுருவே- வந்த ஆசாரியனே, வீறு - (எல்லாச்சாத்திரத்திலும்) மிஞ்சிய, சிவஞானசித்தி- சிவஞானசித்தியென்று சொல்லப்படுகிற சாத்திரத்திலுள்ள, நெறி - வழிப்படியே, மௌனோபதேசம் - மௌனோபதேசஞ் செய்யவந்த, குருவே - ஆசாரியனே, மந்த்ரகுருவே, என்க.

(வி - ரை.) ஐந்துவகையாகின்ற பூதமாவன - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமாம். பூதமுதல் நாதமாவன-பூதமைந்து, தன்மாத்திரையைந்து, அந்தக்கரணநான்கு, கன்மேந்திரியமைந்து, ஞானேந்திரியமைந்து, வித்தியாதத்துவமேழு, சுத்ததத்துவ மைந்து, ஆக முப்பத்தாறும். ஐந்துவகையாகின்ற பூதமென்றதாலும், பூதமுதனாதமென்றதாலும் உலகாயதன், பாஞ்சராத்திரி, மாயாவாதி மூவரு மறுக்கப்பட்டனர், இவற்றின் விகற்பமாகிய சுட்டறிவுகளிற்றுணில்லாமல், தத்துவங்கள் தன்னைத்தாக்காமல், கானலைத் தண்ணீரென்று கண்டவன் கானலென் றறிந்தவிடத்துத் திரும்ப விரும்பாதது போலவும், சொப்பனத்தில் யானையேறி மாலைசூடக் கண்டவன் விழித்தவிடத்தது மெய்யாய்க்காணுமல் பொய்யாய்க்கண்டதுபோலவும் தன்னறிவிலே கண்டு நீங்கி யாவும் வெளியாகப்பார்க்கும் தத்துவசுத்தி ஆசரியன் செய்தனராகலின் வெளியாக வெளிசெய்து என்றனர். திருப்புகழ். "சுட்டதுபோலாசைவிட்டுலகாசாரத் துக்கமிலாஞானச் சுசமேவிச், சொற்கரணுதீத நிர்க்குணமூடாடு சுத்தநிராதார வெளிகீண, மொட்டலாவாரீச சக்ரசடாதார முட்டவுமீதேறியதுமீதாய், முப்பதுமாறுறு முப்பதும்வேறுன முத்திரையாமோன மடைவேனே" எனவும், உண்மைநெறி விளக்கம். "மண்முதற்சிவமதீறாய் வகையதிற்றுணிலாது, கண்ணுதலருளால் நீங்கல் சுத்தியாய்க்கருதலாமே" என்றதனுற்காண்க.

முதல்வன் நிராதாரமாய்த் தோன்றவேண்டி அறியாமையும் அறிதலுமாகிய இருவகைப்பாசங்களு நீங்கி தம்மறிவின்கண்ணே கேட்டலறிவினைக் கேட்டு முறையிற்கேட்கச் செய்தன ராசிரியனாகலின், அறியாமை யறிவாதி

ிரிவாக வறிவார்க ளறிவாக நின்ற நிலையில் சிந்தையற நில்லென்று என்ற ார். சிவஞானசித்தியார். "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை ருளினு லறியாதே யறிந்து, குறியாதே குறித்தந்தக் கரணங்களோடுங்கூடா ்த வாடாதே குழைந்திருப்பையாயிற், பிறியாத சிவன்றானே பிரிந்து தோ ாறிப் பிரபஞ்ச பேதமெல்லாந் தானுய்த்தோன்றி, நெறியாலே யிவையெல்லா ல்லவாகி நின்றென்றுந் தோன்றிடுவனிராதாரனுயே" என்றதனுற் காண்க. ுன்றியும் அறியாமை யறிவாதி பிரிவாக என்றது அறியாமையாகிய வாண ுத்தான் மறைப்புண்டு மயக்கமுறுங் கேவலக்கிடையும், கருவி காணங் டின சகலாவத்தையுமாக விரண்டினுங் கூடாமல் எனக் கொள்ளினுமமை ம். ஒருசாரார் அறியாமை அசுத்ததத்துவ மென்றும், அறிவு சுத்ததத்துவமெ ்றுங் கூறுவர்.

சிந்தையற நில்லென்று வைத்தது அலையற்ற சாகரம்போலச் சிந்தையசை றத்தெளிந்து சுட்டற நிற்கச்செய்ததனை. திருமந்திரம். "உரையற்றவொ ன்றை யுரைசெயு மூமர்காள், கரையற்றதொன்றைக்கறைகாணலாகுமோ, ரையற்ற நீர்போலச் சிந்தைதெளிந்தாற், புரையற்றிருந்தான் புரிசடையோ னே." என்றதனுற் காண்க. சும்மாவிருந்தாலே ஆனந்தங் கிடைக்குமாகலின் அங்ஙனம் வைத்தா ராசிரியரென்பார், சும்மாவிருத்திமேற் சின்மயானந்த வெள்ளம் தேக்கித் திளைத்து நானதுவாயிருக்க என்றனர். ஞானமணிமாலை. முத்திச் சிவானந்த முட்டாமல் மேன்மேலுந், தத்திக் கரைபுரண்டதானுலு த்தியமு, முன்னல் முழுகிலது வுன்னுனை வற்றியிடு, மென்னுனை சும்மா ிரு" என்றதனுற்காண்க.

நானதுவாக என்றது-வியாப்பிய வியாபகத்தால் கண்ணொளியும் ஞாயிற் றி னொளியும்போல வேற்றுமை சிறிதுந் தோன்றுதவாறு ஒற்றித்து நிற்றற் ரிய தனது தொண்டினையும் முதல்வன் கலப்பினையு நோக்கி நின்று, கரு டோகம் பாவனைபோலச் சிவோகம்பாவனை யொருவன் செய்யப்பெறுமாயின், அக்கருடன் அம்மாந்திரிகனுக்கு வேருதலின்றி அத்துவிதமாய்த்தோன்றி விட த்தினை நீக்கித் தெளிவுசெய்யுமாறுபோல, முதல்வனு மிவனில் வேருதலின்றி அத்துவிதமாய் நின்ற நிலையேயாம். சிவஞான சித்தியார் "கண்டவிவையல் லேனு னென்றகன்று காணுக் கழிபரமு நானல்லேன் னெனக்கருதிக்கசிந்த, தொண்டினொடு முளத்தவன்று னின்றகலப் பாலே சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறன்றி,விண்டகலு மலங்களெலாங் கருடத்தியானத்தின் விட மொழியு மதுபோல விமலதையு மடையும், பண்டை மறைகளுமதுநானுனே னென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவத்தைக்காணே". என்றதனுற்காண்க.

ஏகான்மவாதமதம்.

கடோபாதிவசத்தால் ஆகாயமான திரண்டாய் நின்றாற்போலவும், பல பாத்திரங்களிலுள்ள சலோபாதிவசத்தால் ஒரு சந்திரன் பலவாய்த்தோன்றி

ஞற்போலவும், அகண்ட பரிபூரணமாயிருக்கிற முதல்வன்றனே மாயாகாரியங்களாக விருக்கிற தேகோபாதிகடோறும் சீவபேதத்தினையடைந்து பெத்த நீங்கி முத்தியின்கண் அந்தக்கடமும் பாத்திரங்களும் பின்னமா யுள்ளளவிற் கடாகாயமு மகாகாயமு மொன்றுய் .நின்ருற்போலவும், பலவாகத்தோன்றின சந்திரப் பிரதிபிம்பங்கள்போ லொன்றுய் நின்றுற்போலவும், மகத்துக்களையாச்சிரயித்து வேதாந்த சிரவணஞ்செய்து அதனுன் முன்னுண்டான மாயோபாதி நீங்கிச் சீவனே பிரமமா யிருக்கையே நானதுவா யிருக்கை யென்பதுவாம்.

மறுப்பு.

ஒருபொருளிரண்டாய்ப் பின்னொன்று மென்னிற் சீவபர மிரண்டிற்குங் குணமொன்று யிருத்தல்வேண்டும். அன்றியும் இப்படியிருப்ப தொன்றிற்கு மாயோபாதிகளிலே நின்று சுகதுக்கப்படவும் அவை நீங்குதற்கு மகத்துக்களைச் சேர்ந்து வேதாந்தங் கேட்கவும் வேண்டாம். அன்றியும் சாயுச்சிய வின்பம்பெற்றாலும் பின்பு சென்ன முண்டாதல்வேண்டும் ஆதலால் ஏகான்ம வாதமடாது.

சிவாத்துவிதிமதம்.

அக்கினியினின்றும் பல பொறிகளும் புறகயுந்தோன்றினுற்போல, அநாதியாயிருக்கிற முதல்வன்றனே பிரபஞ்சகாரணமாய்ச் சடசத்தியாயிருக்கிற மாயைமாயைகளையுப் ஆன்மாக்களையும் பகுத்துத் தன்னிடத்தினின்றுந் தோற்றுவித்து அந்த மாயையினுலே பிரபஞ்சத்தைப் படைத்துச் சராசரபேதமான எண்பத்துநான்கு நூறுயிரபேத யோனிகடோறு நின்று விளையாடிப் பெத்த நீங்கின முத்தியின்கண் கன்மசமத்துவமும் சத்திநிபாதமு முண்டானமளவிற் சற்குருவையடைந்து சாம்பவி தீட்சைபெற்றுக் குருபதேசத்தாலே செகத்தடங்கலையுஞ் சிவமாகவறிந்து பேறுமிழவும் பெறுவானும் ஈவோனும் வேறில்லையென்று கருதிச் சீவனே சிவன் சிவனே சீவனென்று பேதாபேதங்கள் கொண்டிருக்கையே நானதுவா யிருக்கையென்பதுவாம்.

மறுப்பு.

சித்தாயிருக்கிற முதல்வனிடத்திலே ஆன்மாக்கள் தோன்றிற் கடாதிகளைப்போன்று மூர்த்தமாயழியும். பேறு மிழவும் பெறுவானு மீவானும் வேறில்லையெனில், ஆசிரியனையடைந்து பெற்ற மோட்சத்தாலொரு பிரயோசனமு மில்லையாம். ஆதலால் சிவாத்துவிதமடாது.

ஐக்கியவாதிமதம்.

அநாதியிலே ஆன்மாவு முதல்வனும் வேறாயிருந்து முத்தியிலே நீரி னீரும், பாலிற்பாலும், நெய்யினெய்யும் கலந்தாற்போல ஒன்றாயிருக்கையே நானதுவா யிருக்கையென்பதுவாம்.

### மறுப்பு.

அநாதியிலே வேருயிருந்த முதலிரண்டில் ஒன்றழியும் ஆதலால் ஐக்கியவாதமடாது.

### பேதவாதிமதம்.

முதல்வனும் ஆன்மாவு முத்தியிலு மொன்ருது பேதமாயிருப்பதுவே ஞானதுவா யிருக்கையென்பதுவாம்.

### மறுப்பு.

சாயுச்சியமென்பது மின்றி முதல்வனைப்பெற்றது மில்லையாம் ஆதலால் பேதவாதமடாது.

### சங்கிராந்தவாதிமதம்.

தீயிற்சேர்ந்த விரும்பு தீயானுற்போல ஆன்மாவு முதல்வனுடனேகூடி முதல்வனுயிருக்கையே ஞானதுவா யிருக்கையென்பதுவாம்.

### மறுப்பு.

ஆன்மாவிற் கங்ஙனமாந் தன்மையில்லை. அஃதெங்ஙனமெனின், தனக்குப் பிராணனுயிருக்கிற முதல்வனுடைய தலைமைபோல் இவனும் பஞ்சகிருத்தியமு நடத்தல்வேண்டும், நடத்தில் அவனுடைய தலைமைகெடும். அன்றியுந் தீயைச்சேர்ந்த விரும்பு தீசெய்யுந்தொழிலைச் செய்யாது. இரும்பைச்சேர்ந்த தீயே தகிக்கும். ஆதலால் சங்கிராந்தவாதமுமடாது.

### மாணவகன்வினு.

இங்ஙனம் பேதமுதலியவற்றினை மறுக்கின், ஆன்மாவும், முதல்வனும் ஏகபவித்துத் தான் கெடாமனின்று, பரமானந்தத்தினை அனுபவிக்கு முண்மைக் குவமைமுகத்தா லருளிச்செய்யவேண்டும்.

விடை:—கருவிக ளெல்லாங் கழன்றகேவலத்திலே ஆணவமலத்தினை ஆன்மாசென்று கூடாமல் ஆணவமும் ஆன்மாவினை வந்து பொருந்தாமல், ஆன்மாதான் கெடாமல், அந்த ஆணவத்தினை யிதுவென்று சுட்டிக் காணுமல், ஆணவமும் ஆன்மாவுமொன்ருகாமல் இரண்டாகாமல் ஒன்று மிரண்டுமின்றாகாம லிருந்ததன்மைபோலாம். ஆன்மாவும் முதல்வனும் ஐக்கியமான சாயுச்யத்தினிலைமையாம். சிவப்பிரகாசம். "ஒன்றிரண்டாகி யொன்றி னொருமைபாமிருமையாகி, யொன்றிலொன்றழியுமொன்ருதென்னினென்ருகாதியி, னென்றிரும் புறழினின்ருமுயிரினைந்தொழிலும் வேண்டு, மொன்றி நின்றணருமுண்மைக்குவமையாணவத்தோடொன்றே" எனவும், திருவருட்பயன். "ஒன்ருகு மொன்ருதிரண்டாகு மோசையெழா, தென்ருலு மொன்றிரண்டுமில்" எனவும், "தாடலைப்போற் கூடியவை தானிகழாவேற்றின்பக், கூடலைச் யேகமெனக் கொள்." எனவும், சிவானந்தமாலை. "தானுவினேட்

துவிதஞ் சாதிக்குமாணவனே, யாணவத்தோடத்துவித மாக்கினரார்-கோண றவே, யென்னுணே யென்னுணே யென்னுணே யேகமிரண் டென்னுமற் சும் மாவிரு.'' எனவும், வருவனவற்றுற்காண்க. மற்றும் இம்மூத்திநிலைமையினை "சிந்தாந்த வசனபூஷண" மென்னும் சாத்திரத்து அத்துவித முத்தியிலக் கணத்திற்காண்க. வடபாற் பரமகுருவாவார், கயிலையங்கிரியில் இறைவர் தட் சண திசையைநோக்கிச் சனகன், சனந்தனன், சனாதனன், சனத்குமாரனாகிய நான்கு மகாவிருடிகட்கு உபதேசித்த அவசரமாகிய தட்சணாமூர்த்தம். நந்தி மரபாவது-தக்ஷணாமூர்த்தி சிவஞானபோதத்தினைத் திருநந்திதேவருக்கு உப தேசிக்க, அவர் சனற்குமார முனிவர்க்கும், அவர் சத்தியஞான தரிசனிக ளுக்கும், அவர் பரஞ்சோதிமுனிவர்க்கும், அவர் மெய்கண்டதேவர்க்கும், அவர் அருணந்தி சிவாசாரியர் முதலாயினேர்க்கும், அவர் மறைஞானசம்பந்த நாயனார்க்கும், அவர் உமாபதிசிவாசாரியர்க்கும், அவர் அருணமச்சிவாயர்க் கும், உபதேசித்த வரன்முறைவழியாம். சிவப்பிரகாசம். "தேவர்பிரான்வளர் கயிலை காவல்பூண்ட திருநந்தியவர்கணத்தோர் செல்வர் பாரிற், பரவியசத்திய ஞானதரிசனிகளடிசேர்பரஞ்சோதி மாமுனிகள்பதியாய் வெண்ணெய் மேவிய சீர் மெய்கண்ட திறலார்மாறு விரவுபுகழருணந்தி விறலார் செல்வத் தாவி லருண் மறைஞானசம்பந்த ரிவரிச்சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே." என்றதனார்காண்க.

வேதாகமத்துணி பிரண்டில்லை யொன்று என்றது ஒருவனே பதியிரண் டாவதாக வொருவனில்லையென்பதாம். அதர்வ சிரசு. "ஏகாகோருத்ரோநத் விதீய." என்றதனாற்காண்க.

### ஏகான்மவாதி மதம்.

இரண்டில்லை யென்பதற்குப் பிரமத்தினைக்காட்டிலும் வேறொருபதார்த் த மில்லையென்றும், ஒன்று என்பதற்குப் பிரமமொன்றேயென்றும்பொருள் கூறவேண்டும்.

### மறுப்பு.

பிரமமொன்றென்று சொல்லுகிற ஒருவன் அப்பிரமத்தின் வேறாய பசு வென்றறிவாயாக.

### ஏகான்மவாதி வினா.

இங்ஙனம் வேற்றுமைகூறில் பிரமமில்லையாயின், ஒருபொருளுமில்லை யென்னும் வேதத்திற்குத் தாற்பரியமென்னை ?

விடை:—அகரவுயிரில்லையாயின் அக்கரங்க ளில்லையாமென்னு முறை பற்றி, வேதம் பிரமப்பொருளில்லையாயின், ஒருபொருளு மில்லையென்றோ தும். சிவஞானபோதம். "ஒன்றென்ற தொன்றேகா ணொன்றேபதிபசுவா

மான்றென்ற ச் பாசத்தோடுளோகா-ளுென் றின்றே, லக்கரங்களின்றுமகர பின்றே லிக்கிரமத்தென்னு மிருக்கு என்றதனுற்காண்க.

அறுபான்மும்மை நாயன்மார்களிலொருவராய திருமூலநாயனுர் மரபிலே வதரித்து, திருக்கயிலாயபரம்பரைச் சந்தானமாகிய மெய்கண்ட தேவநாயனுடைய வழிக்குரவரிடத்து ஞானுேபதேசம்பெற்ற சற்குருமூர்த்திகளாகிய மௌனகுரு சுவாமிகள் எழுந்தருளித் தன்பால் சிவஞானசித்தியினைத் தந்து ச்சாத்திரத்தி னெறியினை யுபதேசித்து, அச்சாத்திரத்தின் எட்டாவது சூத்ரத்து முப்பதாவது திருச்செய்யுளின் முதலிரண்டடியின் கருத்தினை விளக்கி மௌனுேபதேசஞ் செய்தனராகலின், சிவஞான சித்திநெறி மௌனுேபதேசகுருவே என்றனர். அத்திருச்செய்யுளின் கருத்தினைக் குறிப்பாக "அறிாமையறிவாதி" என்று இச்செய்யுளினும் "பாதி விருத்தத்தாலிப்பார் ருத்தமாகவுண்மை, சாதித்தார் பொன்னடியைச் சாருநா ளெந்நாளோ" ன்று குருமரபின் வணக்கத்தும் அனுவதித் திருப்பதனைக்காண்க. (௫அ)

ஆதிக்க நல்கினவ ராரிந்த மாயைக்கெ
 னறிவின்றி யிடமில்லையோ
அந்தரப் புஷ்பமுங் கானலின் னீருமோ
 ரவசரத் துபயோகமோ
போதித்த நிலையையு மயக்குதே யய்யநான்
 புக்கவருடோற்றிடாமல்
பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென்
 புந்திக்கு ளிந்த்ரசாலஞ்
சாதிக்குதே யிதனை வெல்லவு முபாயநீ
 தந்தருள்வ தென்றுபுகல்வாய்
சண்மத ஸ்தாபனமும் வேதாந்த சித்தாந்த
 சமரசநிர் வாகநிலையும்
மாதிக்கொ டண்டப் பாப்பெலா மறியவே
 வந்தருளு ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
 மரபில்வரு மௌனகுருவே.

(இ-ள்.) இந்த மாயைக்கு - (தனுகரண புவனபோகமா விரிந்துகிடக்கின்ற) இந்த மாயையினுக்கு, ஆதிக்கம் நல்கினவர் ஆர் - (இத்தனை) ஏற்றம் கொடுத்தவர்யார், என் அறிவு இன்றி இடம் இல்லையோ - (இதற்கு) என் றிவல்லது வேறிடமில்லையோ, அந்தரப் புஷ்பமும் - ஆகாயத்தாமரையும், கானலின் நீரும் - கானற் சலமும், ஓர் அவசரத்து உபயோகமோ - ஒரு

அவசரகாரியத்திற்கு உபயோகமாமோ, போதித்த நிலைமையும் - நீ எனக்குப்போதித்த நிலையையும், மயக்குதே - மயங்கப்பண்ணுகிறதே, நான் அபயம் புக்க - நான் அபயமாக அடைந்த, அருள் தோற்றிடாமல் - திருவருள் சிறிதுந் தோற்றாவகை, பொய்யான உலகத்தை - பொய்யாகிய பிரபஞ்சத்தினை, மெய்யா நிறுத்தி - உண்மையாகத்தாபித்து, என் புந்திக்குள் - என் அறிவினிடத்தில், இந்த்ரசாலம் - இந்திரசாலத்தினை, சாதிக்குதே - விளையாடிக் காட்டுகின்றதே, இதனை வெல்லவும் - இதை வெல்லுதற்காகவும் உபாயம் - (ஒரு) உபாயத்தினை, நீ தந்தருள்வது - நீ போதித்தருளுவது என்று - எந்நாள், புகல்வாய் - சொல்லுவாய், சண்மதஸ்தாபனமும் - ஆறு மதங்களினையும் நிலைப்படுத்தும் பாண்டித்யவகையும், வேதாந்த சித்தாந்த சமரச நிர்வாகநிலையும் - வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசமாக நிர்வகிக்கத் தக்க அனுபூதிநிலையையும், மாதிக்கொடு - பெரிய திசைகளுடன்கூடிய அண்டம் பரப்பு எல்லாம் - உலகவிஸ்தீரணமெல்லாம், அறிய-அறியும்படி வந்தருளும் - வந்து அடியேனுக்கு அருளிச்செய்த, ஞானகுருவே - ஞானாசாரியனே, மந்த்ர குருவே,—என்க.

(வி-ரை.) முதல்வன், சுத்தனுபிருக்கப்பட்ட ஆன்மா முன்னே செய்யப்பட்ட புண்ணியபாவங்கட் கீடாக உடம்பினையும், தத்துவங்களையும் இருப்பிடங்களையும், புசிப்புக்களையும் மாயையினின்றுங் காரியப்படுத்தித்தா அம்மாயையின் வியாபகத்தில் தான்வியாப்பியமாயடங்கிக் கிடைக்கின்றேனென்பார், ஆதிக்க நல்கினவரா ரிந்தமாயைக்கே என்றார். இதனால் மாயையின் ஆளுகையைக் குறித்தனர். இங்ஙனம் மாயை தனக்குத் தனுகரண புவனபோகமா யிருக்கைக்குக் காரணம் 'பிராரத்துவமேயாம், அது முன் சென்மத்தில் ஆகாமியமாக வேறியது. அவ்வாகாமிய விளைந்ததற்கேது அறிவாகலின், அறிவின்றியிடமில்லையோ என்றனா. இம்மாயை நித்தியமாயினும் காரியரூபத்தில் அநித்தியமாகக் காணப்படுதலின், அந்தரப் புட்பமுங் கானலின்னீருமோரவசரத் துபயோகமோ என்றனர்.

மாயையாலுண்டான ஞானங் கிஞ்சித் விடயமாய் அனான்மாவான சரீராதியில் ஆன்மபாவனையை யுண்டாக்குவதால் மோகமெனப்படும், அந்தகாரத்திற் றீபம் பிரகாசித்தபோதிலும் கருநெய்தல் முதலானவற்றிற் செங்கழு ரென்னும் விபரீதஞானமுண்டாம். அங்ஙனமே மாயையில் ஞானம் பிரகாசிக்கினும் அனான்மாவான சரீராதியில் ஆன்மாவென்னும் விபரீதமுண்டாக்குகிற தன்மையால் மோகமென்பது சித்தமாகலின், மயக்குதே என்றனர். அன்றியும் மாயையானது ஆன்மாவின் சிற்றறிவைப்பற்றி நான்சுகி நான்துக்கி யென்று வரும் விபரீதஞானத்தையு முயிர்க்குப் பண்ணுமாகலினாலும் மயக்குதேயென்றனர். சிவஞானசித்தியார். "மாயை மயக்கமுஞ் செய்யுமன்றே" எனவும் தத்துவவிளக்கம். "ஓதியவல்வினையூட்டக்கருவி யுடம்புலக, மாதியபோமுமாய்நின்ற மாயைமயக்கறுவித்தே, போதந்தரும்பொருளாய் நிற்கும் புவ

களைக், காரியுமாய்விரிந் தந்தமுமாகியொடுங்கியதே." எனவும் வருவனவற் ற்காண்க. பொய்யை மெய்யாக்கிக்காட்டுதல் மாயையின் தொழிலாதலால் பொய்யான வுலகத்தை மெய்யாகநிருத்தியென் புந்திக்குளிந்த்ரசாலம் சாதிக் தே என்றனர். மயக்குது, சாதிக்குது என்பன மரூஉ.

சண்மதங்களாவன-வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம் சைவம் என்பன. வைரவத்திற்குத் தமருகமுஞ் சிலம்புந்தரித்த மூர்த்தியாயும், வாமத்திற்கு அக்னியும் உபவீதமுந்தரித்தமூர்த்தியாயும், காளாமுகத்திற்குப் பாசமும் புஷ்பதீபமணியுந்தரித்த மூர்த்தியாயும், மாவிரதத்திற்கு என்புமாலை தரித்த மூர்த்தியாயும், பாசுபதத்திற்குத் திருநீறுஞ் சடைமுடியுந்தரித்தமூர்த்தி யாயும், சைவத்திற்குத் தாண்டவ பூஷணனென்னு மூர்த்தியாயும், அவரவர் கோட்பாடுகளுக்குத் தக்கதாகவனுக்கிரகஞ்செய்கிறவராக விருத்தலின் சண்மதஸ் தாபனமுமென்றார்.

அன்றியும் புறச்சமயிகளறுவர்க்குள் உலகாயதன், பிரிதிவி அப்பு தேயு வாயு நாலு பூதங்களுமே கர்த்தாவென்பன். அருகன், உலகமெலா நித்திய மாயிருக்கும் அருகேசுரன் குருத்வமாத்திரத்திலே கர்த்தாவாயிருப்ப னென்பன். புத்தன்தானே சுகதாகர்த்தாவென்பன். மீமாங்கிசன், உலகமெலாநித்திய மாயிருக்கும் சரீராதியுற்பத்தியிலே கன்மந்தானே கர்த்தாவென்பன். பாஞ்ச ராத்திரி, நாராயணன்தானே அபின்ன நிமித்தோபாதானனாய்ச் சகத்கர்த்தா வாயிருப்பனென்பன். மாயாவாதி, பிரமந்தானே தன்னிடத்திலேபரிணாமத் தினாலேதான், விவர்த்தத்தினாலேதான் சகத்கர்த்தாவா யிருக்குமென்பன். இங்ஙனஞ் சொல்லாநின்ற அவரவர்கட்கு அவரவர்களாலே சொல்லப்பட்ட கர்த்துருகாரணங்களை யதிஷ்டித்துக்கொண்டு அந்தக் கர்த்துரு காரணஸ்வ ரூபியாய் நிற்பானாகலினாலும் சண்மதஸ்தாபனமு மென்றார். திருவாசகம். "இருந்தருமறுவகைச்சமயத் தறுவகையோர்க்கும்-வீடுபேறாய்நின்ற" என வும், சிவஞானசித்தியார். "யாதொருதெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகியங் கே, மாதொருபாகனார்தாம்வருவர் மற்றத்தெய்வங்கள், வேதனைப்படுமிறக் கும் பிறக்கு மேல்வினையுஞ்செய்யு, மாதலாலிவை யிலாதானறிந்தருள் செய்வ னன்றே" எனவும், வருவனவற்றாற்காண்க. (ருக)

மின்னனைய பொய்யுடலை நிலையென்று மையிலகு
விழிகொண்டு மையல்பூட்டு
மின்னார்களின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்
பொன்னையழியாதுவளர் பொருளென்று போற்றிப்
பொய்வேடமிகுதிகாட்டிப்

பொறைபறிவு துறவீத லாதிநற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டுத்
தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல் வேதாந்த சித்தாந்த
சமரச சிவானுபூதி
மன்னவொரு சொற்கொண் டென்னைத்தடுத் தாண்டன்பின்
வாழ்வித்த ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(இ-ள்.) மின் அனைய- தோற்ற வொடுக்கங்களால் மின்னலினையொத்த பொய் உடலை-பொய்யாகிய உடம்பினை, நிலையென்றும்-நிலையுள்ளதென்றும் மையிலகு விழிகொண்டு-அஞ்சனந்தீட்டப்பெற்று விளங்குகின்ற கண்களைக் கொண்டு, மையல்பூட்டும்-காமமயக்கமாகிய விளக்கினையிடுகின்ற, மின்னார்கள் இன்பமே-மாதர்கள்சுகமே, மெய்யென்றும்-உண்மையென்றும், வளர் மாடம்-உயர்ந்தமாளிகைகளின், மேல்வீடு-மேல் உப்பரிக்கைகள், சொர்க்கம் என்றும்-சொர்க்கலோகம் என்றும், பொன்னை-சுவர்னத்தினை, அழியாதுவளர் பொருள் என்று-அழியாது வளர்கின்றபொருளென்றும், போற்றி-விரும்பி இப்பொய்வேடமிகுதிகாட்டி-இந்தப்பொய்வேடத்தின் பெருமையை வெளிப்படுத்தி, பொறை-பொறுமை, அறிவு-ஞானம், துறவு- இருவகைப்பற்றையுந்துறத்தல், ஈதல்-கொடை, ஆதி-முதலாகிய, நற்குணம்எல்லாம்-நற்குணங்கள் எல்லாவற்றையும், போக்கிலேபோகவிட்டு - அவைசெல்லும்வழியிற்செல்லவிட்டு, தன்னிகர் இல்-தனக்கொப்பில்லாத, லோபாதி-உலோபகுணமுதலாகிய, பாழ்ம்பேய் பிடித்திட - பாழாகிய பிசாசம் பற்றிக்கொள்ள, தரணிமிசை - உலகில், லோகாயதன் - லோகாயதனுடைய, சமயநடை சாராமல்-சமயவொழுக்கத்தினைப்பொருந்தாமல், வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதி மன்ன-வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதியைப் பொருந்தும்படி ஒரு சொல்கொண்டு என்னைத்தடுத்து ஆண்டு-ஒருமொழியால் என்னைத்தடுத்தாட்கொண்டு, அன்பின்வாழ்வித்த-அன்பினால்வாழச்செய்தருளின, ஞானகுருவே-ஞானாசாரியனே, மந்த்ரகுருவே—என்க.

(வி-ரை.) உடலானது கணநேரத்தில்தோன்றி மறையுமின்னலினையொக்குமென்பார், மின்னனைய பொய்யுடலையென்றார். சிந்தாந்த தரிசனம். "நீர்க்குமிழிமின்னற்றமுண்டு நிலையில்லை, யாக்கைக்கென்றெண்ணியறிந்து" என்றதனாற்காண்க. மகளிர்களுடையகண்ணினால்ஆடவர்களுடைய உள்ளமுடை

ட்டு மயக்குமாகலின், விழிகொண்டு மையல் பூட்டும் என்றனர். திருக்கோ யையார் "காப்பினவேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து, வீசின பாறுள்ள மீனிழந்தார் வியன் றென்புலியூ, ரீசன சாந்து மெருக்கு மணிவு தார் பிடிபிடித்துப் பாப்பினமாவென வேறுவர் ஊர்ப்பனைமடலே" என்ற ஞற் காண்க.

உலகாயதன் மாதர்கள் இன்பமே மெய்பானமுத்தி யென்பனுகலின், ன்றார்களின்பமே மெய் என்றனர். தத்துவப்பிரகாசம். "அறமென்று சொ துவதுபிறிதொன்றில்லை யரிவையர்க்காம் பணிசெய்த லதுதானேயறமா ,புறநின்று துமொரிற் பெறலாமென்கை போய்க்கண்டா ரிலையாமாற் பொய் மை ரிலையாகும், நெறியாவதரிவையர்க்காம் பணிசெய்துவமுத்தி நேரின்ப னுபவிக்கல் முத்தி தனிநெறியாம்" எனவும், சிவஞானசித்தியார். "ஊடுவது ணர்வதுற்ற கலவிமங்கையரையுள்கி, வாடுவதடியில்வீழ்ந்து வருந்துவதருந் வம்பின் கூடுவதுணர்வுகெட்டுக் குணமெலாம்வேட்கையேயாய், நீடுவ தின் முத்தி யிக்கினின்றார்கண் முத்தர்". எனவும், வருவனவற்றாற்காண்க.

அன்றியும், அம்மாதர்கள் வாழுகின்ற வீடுகளின்மேல்முற்றம் சொர்க்க லோகத்திற்குச்சமானமென்பாராகலின், "மாடமேல்வீடு சொர்க்கமென்றும்" ன்றனர். சிவஞானசித்தியார். "மதிநிலாதுகலாரோடுமணிநிலாமுன்றிலேறி, முகிர்நிலா வெரிப்பச்செய்வா யிளநிலாமுகிழ்ப்பமொய்த்த, கதிர்நிலா வடங் கொள் கொங்கைக் கண்கண்மார்பகல மூழ்கும், புதுநிலாவியநற்போகம் விடு வர்புன் சமயத்தோரே," என்றதனுற் காண்க நற்குணங்களையெல்லாமிழந்து பேய்பிதற்றுவதுபோல ஒன்றுக்கொன்றுமாறுகப்பேசி நன்மைகளையிழந்த லகாயதன் நடையினைச் சாருதல்தீதென்பார், லோபாதிபாழ்ம்பேய்ப்பிடித் டுத் தரணியிசை லோகாயதன் சமபநடைசாராமல் என்றனர். நெஞ்சு விடுதூது. "இருளலகைபோ லிகலேபேசு முலகாயதன்பாலுருதே" என்ற னுற்காண்க. (சஉ)

போனக மிருக்கின்ற சாலையிடை வேண்டுவ
புசித்தற் கிருக்கு மதுபோல்
புருஷர்பெறு தர்மாதி வேதமுட ணுக்கமம்
புகலு மதிலு லாம்பயன்
ஞானநெறி முக்யநெறி காட்சியனு மானமுத
னுவித தங்க டேர்ந்து
நாலு மெனக்குழ று படையுடை பெய்ர்க்கிடவு
நான்குசா தனமுமோர்ந்திட்
டானநெறி யாஞ்சரியை யாதிசோ பானமுற்
றனுபக்ஷ சம்புபக்ஷம்

ஆமிரு விகற்பமு மாயாதி சேவையு
மறிந்திரண் டொன்றெண் ணுமோர்
மானத விகற்பமற வென்றுநிற் பதுநமது
மரபென்ற பரம குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே

(இ - ள்) போனகம் இருக்கின்ற சாலையிடை-மடைப்பள்ளியில், புசித்தற்குவேண்டிய - உண்ணுதற்குவேண்டிய பொருள்களெல்லாம், இருக்குமது போல் - இருத்தல்போல, புருஷர்பெறு-மக்களடைதற்குரிய, தர்மாதி-அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தநான்கும், வேதமுடன் ஆகமம்-வேதத்துடன் ஆகமங்களும், புகலும் அதினல் ஆம்பயன்-சொல்லுகின்ற அதனாலுண்டாகும் பயனும், ஞானநெறி முக்யநெறி - ஞானநெறியாகிய முக்ய நெறியும், காட்சி அனுமானம் - காட்சியனுமானமென்கிற பிரமாணங்களும், முதல் - முதலாகிய நாலுவிதங்கள், தேர்ந்து - பலவகையுமாராய்ந்து, நான் நான் என - நான் நான் என்னும், குழறுபடை - குழறுபாட்டை, படைபெயர்த்திடவும் - நிர்த்தூளியாக்கவும், நான்குசாதனமும் ஓர்ந்திட்டு - சாதனசதுஷ்டயத்தினையும் விசாரித்துணர்ந்து, ஆனநெறி ஆம்சரியை ஆதிசோபானம் உற்று - நல்லநெறியாகிய சரியை முதலாகிய சௌபானங்களையடைந்து, அணுபக்ஷ சம்புபக்ஷம் ஆம் இரு விகற்பமும் - அணுபக்ஷம் சம்புபக்ஷம் என்கிற இரண்டுவேறுபாடுகளையும், மாயாதிசேவையும் - மாயாதிகளுடைய தரிசனத்தையும், அறிந்து - ஐயந்திரிபற வுணர்ந்து, இரண்டு ஒன்று என்னும்-இரண்டு ஒன்று என்கிற, ஓர்-ஒப்பற்ற, மானதம் விகற்பம் அற-மனோ விகற்பம் அற்றொழிய, வென்றுநிற்பது - ஜயித்துநிற்பதே, நமது மரபு என்ற-நமதுமரபென்றுரைத்தருளிய, பரமகுருவே - பரமாசாரியனே, மந்த்ரகுருவே என்க.

வி-ரை:—மடைப்பள்ளியில் உண்டிக்குரிய பொருளனைத்து மொருங்கிருப்பதுபோல, முக்கூற்றுப் புறச்சமயத்தவர்கள் அனுட்டித்து நடக்கவேண்டிய அறம் பொருள் இன்பம் என்பனவற்றைப் பொதுநூலாகிய வேதமும் சத்திநிபாதம் வாய்ந்த உத்தமர்களாகிய சித்தாந்திகளுக்குரிய வீடுபேற்றினை ஆகமமும் கூறலின், போனகமிருக்கின்றசாலையிடைவேண்டிய புசித்தற்கிருக்குமதுபோற் புருடர்பெறு தர்மாதிவேதமுடனாகமம்புகலும் என்றனர். அறம் பொருள் இன்பம் வீடாகிய புருஷார்த்தம் நான்கில் நான்காவதாகிய வீட்டினையடைவதே சிறந்த செந்நெறியாதலின், ஞானநெறி முக்கியநெறி என்றனர்.

இதனைக் காட்சி அனுமானம் ஆகமம் முதலிய அளவைகளானன்றியுண்மை தேறக்கூடாதாகலின், காட்சியனுமானமுதல் நாலுவிதங்கடேர்ந்து என்

ளர்." இராகமறியா ரிசைப்பயன் றானறியார், தாரதாமறியார் சற்காரியமறி ர, ரோராரளவை யொருபயனுந்தானறியா, ராராய்ந்தளவை யறிந்து கொள்ளீ ர" என்றகூறற்காண்க. அன்றியும் அளவையென்பது பிரமாணம், பிரமா ணத்தின் சாமான்னிய லட்சணம் சம்சய விபரியஸ்மிருதி.வியதிரக்தையான ன்மசிற்சத்தி, இச் சிற்சத்தியினைக் கொண்டே வேதாகமங்களினுண்மையறி வேண்டு மாகலினும், காட்சி யனுமானமுதல் நன்றுவிளங்க டேர்ந்து என்ற ர். பௌஷ்கரம் "சம்சயாதி விநிர்முக்தா சிச்சக்திரமான் மிஷ்யத" என்ற னுற் காண்க.

காட்சியாவது நிருவிகற்பவுணர்வைத் தனக்கு முன்னாகக்கொண்டு ஐய ணர்வும் விபரீதவுணர்வுமின்றி விடயங்களை நேரேயறிவதாகிய ஆன்மாவி டைய சிற்சத்தி. அனுமானமாவது நேரேயறியப்படுவதுமன்றிச் சாதித் ப் பெறற்பாலதாய்மறைந்து நின்றபொருளை அதனைவிட்டுநீங்காது யாண்டு டனாய் நிகழு மேதுவைக்கொண்டு அவ்வாறு உணர்வதாகிய ஆன்மாவினு டைய சிற்சத்தி. ஆகமமாவது மேலிரண்டாலுமறியப்படாத பொருள்களை நல்வன்வாக்யங்கொண்டு அவ்வாறுணரச்செய்வதாகிய ஆன்மாவினுடைய ற்சத்தி. சிவஞானசித்தியார் "மாசறுகாட்சியையந்திரிவின்றிவிகற்பமுன்னு, ாசறவறிவதாகுமனு மானமவினுபாவம் பேசறுமேதுக்கொண்டு மறைபொரு பெறுவதாகும், காசறுமுறையிம்மானத்தடங்கிடாப்பொருளைக் காட்டும்" ன்றகூறற்காண்க. மற்று மிவற்றின்விரிவை தருக்கசோபானம் என்னுநூ ற்காண்க.

நான்குசாதனமாவன-நித்தியாநித்யவஸ்து விவேகம், இகமுத்ரார்த்தபல பாகவிராகம், சமாதிசட்கசம்பத்தி, முமூட்சுத்துவமென்னுநான்குமாம். நித்தி ாநித்யவஸ்து விவேகமாவது-பரமான்மாநித்தியமெனன்றும், தேகாதிப்பிரபஞ் ம் காரியப்பாட்டால் அநித்யமென்றும் பகுத்தறிதல். இகமுத்திரார்த்த பல பாகவிராகமாவது இகலோக பரலோகங்களிலுள்ள போகங்களில் அநித்த ாக்காதிதோடதரிசனத்தால் வாந்தாசனமூத்திர புரீஷங்களிற்போல அருவரு புற்று ஆசைவிடுவது. சமாதிசட்க சம்பத்தியாவது சமம் தமம் உபரதி திதீ க்ஷ சமாதான ம் சிரத்தை முதலியவற்றின் பிராப்தி. முமூட்சுத்துவமாவது ப்பிராப்தியும் அனர்த்தநிவிர்த்தியும் மோட்சத்திற் கேதுவாகலின் இவற் ின்கணுளதாகுமிச்சை.

இங்குக் குறித்தசாதனங்களில் நான்காவது சாதனம் முமூட்சுத்துவம் இக் முமூட்சுத்துவமெய்தினவன் முமூட்சு. இந்த முமூட்சுவாலடையத்தக்க தல் மோட்சம் சிவசாலோக்கியம், இரண்டாவதுமோட்சம் சிவசாமீப்பியம் ன்றாவதுமோட்சம் சிவசாரூப்பியம். நான்காவதுமோட்சம் சிவசாயுச்யம் துவே முடிந்தமோட்சம். இவைகளைப்பெறுதற்குச்சரியையாதிகளைச் செய் தல் வேண்டியது. ஆகலின் சாதன சதுஷ்டயமடைந்தபின்னர் சரியையா

திகளடையவேண்டுமென்பார். நான்குசாதன மோர்ந்திட்டான நெரியாஞ்சரியையாதி என்றனர். இதனற் சிறப்பு நூலாகிய ஆகமங்களிற் குறித்த சாதனங்கட்குப் பொது நூலாகியவேதங்களிற்குறித்த சாதனங்கள் சோபான மென்பதாயிற்று.

அணுபட்சமாவது ஆன்மாக்கள் தாமே பக்குவப்பட்டடையுநெறி. இது பிரேரகப்படுபவையென்றும், அபரமென்றுங் கூறுவர். சம்புபட்சமாவது இறைவன்திருத்தப் பக்குவப்பட்டடையுநெறி. இது பிரேரக்கருவியென்றும் பரமென்றுங் கூறுவர்.

மாயாதிசேவையாவது மாயையின்காரியமாகிய தத்துவதரிசனமாம், ஆதியென்றதனல் ஆன்மதரிசனமும், பரதரிசனமுமடங்கும். இம்மூன்றினையுங் கூறவே இத்தரிசனங்கட்கு முன்னும் பின்னுமா யமைந்துள்ள, தத்துவ ரூபமும், தத்துவசுத்தியும், ஆன்மரூபமும், ஆன்மசுத்தியும், பரரூபமும், பரயோகமும், பரபோகமு மேற்படும். இவையே தசகாரியமாம். இத்தசகாரியத்தின் உண்மைதேர்ந்தவரே மனவிகற்பஞ் சிறிதுமின்றி ஏகமிரண்டென்னாத அத்துவித உண்மையினை யறிவராகலின், மாயாதிசேவையு மறிந் திரண்டொன்றென்னு மோர்மானதவிகற்பமற என்றனர்.

தத்துவரூபமாவது பிருதிவிமுதல் நாதமீறான முப்பத்தாறு தத்துவங்களும், தனுவும், கரணமும் புவனமும், போகமும், செயலும், பிரேரகமுமாய் நின்றபொருளுங், குணமும், தொழிலும் தனக்குவேறாகக்காண்பது.

தத்துவதரிசனமாவது, பிருதிவிமுதல் நாதமீறான முப்பத்தாறு தத்துவங்களையும் சுத்தமாயா அசுத்தமாயா மலங்களினது காரியமென்றுஞ் சடபதார்த்தமென்றுந் தன்னாலேயறியப்பட்டதென்றுந் தன்னறிவிலே விளங்கக் காண்பது.

தத்துவசுத்தியாவது பிருதிவிமுதல் நாதமீறான முப்பத்தாறு தத்துவங்களின் விகற்பமாகிய சுட்டறிவுகளிற் றனில்லாமல் தத்துவங்கள் தன்னைத்தாக்காமல் கானலைத்தண்ணீரென்று கண்டவன் கானலென்றறிந்தவிடத்துத் திரும்ப விரும்பாததுபோலவும், சொப்பனத்தில் யானையேறி மாலையிடக்கண்டவன் விழித்தவிடத்து மெய்யாகக்காணமல் பொய்யாகக்கண்டதுபோலவும், தன்னறிவிலேகண்டு நீங்கித் தானசைவின்றி யன்னியனு யெங்குநிறைபவனுய் நித்தியமாயறிவாயுள்ள முன்றைமையை யறிந்து நிற்பது.

ஆன்மரூபமாவது தேசிகமூர்த்தியினுடைய அனுக்ரகத்தினலே தன்னையுந் தன்னிடத்திலே பெந்தமாயிருக்கிற தத்துவவிவகாரங்களையு மெவ்விடத்திலுந் தோன்றமல் சகசமாய் மறைந்துநின்ற வாணவ மலத்தினையும்.

க்கத் தானறியு முறைமையும் அவனது ஞான மறிவுக்கறிவாய் நின்று பகரிக்கிற முறைமையுந் தன்னறிவிலே விளங்கக்காண்பது.

ஆன்மதரிசனமாவது ஆன்மசெய்தி யெவ்விடத்திலுந் தோன்றமல் தத்துவ தாத்திகங்களை யென்னுடையதென்றும், பசுஞானத்தினை யானென்று நின்ற வசத்திய போதந்நீங்கிப் பழைய சிற்றறிவாகிய சுட்டுப்போதங் கழன்று நிற்பது.

ஆன்மசுத்தியாவது தனக்கெனச் செய்தியில்லாதவான்மா தன்னுடைய சுட்டறிவெவ்விடத்திலுந் தோன்றமற்கெட்டுத் தன்னிடத்திலே விளங்கப்பட்ட அனுக்கிரகஞானத்திலே தற்பூரணமெல்லாமடங்கித் தனது செய்தியெல்லா மனுக்கிரகத்தினுடைய செய்தியாய் தன்னை யந்தஞானமடக்கின முறைமையுந் தானந்த ஞானத்திலே யடங்கின முறைமையு மெவ்விடத்திலுந் தோன்றமல் தேகத்தினலே தேகமேதானயுந் தானே தேகமாயுநின்ற முறைபோலச் சிவமேதானய் நிற்கவந்தவவசரம்.

பரரூபமாவது சடசித்துக்களாகிய தாவரசங்கமங்களு ளெல்லாந்தான் வேறறநின்று பெருமைபொருந்தி யிருக்கப்பட்ட காருண்ணியசத்தியே தனக்குத் திருமேனியாகி ஆணவமலஞ் சகசமாயிருக்கப்பட்ட வான்மாக்கள் பாகபேதங்களைத் திருவுளத்தடைந்துத் தன திச்சாஞானக்கிரியையின் செய்தியாகிய மாயாதத்வங்களினல் சிருட்டித்தும் திதித்தும் சங்கரித்து மலபாக வழியிலே இந்தத் தத்துவங்கள் வேறும்படிக்குச் சத்திநிபாதத்தை விளைவித்துச் சத்தினிபாதத்தின் வழியிலேபுறம்பே கட்புலனுக்குத்தோன்ற மானிடச்சட்டை சாத்தி யெழுந்தருளிவந்துதான் வேறற நிற்கிற முறைமையைத் தருகின்றவன், ஆன்மாக்களுக்கெல்லாம் அறிவிற் கறிவாயிருக்கிற சிவனே யென்று பிரதிக்கினை யேது திட்டாந்தங்களினலே மயக்கவிகற்பமறத் தன்னறிவிலே விளங்கக்கண்டு நிற்பது.

பரதரிசனமாவது ஆன்மாவென்பதெவ்விடத்திலுந் தோன்றமலென்னதென்றும் யானென்றும் நின்ற வசத்திய போத நீங்கத் தேசிக மூர்த்தத்தினனுக்கிரகஞானம் பிரகாசித்து நின்றவபரஞ்சிவனுடைய பாதமாம். தன்னை யுணர்த்தும் பகுதியாகத்தாக்குவதான விஷயபோகங்களை யகண்டவனதுவாய் நோக்குமிடமெல்லமவ னனுக்கிரகத்தையே கண்டனுபவிப்ப தவனது திருவுகமாம். அந்த வனுக்கிரகத்திலேதற்செயல் தோன்றமல் பரவசப்படுவ தவனது திருமுடியாமென்றறிந்து இந்தவுண்மையைச் சந்தேக விகற்பமறவுள்ளபடி விசாரித்தறிந்து இரவுபகலில்லாமல் சத்தியமாயுள்ள பொருள் வேறொன்றில்லையென்று தெளிந்து என்னதியானென்னும் விகற்பமாய் பிருதிவிமுதல் நாதமீறுகச்சொல்லப்பட்ட சகலவித்தையிலும் பொருந்தாமல் இந்தக்கருவிகள் நீங்கினல் தனக்குள்ளசகசமல பாகிய கேவலாவத்

னையிலும் பொருந்தாமல் இந்தக்கேவல சகல மிரண்டுநீங்கினவிடத்து விளங்குவதான போதபூரணமாகிய அகம் பிரமஞானத்திலும் பொருந்தாமல் தேசிகமூர்த்தத்தின் அனுக்கிரகஞானத்திலே தற்பூரணமெல்லா மடங்கித் தனது செய்தியெல்லா மவனனுக்கிரகஞானத்தினது செய்தியாய் அறிதற் கருதாகிய மேலான பூர்ணவின்பந் தோன்றாமல் ஏகதேசவியாபாரமாகிய தனுகரணாதியின்பமே தோன்ற அந்த வின்பங்களையே மெய்யென்றனுபவித்து நின்ற முறைமைபோலத் தனுகரணாதியின்ப மெவ்விடத்திலும் தோன்றாமல் பூரணவின்பத்தொடர்ச்சியாகிய தேசிகமூர்த்தத்தி னனுக்கிரகஞானத்தை யெவ்விடத்திலுங் கண்டனுபவிப்பது.

பரயேசகமாவது சடசித்துக்களிரண்டினுமின்றி விளக்குவதாகிய இதாகிதங்களுக்கேற்ற சத்தாதி விஷயங்களிலே யெந்தவிஷயங்கள் வந்து தாக்கினாலும், அந்தவிஷயங்களை யெதிரிட்டுப்பார்த்து இது மாயாகாரியமான தனுகரண புவன போகங்களினது விகற்பமென்றும் இந்தவிஷயங்களினின்றும் விளங்குவதாகிய இதாகிதங்கள் கன்மத்தினது விகற்பமென்றுங்கண்டு தனக்கெனச் சற்றுஞ் செய்தியில்லாத சடரூபமாகையினாலே தானாச்செயற்படவறியாது அந்தவிஷயங்களையதுவதுவாகப்புசிக்குமான் மாவானவன் நித்தியனாய்ப் பூரணனாயறிவாயிருந்தாலுந் தானாக வொன்றையு மறிதற்கறிவில்லை யென்னுமுறைமையை யுள்ளபடிதரிசித்து, அந்த வான்மாவினது அறிவிற்கறிவாய் நின்று இந்த விஷயபோகங்களை யிடைவிடாமற் பாகமறிந்துணர்த்தி நிற்கிற திருவருளையு முள்ளபடி தரிசித்து அந்தவருளினது நிறைவெல்லாந் தனது வடிவாகவுடைய பூரணவின்பமெனக் கண்டித்துக் குருமுகூர்த்தமா யெழுந்தருளி மாணிடச்சட்டைதரித்துவந்துபதேசித்தவனுக்கிரகத்தையுள்ளபடி தரிசித்து இவ்விடத்திலேவந்து பொருந்தப்பட்ட சத்தாதி விஷயங்களையெல்லா மந்த வனுக்கிரகத்தினாலேபொருந்திப்பார்த்து இந்தவிஷயபோகங்களின் வழித்தாய்த் தீவினையைச் செய்விக்கிறது மனுக்கிரகமாகியதிருவள்தானே, நல்வினையைச்செய்விக்கிறது மந்தத் திரு வருளே, இந்த நன்மை தீமைகளை யறியும்படிக்குப் புசிப்பாகிவந்தவிஷயபேதங்களு மவ்வனுக்கிரகமாகிய வருள்தானேயென்று யுள்ளபடிதரிசித்து இந்தமுறையன்றிபிலே சித்தாகிய வான்மவர்க்கத்துக்கும் சடமாகிய பாசசாலங்களுக்கு மொன்றையொன் றறியவு மொன்றையொன்று பொருந்தவு மொருசற்றுஞ் செயலில்லையென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து அந்தப் பொருளோடிசைவது.

பரபோகமாவது எத்தகைய செய்திகளைச் செய்திடினும் தற்செயலெவ்விடத்திலுந் தோன்றும லனுக்கிரகமாகியவருணிறைவிலே வேறறநிற்கில் அந்தவருளிற் றமுகன்மையாகிய நேய மவனதறிவுபூரணமெல்லாந்தனதுவடிவாக்கொண்டு தானறிந்தவறிவு பூரணத்திற்கெல்லா முயிராய் இவனதறிவு தொழிலாகிய விந்திரியபோகங்களாய் வரும் புசிப்புந்தொழிலுந்தனதுபுசிப்புந்தொழிலுமாகவே புசித்துத்தொழிற்படும் ஞானவிதமாகிய போகங்களையெல்லாமவ

க்குத் தனது பூரணவின்பமாகிய சேவடிவாகவேகாட்டி இவனதறிவு பூர
மெல்லாந் தனதின்பப் பூரணமாகவும் தனதின்பப் பூரணமெல்லா மிவனே
றிவு பூரணமாகவும்வேறறத்தோன்றி நின்று தனதின்ப நிறைவெல்லாமமிவ
து போகபூரணத்தையழித்து நிற்பது.

அத்துவித உண்மையினை ஏகான்மவாதிகள் ஒன்றேயென்றும் துவைதி
ர் இரண்டேயென்றுஞ் சாதிப்பர். சுத்தாத்விதசித்தாந்த வைதிகசைவர்கள்
ன்றென்றும் இரண்டென்றும் கூறத்தொணியாது அத்துவிதமேயென்பர் ஆக
ன், இரண்டொன்றென்னுமோர் மானதவிகற்பமற என்றனர். ஒழிவிலொ
க்கம். "ஒன்றனை யென்றனை யேகமிரண், டென்றுமற் சும்மாவிரு
என்று சொன்னான், திருஞான சம்பந்தன் சீகாழிநாட னருளாளன் ஞான
வேதன்" எனவும், திருக்களிற்றுப்படியார். "ஒன்றன் றிரண்டன் றுளதன்
லன்று, நன்றன்று தீதன்று நானன்று-நின்ற, நிலையன்று நீயன்று நின்ன
வுமன்று, தலையன்றடியன்றுதான்" எனவும், வருவனவற்றாற் காண்க. (சக)

கல்லாத வறிவுமேற் கேளாத கேள்வியுங்
கருணைசிறி தேது மில்லாக்
காட்சியுங் கொலைகளவு கட்காம மாட்சியாய்க்
காதலித் திடுநெஞ்சமும்
பொல்லாத பொய்ம்மொழியு மல்லாது நன்மைகள்
பொருந்துகுண மேது மறியேன்
புருஷர்வடிவானதே யல்லாது கனவிலும்
புருஷார்த்த மேது மில்லேன்
எல்லாமறிந்தநீ யறியாத தன்றெனக்
கெவ்வண்ண முய்வண்ணமோ
இருளையிரு ளென்றவர்க் கெளிதா ரகம்பெறு
மெனக்குநின் னருடாரகம்
வல்லா னெனும்பெய ருனக்குள்ள கோவிந்த
வஞ்சகனை யாள நினையாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(இ - ள்) கல்லாத அறிவும்-(பதிநூல்களை) கல்லாமல் உண்டாகிற ஞான
ம், மேல்அதற்குமேல்- கேளாதகேள்வியும் (பதிநூல்களைச்) சிரவணஞ்செ

ய்யாதகேள்வியும், சிறிது ஏதும் கருணையில்லாத காட்சியும் - மிகச்சிறிதும் தயையில்லாத அறிவும், கொலை களவு கள்-காமம் கொல்லுதல் திருடுதல் கள்ளுண்டல் பிறர்மனைநயத்தல் ஆகியவினைகளை, மாட்சியா-மேலான பொருள்களாகக்கொண்டு, காதலித்திடும் - அவற்றின்கண் விருப்பத்தைச் செய்கின்ற, நெஞ்சமும்-மனமும், பொல்லாதபொய்ம்மொழியும் - முழுப்பொய்வார்த்தையும், அல்லது-அல்லது நன்மைகள்பொருந்து குணம்-நன்மை பொருந்தியகுணங்கள். ஏதும் அறியேன்-சிறிதுமுணர்ந்திலேன்' புருஷர்வடிவு ஆனதேஅல்லாது-புருஷரூபங்கொண் டதேயன்றி, கனவிலும்-கனவினும்,புருஷார்த்தம் ஏதும் இல்லேன்-புருஷார்த்தம் சிறிதும் உடையனல்லேன், எல்லாம் அறிந்த நீஅறியாதது அன்று-(இது) சர்வஞ்ஞன நீ அறியாதது அல்ல, எனக்கு-அடியேனுக்கு, எவ்வண்ணம் உய்வண்ணமோ-எந்தவகை உய்யும் வகையோ (அறி கிலேன்) இருளை இருள்என்றவர்க்கு-இருளை இருளென்றுகொண்டவர்களுக்கு, ஒளிதாரகம் - ஒளியானது ஆதாரமாயிருக்கும், (அதுபோல) பெறும் எனக்கு (உன்னை) யடைந்த எனக்கு, நின் அருள் தாரகம் - உன்திருவருளே ஆதாரம் ஆதும், வல்லான் என்னும் பெயர்-சர்வசத்தன் என்னும் பெயரானது, உனக்கேயுள்ளது - உனக்கே யுண்டயிருக்கிறது, (ஆதலால்) வஞ்சகனை ஆளநினையாய் - இந்தவஞ்சகனை ஆண்டருள நினைவாயாமந்த்ரகுருவே. என்க."

வி-ரை. பதிநூல்களைக்கல்லாது பசுநூல்களைப்பாசநூல்களைக்கற்றதனாலுண்டாகும் ஞானம் ஞானமன்றென்பார் கல்லாதவரியும் என்றும், அங்ஙனம் பதிஞானிகள் பாற்சென்று கேளாதுபசுஞானிகள் பாசஞானிகள் பாற்சென்று கேட்கும்கேள்விகள் கேள்வியன்றென்பார் கேளாதகேள்வியும் என்றனர். சிவஞானசித்தியார். வேதசாத்திரமிருதி புராணகலைஞானம் விருப்பசபை வைகரிபாதித்திறங்கண்மேலா, நாதமுடி வானவெல்லாம் பாசஞானந் தணுகியான்மாவிவைகீழ் நாடலாலே, காதலினுன் பிரமமென்னுஞானங் கருது பசுஞானமிவனுடலிற் கட்டுண்டோதியுணர்ந் தொன்றென்றுவுணர்ந்திடலாற் பசுவாமொன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன்காணே," எனவும் சிவப்பிரகாசம்." பாசமாஞானத்தாலும் படர்பசுஞானத்தாலும், மீசனையரிய வொண்ணுதிறையருள்ஞானநண்ணித், தேசுறுமதனுன்முன்னைசிற்றறிவொழிந்து சேர்ந்து, நேசமோடு யர்பரத்து நிர்பது ஞானநிட்டை," எனவும் நாலடியார். " அலகுசால் கற்பினறிவநூய்கல்லா " தூலதநூ லோதுவதெல்லாம், கலகல-கூஉந்துணையல்லாற்கொண்டு தடுமாற்றம், போ ஒந்துணையறிவாரில்" எனவும் வருவனவற்றாற்காண்க.

அருளைப்பெற்றிருப்பது அறஞர்கள் தன்மையாதலின் பெற்றிராமையைக்கருணை சிறிதுமில்லாக்காட்சியும் என்றனர். திருக்குறள். "அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை, யிருள் சேர்ந்த வின்னுவுலகம் புகல்." என்றதனுலறிகண்க. சொல்லாமை, கள்ளாமை கள்ளுண்ணுமை, பிறன்மனை நயவாமை

ன்பனவாகி இவைகளை மேற்கொண் டொழுகாமல் இவற்றின் மறுதலைகளை மற்கொண் டொழுகினேனென்பார், கொலைகளவு கட்காமம் மாட்சியாகக்கா த்திடு நெஞ்சமும் என்றனர். இவையாவுந் தீதென்பன திருக்குறள். "அற னையாதெனிற் கொல்லாமை கோறல், பிறவினை யெல்லாந் தரும்" எனவும், கள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன் றுங்,கள்ளாமை காக்கதன் னெஞ்சு" எனவும், "உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங், கட் மல் கொண்டொழுகுவார்." எனவும், "பிறன் பொருளாற்பெட்டொழுகும் பதமை ஞாலத், தறம்பொருள் கண்டார்கணில்" எனவும் வருவனவற்றாற் ண்க. பொய்மையே எப்பெருந்தீமைக்கு மிடமாதலின், பொல்லாதபொய்ம் மாழியும் என்றனர். திருக்குறள். "தன்னெஞ்சறிவது பொய்யற்க பொய்த்த ன், றன்னெஞ்சே தன்னைச்சுடும்" என்றதனாற்காண்க.

மானிடங் கொண்டதன்றிப் புருடார்த்தமென்பது சிறிது மில்லேனென் ர், கனவினு புருடார்த்த மேதுமில்லேன் என்றனர். புருடார்த்தமாவன- றம், பொருள், இன்பம், வீடெனநான்காம். இவை புருஷார்த்த சதுஷ் ய மெனப்படும். எல்லாமறிந்த நீ யென்றதனால் - முதல்வனுடைய சர்வஞ் த்துவமெனப்படு முற்று முணர்தலும், வல்லானென்றதனால் - அனந்த சத்தி யனப்படும் அளவிலாற்ற லுடைமையுங் கூறப்பட்டன.

ஆதித்தன் தன்னுடைய கிரணங்களினாலே யிருளையோட்டிக் கண்ணுக்குக் ட்சி கொடுக்குமாறுபோல, முதல்வன், தன்னிடத்து நிலைபெற்றிருக்கின்ற ான்மாக்கட்கு உண்டாகிய வாணவாதி தோடத்தினைப்போக்கி ஞானத்தி னப் பிரகாசிக்கச் செய்வனாதலின், இருளையிருளென்றவர்க் கொளிதாரகம் பறமெனக்கு நின்னருடாரகம் என்றனர். சிவஞான சித்தியார். "அருளது த்தியாகு மரன்றனக்கருளையின்றித், தெருள்சிவமில்லையந்தச் சிவமின்றிச்சத் பில்லை, மருளினையருளால் வாட்டி மன்னுயிர்க்களிப்பன் கண்கட்கிருளினை யாளியாலோட்டுமிரவியைப்போலவீசன்" என்றதனாற்காண்க. (சஉ)

தானத மிலங்குபுலி பசுவொடு குலாவுநின்
கண்காண மதயானை நீ
கைகாட்ட வுங்கைபா னெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக வேந்தி வருமே
போனக மமைந்ததென வக்காம தேனுநின்
பொன்னடியி னின்று சொலுமே
புவிராஜர் கவிராஜர் தவராஜ னென்னுனைப்
போற்றிஜய போற்றி யென்பார்
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களுமுன்
நட்பினை விரும்புவார் சுகர்வாம தேவர்முதன்
ஞானிகளு முனைமெச்சுவார்

வானகமு மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடுமுன்
மகிமையது சொல்லவெளிதோ
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே. ௯

(இ-ள்.) கானகம் இலங்குபுலி-காட்டில் சஞ்சரிக்கின்றபுலியானது, பசுவொடு குலாவும் - பசுவோடு கூடி விளையாடும். நின்கண்காண - உன்கண் காணும்படி, மதயானை-மதயானையானது, நீகைகாட்டவும்-நீ கைகாட்டின அளவில், கையால் - துதிக்கையால், நெகிடிக்கு என - நெகிடிக்காக, பெரியகட்டை - பெருங்கட்டைகளை, மிகஏந்திவரும் - மிகவும் சுமந்துவரும். அக்காமதேனு - அந்தக்காமதேனுவானது, நின் பொன் அடியில் நின்று - உன் திருவடிக்கீழ் நின்று, போனகம் அமைந்ததுஎன சொல்லும் - உணவு சித்தமாயிருக்கிறதென்று சொல்லா நிற்கும். புவிராஜர் - பூலோகத்தரசரும், கவிராஜர் வித்துவான்களும், உன்னை - தேவரீரை, தவராஜன் என்று - தபோநிதியென்று, போற்றி - நமஸ்காரம், ஜய - ஜயவிஜயீபவ, போற்றி - நமஸ்காரம், என்பர்-என்றுபுகழ்ந்துரைப்பார்கள். ஞான கருணா காமுகம்-ஞானத்திற்கும் கருணைக்கும் பிறப்பிடமாயிருக்கிற (உனது) திருமுகத்தினை, கண்டபோதிலே - கண்டபொழுதிற்றானே, நவநாத சித்தர்களும் - சத்தியநாதர் முதலிய ஒன்பது சித்தர்களும், உன் நட்பினைவிரும்புவார் - உனது சிநேகிதத்தை யிச்சிப்பார்கள். சுகர்வாமதேவர் முதல் ஞானிகளும் - சுகர்வாமதேவர்முதலிய ஞானவான்களும், உன்னை மெச்சுவார் - உன்னைக்கொண்டாடுவார்கள். வானகமும் மண்ணகமும்வந்து - விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் வந்து, எதிர்வணங்கிடும் - எதிரே நின்று தொழுகின்ற, உன்மகிமையது-உன் பெருமையாகிய அதனை, சொல்ல எளிதோ - புகழ்ந்து சொல்லுதற்கு எளிதாகுமோ, மந்த்ரகுருவே. என்க.

(வி-ரை.) திருவருட்பெருஞ்செல்வராகிய தம்முடைய பரமாச்சாரிய சந்நிதானப் பெருமையைக் கூறியமுகத்தால், சிவஞானிகளுக்குள்ளஎல்லா நல்ல தன்மையை விளக்கினர். எத்தகைய விரோதமும் அவர்சந்நிதானத்தில் நடவாதென்பார், கானகமிலங்கு புலி பசுவொடுகுலாவும் என்றும், நெகிடியைக் கண்டமாத்திரத்தில் பயப்படும் யானை அவர் சந்நிதானத்தில் அஞ்சாது அந்நெகிடிக்காகக் கட்டையை யேந்திவருமென்பார், மதயானை நீ கைகாட்டவும் கையால் நெகிடிக்கெனப்பெரிய கட்டைமிகவேந்திவரும்என்றும், எத்தகைய அருமையான பொருளும் அவருக்கிலேசாகக் கிடைக்குமென்பார், போனகமமைந்ததென வக்காமதேனு நின்பொன்னடியினின்றுசொலும் என்றும், அவருடைய தவத்திற்கு முன்னே செல்வமுங்கல்வியுந் தலையெடாதென்பார், புவிராஜர் கவிராஜர் தவராஜனென்றுனைப் போற்றிஜயபோற்றி யென்பார் என்றும், அவர் முகத்தினைத்தரிசித்தமாத்திரத்தில் எத்தகையாருமயங்கி வசிமாவாரென்பார், ஞானகருணாகர முகங்கண்ட போதிலே நவநாத சித்தர்

ருமுன்னட்பினை விரும்புவார் என்றும், உண்மைஞானிகளும் அவரைவிய ஷரைப்பாரென்பார், சுகர்வாமதேவர் முதல் ஞானிகளுமுனைமெச்சுவார் என் ம், ஆதலால் அவருக்கேலாத காரியம் எவ்வுலகத்து மில்லையென்பார், வான மும் மண்ணகமும் வந்துதாள்வணங்கும் என்றுங்கூறினர். இதனால் முதல் னருளையடைந்தார் எல்லாம் வல்லவராவ ரென்பதாயிற்று. சிதம்பரச் செய் ட்கோவை. "கரும்புஞ்சுரும்பு மரும்பும் பொரும்படைக்காமர்வில்வேள், ரும்புங்கரைத்துருகச் செய்யுமாலிறும் பூதிதன்றே, விரும்பும் பெரும்புலி ரெம்பி ரானருள் மேவிலொரு, திரும்பும் படைத்தளிக்கு மகிலாண்டத் தாருதியையே," என்றதனுற்காண்க. நெகிடி-தீமூட்டம்.

நவநாதசித்தராவார் சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், வகுளிநாதர், தங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர் ஆகியஇவராம். கர் வாமதேவர் இருவரும் சிவோகம் பாவனையினின்ற பெரியோராவர். (சங)

சருகுசல பக்ஷணிக ளொருகோடி யல்லாற்
சகோர பக்ஷிகள் போலவே
தவளநில வொழுகமிர்த தாரையுண் டழியாத
தன்மைய ரனந்தகோடி
இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத
வேகாந்த மோனஞான
இன்பநிஷ் டையர்கோடி மணிமந்த்ர சித்திநிலை
யெய்தினர்கள் கோடிசூழக்
குருமணியி ழைத்திட்ட சிங்கா தனத்தின்மிசை
கொலுவீற் றிருக்குநின்னைக்
கும்பிட் டனந்தமுறை தெண்டனிட் டென்மனக்
குறையெலாந் தீரும் வண்ணம்
மருமல ரெடுத்துனிரு தாளையர்ச் சிக்கவெனை
வாவென் றழைப்பதெந்நாள்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(இ-ள்.). சருகு சல பக்ஷணிகள் ஒருகோடி - உலர்ந்த இலைகளையும் நீரை ம் உண்டு உயிர்வாழ்வோர் ஒருகோடிபேர்களும், அல்லால் - அல்லாமல், சகோ பக்ஷிகள் போல - சகோரப்பறவைகள் போல, தவளநிலவொழுகு - வெண் மையாகிய சந்திரிகையோடு ஒழுகாநின்ற, அமிர்ததாரை உண்டு - அமிர்த வரு த தாரைகளைப்புசித்து, அழியாத தன்மையர் - இறவாத தன்மையையுடைய ர்கள், அனந்தகோடி - அனேக கோடிபேர்களும், இருவினைகள் அற்று - இரு வினைகள் நீங்கி, இரவுபகல் என்பது அறியாத - இராப்பகல் என்பதை உண

ராத, ஏகாந்த மோனஞானம் - தனிமையும் மௌனமும் ஞானமும் ஆகிய இவைகளையுடைய, இன்பநிஷ்டையர்கோடி - சுகநிஷ்டையை யுடையவர்கள் கோடிபேர்களும், மணிமந்த்ர சித்திநிலை எய்தினர்கள்கோடி - மணிமந்திரசித்திநிலைகளை அடைந்தவர்கள் கோடிபேர்களும், சூழ - சுற்றிநிற்க, குருமணி இழைத்திட்ட - நிறமுள்ள இரத்தினங்களைச்செதுக்கிய, சிங்காதனத்தின் மிசை - சிங்காதனத்தின்மீது, கொலுவீற்றிருக்கும் நின்னை - திருவோலக்கமாக எழுந்தருளியிருக்கு நின்னை, கும்பிட்டு - கைகுவித்து, அனந்தமுறைதெண்டனிட்டு - அனேகந்தரம் நமஸ்காரம்பண்ணி, என்மனக்குறையெல்லாம் - என்முனத்தின்கண்ணவாகிய குறைகளெல்லாம், தீரும்வண்ணம் - நீங்கும்படி மருமலர் எடுத்து - வாசனைபொருந்திய மலர்களை (விதிப்படி) எடுத்து, உன் இருதாளை அர்ச்சிக்க - உன் இரண்டு திருவடிகளையும் அருச்சனை செய்யும்பொருட்டு, என்னை வா என்று அழைப்பது - என்னை வாவென்று தேவரீர் அழைத்தருளுவது, எந்நாள் - எந்தக்காலம், மந்த்ரகுருவே.—என்க,

(வி-ரை.) தவசிகள் சிலர் பசியுற்ற காலத்துப் புறம்பே காணும் உலர்ந்த இலை நீர் முதலிய வுண்டு பசி யாறுவராகலின், சருகுசல பக்ஷணிகளொரு கோடி எனவும், சிலர் அகத்தே பிராணவாயுவால் அக்கினி மண்டலத்தினை மூட்டி எழுப்பிச் சந்திரமண்டலத்தி னின்றுஞ் சிந்தும் அமுதப்பிரவாகத்தை யுண்டு பசியாறுவராகலின், தவளனில வொழுகமிர்த தாரையுண்டழியாத தன்மையரனந்த கோடி எனவும், சிலர் எவ்வித வுணவினையும் விரும்பாது இருவினைக்கேதுவான செயல்களையுஞ் செய்யாது, சகல கேவலமற்ற நிலையில் உண்மைஞானங்கூடி நிற்பாராகலின், இருவினைகளற்றிரவு பகலென்ப தறியாதவேகாந்த மோனஞான இன்பநிஷ்டையர்கோடி எனவுங்கூறினர். சிலர்மணியாலும் மந்திரத்தினாலும் எண்வகைச்சித்தி யடைவராதலின், மணிமந்த்ர சித்திநிலையெய்தினர்கள் கோடி யெனவுங்கூறினர்.

மணியென்பது இரசக்குளிகை. மந்த்ரமென்பது பஞ்சாக்கரம். இவ்விரண்டாலும் சித்திமுதலிய வுண்டாகுமாதலின், மணிமந்த்ர சித்திநிலை யெய்தினர்கள் என்றனர். திருவான்மியூர்ப்புராணம், மருந்தீசப்படலம். "சுத்தமுறு முனிவரனே நீ போந்தாருந் தொல்பொதிகை வரையுமுள வாண்டு காண்பாயித்தகைய சூதமது வாய்க்கப்பெற்றா ரினிய கமனக்குளிகை நன்கு ஞற்றிட் பத்தெனுநற்றிசைகளெலா நொடிக்குள்ளாப் படர்ந்திடுவர் மலைநிகர்மாழை குவிப்பர், சித்தியெட்டு மடைந்திடுவரிவர்கட் கேலாச்செயலதுதானென் மிலையுலக மூன்றும்" எனவும், "ஐந்தெழுத்தானிலவுநன் மனுநான்கென்னருமறைக ணனந்தலை யேய்ந்தமலை செய்யு, மைந்தெழுத்தானிறைந்ததனை யாய்ந்து நோக்கி னடங்கும்மப் பதிபசுபாசங்கண் மூன்று, மைந்தெழுத்தி லேவந் சத்தகோடி யாகியெங் கணுநவலு மந்திரங்க, ளைந்தெழுத்திற் பரஞானப் பயதாய வபரகலையாமுற்று மடங்கி நிற்கும்" எனவும் வருவனவற்றாற்காண்க

சித்திநிலை பெற்றவர்களாவார் - அஷ்டமாசித்திகைவரப்பெற்றவர். அவை வருமாறு ஆன்மாப்போலாதல் அது அணிமா, மகத்துவமாதலால் அது மகிமா

ன்னுடன் கண்டிப்பின்றாய்க் கண்டிப்புள்ளவற்றை யுருவவல்லவனாதல் அது ரிமா, இலகுத்துவமாதல் அது இலகிமா, வேண்டுவனவடைதல் அது பிராத் தி, நிறையுளனாதல் அது பிரகாமியம், ஆட்சியுளனாதல் அது ஈசத்துவம், எல் லாந் தன்வசமாக்கவல்லவனாதல் அது வசித்துவமாம்.திருவிளையாடற்புராணம். அறவுஞ்சிறியவுயிர்தோறும் பரமகாட்டையணுவாய்ச்சென, றுறையுஞ்சிறு மை யணிமாவா முவரிஞால முதன்மேலென், றறையுஞ்சிவாந்தமாறாறு முள் நம் புறனுமகலாதே, நிறையும்பெருமை தனையன்றோ மகிமாவென்று நிரம் ய நூல்." "இலகுமேரு பாரம்போலிருக்கும் யோகி தனையெடுத்தா, லிலகு வான தூலமென விருப்பதில்கி மாவாகுமிலகுவான பரவணுப்போலிருக்கும், யோகி தனையெடுத்தா, லிலகு மேருபாரமென விருப்பதன்றோ கரிமாவாம்." பிலத்திலிருந்தோ னயனுலகிற் புகுதன் மீண்டும் பிலமடைதல், பலத்தின் இருந்த பிராத்தியதாம் பரகாயத்தி னெண்ணுதல்வான், புலத்தி னியங்கலிச்சித் போகமனைத்துந் தானிருக்குந், தலத்தி னினைந்த படிவருதல் பிரகாமியமா தவக்கொடியீர்." "விண்ணிரவி தன்னுடம்பின் வெயிலாலனைத்தும் விளங் தற்போல், மண்ணினுளவாம் பொருள்பலவுங் காலமூன்றும் வானத்தின், ண்ணி னுளவாம் பொருளுந்தன் காயத் தொளியாலிருந்தறித,லெண்ணி லிது மறையொருசார் பிரகா மியமென் றியம்புமால்." "ஈசனென முத்தொழி யுந்தன் னிச்சை வழிசெய் தெழுபுரவித், தேசன்முதற்கோள் பணிகேட்பத் கெய்வ தீசத்துவமாதும், பூசலவுணர் புள்விலங்கு பூதமனிதர் முதலுலகும் பாசவாதியெண்மருந்தின் வசமாக்கொள்கை வசித்துவமாம்." எனவருவன வற்றாற்காண்க.

இங்ஙனங்கூறிய புறப்பற்றொழிந்த தவசிகளும், அகப்பற்றொழிந்த யோ கிகளும் மௌனமுனிவர்களும், அட்டமாசித்தி யடைந்தவர்களுமாகிய எல் லாருந் தமதாசிரியர்க் கிணையில்லையென்பார், சூழக் குருமணி யிழைத்திட்ட சிங்காதனத்தின் மிசை கொலுவீறிருக்கு நின்னை என்றனர்.

முதல்வனுடைய திருவருளையடையாதிருப்பதுவே மனக்குறைஎன்றன . அம்மனக்குறை நீங்கவேண்டுமாயின் ஆசாரியர்சந்நிதானத்தில் அஞ்சலித்துத் தண்டாகாரமாக விழுந்து பணிந்து எழுந்து வாசனையோடுங் கூடிய புட்பங் களைக் கொண்டருச்சனைசெய்யவேண்டுமாகலின்,கும்பிட்டனந்தமுறை தெண் டனிட் டென்மனக் குறையெலாந் தீரும்வண்ணம் மருமலரெடுத்து னிருதாளை யர்ச்சிக்கவெனை வாவென்றழைப்பதெந்நாள் எனவுங்கூறினர். தேவாரம்."பூக் கைக்கொண்டரன் பொன்னடிபோற்றிலார், நாக்கைகொண் டரனுமநவில்கி லார், ஆக்கைக்கேயிரைதேடி யலமந்து,சாக்கைக்கேயிரையாகிக் கழிவரே" என வும், திருவாசகம். "பரந்துபல்லாய்மலரிட்டு முட்டாதடியே யிறைஞ்சி, யிரந்த வெல்லாமெமக்கே பெறலாமென்னு மன்பருள்ளாக், கரந்துநில்லாக் கள்வனே நின்றன் வார்கழற்கன்பெனக்கு, நிரந்தரமாயருளாய் நின்னையேத்த முழுவது மே," எனவும் வருவனவற்றாற்காண்க.

மற்கடப்பாயமாக அடியேனை வலியவந்து தேவரீரையடையச் சிறிதுஞ் சதந்திரமில்லேனாகலின், மார்ச்சால நியாயமாக தேவரீரே யடியேனை வலிய

ஆட்கொள்ள வேண்டுமென்பார், வாவென் றழைப்தெந்நாள் என்றனர். அன்
றியும், வினைவயப்பட்ட ஆன்மாக்கட்கு அவ்வினை யொப்பின் வழித்தாய மல
பரிபாகம் வந்தாலல்லது, ஆசிரியர் படர்க்கையில் வந்தருளியழைத்துத்திரு
வருட்புரியாராகலின், அத்தகைய பக்குவமடியேனுக்கு வருங்கால மெக்கால
மென்பார், எந்நாள் என்றார் எனினு மொக்கும். (சச

ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
வாணவத் தினும் வலிதுகாண்
அறிவினை மயக்கிடு நடுவறிய வொட்டாதி
யாதொன் று தொடினுமதுவாய்த்
தாங்காது மொழிபேசு மரிகரப் பிரமாதி
தம்மொடு சமானமென்னும்
தடையற்ற தேரிலஞ் சுருவாணி போலவே
தன்னிலசை யாது நிற்கும்
ஈங்கா ரெனக்குநிக ரென்னப்ர தாபித்
திராவண்ணு காரமாகி
இதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய்
திருக்குமித னுடனேரமும்
வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(இ-ள்) ஆங்காரம் ஆன - ஆங்காரமாகிய, குலவேட வெம்பேய் - குல
வேடரையொத்த வெவ்விய பேயானது, பாழ்த்த ஆணவத்தினும் வலிது-பா
ழாகிய ஆணவப்பேயினும் வலியது, (அது) அறிவினை மயக்கிடும் - என
னறிவை மயக்கிவிடும். நடு அறியவொட்டாது - நடுவு நிலைமையை அறிய
வொட்டாது, யாதொன்றுதொடினும் - யாதொருபொருளைப்பற்றினும், அது
ஆய் - அதுதானேயாகி நின்று,தாங்காதுமொழிபேசும் - சகிக்காது வார்த்தை
சொல்லும், அரிஹர பிரமாதி தம்மோடு சமானம் என்னும்-விண்டுஉருத்திர
பிரமாதிகளோடு நான் சமமாவேனென்று சொல்லும், தடை அற்ற தேரில்
தடையறச்செலுத்துகின்ற தேரினிடத்து, அஞ்சுறு ஆணிபோல - அச்சாணி
போல, தன்னில் அசையாது நிற்கும் - தன்னிடத் தசைவில்லாய லிருக்கும்,
இங்கு - இவ்வுலகத்தில், எனக்கு நிகர் ஆர் எனப் பிரதாபித்து-எனக்கொப்
யாவரென்று பிரஸ்தாபித்து, இராவணாகாரம் ஆகி - இராவணன் ரூப
கொண்டு, இதயவெளி யெங்கணும் - இதயாகாசமெல்லாம், தன்னரசு நா
செய்து இருக்கும் - தன்னரசு நாடாகச் செய்துகொண்டிருக்கும், இதனோ
டு - இதனுடன், எந்நேரமும்-எப்போதும்,வாங்காநிலாது-நீங்கிநில்லாமல், அடி
மை - உனதடிமையாகிய நான், போராடமுடியுமோ - போர் செய்யமுடி

மா, மௌனோபதேச குருவே - மௌனநிலையினை உபதேசித்தருளுகிற ஆசாரியனே, மந்த்ரகுருவே. என்க.

(வி-ரை-) ஆங்காரமானது - சாத்துவித குணோத்கமாயிருக்கின்ற புத்தியி னின்று மிராசத குணோத்கமா யுற்பவித்து, விஷய பராமரிச புத்தி போதத் திற்கு வேறாகிய ஆன்ம பராமரிச போதகாரணமாய் வித்தியா தத்துவம் பொ ருந்து மிந்திரியங்களினாலே வந்த நிருவிகற்ப ஞானலோசிதமாய் மனச்சங்கற் பிதமாய்ச் சந்தித்தமாயிருக்கிற வஸ்துவில் நானிச்சயம் பண்ணுவேனென் றும், நிருபிப்பேனென்றுங் கர்வசங்கற்ப ஞானக்கிரியா வியாபாரத்தினைப்பண் ணுமாகலின், ஆங்காரமான குலவேடவெம்பேய் என்றனர். ஆணவமலமா னது- இங்ஙனம் யாதொரு கிரியாவியாபாரத்தினையும் பண்ணாது தன்னையுங்கா ட்டாது, தனக்குள்ளே யிருக்கிற ஆன்மா வினையுங் காட்டாது நிற்குமாகலின், ஆங்காரம் ஆணவத்தினும் வலிதுகாண் என்றனர். சிவஞானசித்தியார். "ஆங் காரம் புத்தியின்கண் ணுதித் தகந்தைக்கு வித்தா, யீங்கார்தானென்னோ டொ ப்பாரென்றியா னென்னதென்றே, நீங்காதே நிற்குந்தானு மூன்றதாய் நிகழு மென்பர், வாங்காதபூதாதி வைகாரிகந்தை சதந்தானென்றே" எனவும், திருவ ருட்பயன். "ஒருபொருளுங்காட்டா திரு ளுருவங்காட்டு, மிருபொருளுங்கா ட்டாதிது" எனவும் வருவன வற்றாற் காண்கவும். ஆங்கார மூனேந்துநிற்குமள வும் மெய்யுணர்வு தோன்றற்கிட மின்மையாலும், அம்மெய்யுணர்வு தோன்று ராகவே நடுநிலைமை விளங்கா தாகலினாலும், அறிவினை மயக்கி நடுவெறிய வொ ட்டாது என்றும், எத்தகைய வார்த்தையினும் தனக்கே சுதந்தரம்பாராட்டி வருதலின், அதுவாய்த் தாங்காது மொழிபேசும் என்றும், உலகத்தினைப் படை த்துக் காத்து அழிக்குங் கர்த்தர்களையு மதியாதிருக்கச் செய்தலின், அரிகரப் பிரமாதி தம்மொடு சமானமென்னும் எனவும், தான் இயங்காது நின்று தன் வழியே பொறி முதலியவற்றை யியக்குதலால், தேரிலஞ்சுருவாணி போலவே தன்னிலசையாது நிற்கும் எனவும், எல்லா விந்திரியங்களின் செயல்களையும் தன்வயப்படுத்தித் தன்சொரூபத்தினையே விளக்கிக்காட்டிக்கொண்டிருத்தலின், இராவணாகாரமாகி யிதயவெளியெங்கணுந் தன்னரசு நாடுசெய்திருக்கும் என வும்,இத்தகையகாரியங்களை விளைவிப்பதாகிய அகங்காரத்தோடு எந்நாளும் வாது செய வியலாதென்பார், எந்நேரமும் வாங்காநிலா தடிமை போராடமுடியுமோ எனவுங்கூறினர். ஈண்டு முத்தேவருள் ஒருவராகக்குறித்த அரன் என்பார் குணருத்திரர். முடியுமோ என்றது முடியாதென்றபடி. ஆகலின் இத்தகைய ஆங்காரத்தினை அடியோடே யொழிக்கத்தேவரீர் திருவருள்வேண்டுமென்பது குறிப்பாயடங்கிக் கிடக்கின்றது. (சரு)

பற்றுவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப்
பற்றியுழல் கிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தைபெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறி யேன்றுவிதமோ
சிற்றறிவ தன்றியு மெவரோடு மொருமொழி
திடுக்கென் றுரைத்தபோது

சிந்தைசெவி யாகவே பறையறைய வுதரவெந்
தீநெஞ்ச மளவளாவ
உற்றுணர வுணர்வற்றுன் மத்தவெறி யினர்போல
வுளறுவேன் முத்திமார்க்கம்
உணர்வதெப் படியின்ப துன்பஞ்ச மானமா
யுறுவதெப் படியாயினும்
மற்றெனக் கையநீ சொன்னவொரு வார்த்தையினை
மலையிலக் கெனநம்பினேன்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(இ-ள்.) பற்று-பற்றுதற்குரிய இடம், வெகுவிதம் ஆகி-அனேகவிதங்க ளாகக்கொண்டு, ஒன்றைவிட்டு ஒன்றனைப்பற்றி- ஒன்றைவிட்டு ஒன்றைப்பிடி த்து, உழல்-சுழல்கின்ற, கிருமிபோல - புழுவைப்போல, பாழ் சிந்தைபெற்ற நான்-கொடுமை பாகிய மனத்தினைப்படைத்தநான், வெளியாக - வெளிப்படை யாக, நின் அருள் - உன்திருவருளை, பகர்ந்தும் அறியேன் - புகழ்ந்துமறியேன். துவிதமோசிற்றறிவு - துவிதநிலையென்றாலோ அது சிற்றறிவாய் முடியும், அது அன்றியும்-அதல்லாமலும், எவர் எனும் - யாவராயினும், ஒருமொழி-ஒருசொ ல்லை, திடுக்கென்று உரைத்தபோது-திடுக்கென்று சொன்னகாலத்தில், செவி யேசிந்தையாக - காதேமனமாக, பறை அறைய, பறையறையவும், வெம்-வெவ் விதாகிய, உதரத்தீ-உதராக்கினியானது, நெஞ்சம்அளவளாவ-மனத்தைக்கல க்கும்படி, உற்று-பொருந்துவதனால், உணர உணர்வு அற்று.அறிதற்குரிய அறி வும் அற்று, உன்மத்த வெறியினர்போல-உன்மத்தங்கொண்ட வெறியாளரைப் போல, உளறுவேன்-குளறுவேன் (இப்படிப்பட்டநான்)முத்திமார்க்கம் உணர் வது எப்படி-முத்திநெறியையறிவது எவ்வாறு, இன்பதுன்பம்-சுகதுக்கங்கள் சமானமாய்உறுவது எப்படி-சமானமாகப்பொருந்துவது எவ்வாறு, ஆயினும் ஆனாலும், ஐய-ஐயனே, நீ எனக்குசொன்ன - நீயெனக்குச் சொல்லியருளிய ஒரு வார்த்தையினை-ஒரு சொல்லினை, மலை இலக்கு என நம்பினேன் - மலை யைக் குறியாகக் கொண்டாற்போல நம்பியிருக்கிறேன், மந்த்ரகுருவே என்க

(வி-ரை.)புழுவானது ஓரிடத்தில் நிலையாகத் தங்காது பலவிடங்களை தாவிச் செல்லுதல்போல, மனமோரிடம்பற்றி நில்லாது ஓடுதலான் புழுவினை மனத்திற்கு உவமையாகக்கொண்டு, பற்று வெகுவிதமாகி யொன்றைவிட் டொன்றனைப் பற்றியுழல் கிருமிபோலப் பாழ்ஞ்சிந்தை பெற்ற நான் என வும், இங்ஙனம் மனமானது நிலையுற்றிராததால் திருவருள் மகிமையினை றியேனென்பார், வெளியாக நின்னருள் பகர்ந்து மறியேன் எனவும், சுத்த த்துவித சித்தாந்தவைதிக சைவ செந்நெறியிலே நின்று முதல்வனை அபே மாகக் காணாது பேதமாகக் காண்பது புறச்சமயிகள் கொள்கையாகலின் துவிதமோ சிற்றறிவு எனவும், யாராமொருவர் வெட்டென வொருவா த்தை கூறுமிடத்துச் செவியால்வாங்கி மனத்தானினைத்துத் தக்கவிடைகொ க்கும் பொறுமையின்றிச்சிறிதுஞ்சகியாது கோபாவேசங்கொண்டு பலவா

யாற் பிறர்றி ற்பெருகலின், எவரேனு மொருமொழிநிடுக்கென்றுரை
போது சிந்தைசெவியாகவே பறையறைய வுதரவெந்தீநெஞ்ச மளவளா
டற்றுணர உணர்வுற் றுன்மத்தவெறியினர்போல வுளறுவேன் எனவும்,
த்தகைய நிலைமையினை வாய்ந்த பான்சுத்தாத்துவிதமோக்ஷத்தினையடை
கேதுவாகிய சித்தாந்தவழியைத்தெரிந்துகொள்வதெங்ஙன மென்பார்,
த்திமார்க்கம் உணர்வதெப்படியெனவும், அச்சித்தாந்த செந்நெறியடை
ற்கு இருவினையொப்பு அத்தியாவசியமாகலின், இன்ப துன்பஞ்சமானமா
வதெப்படி எனவும் கூறி, வயிறும் மலையானது அளக்கலாகா வளவு
டயதாதலால் அதனை யிலக்காகக்கொள்வோர் எவ்வழியுஞ் சென்றடைய
மதுபோல, யான் பலவகையினும் வழுவிநடப்பினும் உபதேசித்தபொரு
உய்யுநெறியிற் சேர்க்குமென்றுதுணிந்திருக்கிறேன் என்பார், ஐயநீசொ
ன வொரு வார்த்தையினை மலையிலக் கெனநம்பினேன் எனவும் கூறினர்.
பினேனென்றதனால் ஆசிரியர் கூறிய ஒருவார்த்தையானதுஅருமையினு
நமைபென்ற குறிப்பினை விளக்கினர், திருமந்திரம் "போற்றுகின்றேன்
ழ்ச் சும் புகல் ஞானத்தைத், தேற்றுகின்றேன் சிந்தைநாயகன்சேவடி,
ற்றுகின்றே மறையோ சிவயோகத்தை, யேற்றுகின்றே னெம்பிரா
நரெழுத்தே" என்றதனாற்காண்க. வார்த்தையெனினும், எழுத்தெனி
ம் தம்முளொக்குமோ வெனின், ஓரெழுத்தாயினும் அதுபிறபொருளைக்
ட்டுமே யானல் வார்த்தையேயாம். தொல்காப்பியம். "ஓரெழுத்தொரு
மாழி யீரெழுத்தொருமொழி யிரண்டிறந் திசைக்கும் தொடர்மொழியுள்
-, மூன்றேமொழிநிலை தோன்றியநெறியே" எனவும், நன்னூல். "எழு
த்த தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற் பதமாமதுபகாப் பதம் பகுபத
ன விருபாலாகி யியலுமென்ப" எனவும் வருவன வற்றாற்காண்க. (சஈ)

## கருணாகரக்கடவுள்.

நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
 நிர்விஷய கைவல்யமா
நிஷ்கள வசங்கசஞ் சலரகித நிர்வசன
 நிர்த்தொந்த நித்தமுக்த
தற்பரவிஸ் வாதீத வ்யோமபரி பூரண
 சதானந்த ஞானபகவ
சம்புசிவ சங்கர சர்வேச வென்றுநான்
 சர்வகாலமு நினைவனோ
அற்புதவ கோசர நிவர்த்திபெறு மன்பருக்
 கானந்த பூர்த்தியான
அத்துவித நிச்சய சொரூபசா க்ஷாத்கார
 வனுபூதி யனுகூதமுங்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
 கண்ணா டிருந்தகுருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
 கருணா கரக்கடவுளே

(இ-ள்.) நிர்க்குண-குணரகிதனே, நிராமய-நோயற்றவனே, நிறஞ்சன-களங்கரகிதனே, நிராலம்ப-பற்றுக்கோடில்லாதவனே, நிர்விஷய-விஷயரகிதனே, கைவல்யமாம்-மோக்ஷரூபமான, நிஷ்களா-அரூபமானவனே, அசங்க-கூட்டமில்லாதவனே, சஞ்சலரகித-அசைவற்றவனே, நிர்வசன-மௌனியே, நிர்த்தொந்த-இரண்டாவதில்லாதவனே, நித்த-எப்போதுமுள்ளவனே, முத்த-பாசவிமுக்தனே, தற்பர-ஆன்மப்பிரியனே, விஸ்வாதீத-உலகத்தினைகடந்தவனே, வ்யோமபரிபூரண-பரமாகாசத்தில் நிறைந்திருப்பவனே, சதானந்த-நித்தியானந்தனே, ஞான-ஞானசொரூபனே, பகவ-ஷட்குண சம்பன்னனே, சம்பு-சுகரூபியே, சிவ-மங்களரூபியே, சங்கர-சுகத்தினைச் செய்கிறவனே, சர்வேச-சர்வேச்சுரனே, என்று-என்றுசொல்லி, நான்சர்வகாலநினைவனோ-நான்சதாகாலமும் உன்னைத்தியானிப்பனோ, அற்புத-ஆச்சரியபூதனே, அகோசர-யாராலு மறியப்படாதவனே, நிவர்த்திபெரும் அன்பருக்கு-நிவிர்த்திமார்க்கத்தையடைந்த அடியார்களுக்கு, ஆனந்தபூர்த்தியான சுகநிறைவாகிய, அத்துவித நிச்சய-அத்துவித நிலையாகிய உண்மையினையுடையவனே, சொரூப-சொரூபத்தினது, சாக்ஷாத்கார அநுபூதி-பிரத்தியக்ஷானுபவ, அனுகூதமும்-இரகசியமும், கற்பனையற-யதார்த்தமாக, காணத்தோன்ற, முக்கண்ணுடன்-மூன்றுகண்களோடு,வடநிழற்கண்ணுறு இருக்கல்லாலினிழலி லெழுந்தருளி யிருந்த, குருவே-ஞானசிரியனே, கருத அரிய-நினைத்தற்கரிய,சிற்சபையில்-சிற்றம்பலத்தில், ஆனந்தநிர்த்தம் இடும் ஆனந்த கூத்தாடுகின்ற, கருணாகரக்கடவுளே-கருணைக்குப்பிறப்பிடமாயிருக்கிற கடவுளே என்க.

(வி-ரை) நிர்க்குண என்பது "இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்தனிவனிறைவனென் றெழுதிக்காட்டொணாதே" என்றதாலும், நிராமய என்பது "பெண்ணமருஞ் சடைமுடியார் பேரொன்றில்லார்பிறப்பிலா ரிறப்பிலார் பிணியொன்றில்லார்" என்றதாலும்,நிரஞ்சன என்பது "எரொளிபோயிருநிலனும் விசும்பும் விண்ணுமேழுலகுங் கடந்தப்பானின்ற பேரொளியை "என்றதாலும், நிராலம்ப என்பது, "தானலாதுலகமில்லை" என்றதாலும், நிர்விஷய என்பது "நேரிழையைக்கலந்திருந்தே புலன்களைந்தும்வென்றானை" என்றதாலும், கைவல்ய என்பது, "தந்ததுன் றன்னைக்கொண்டதென் றன்னைச் சங்கரா வார்கொலோ சதுரர் அந்தமொன்றில்லாவானந்தம் பெற்றேன் யாது நீ பெற்றதொன் றென்பால்" என்றதாலும், நிஷ்களா என்பது "அருவமு முருவமுமானாய்போற்றி"என்றதாலும், அசங்கனென்பது, "உற்றாரென்றொருவரையு மில்லாதானை" என்றதாலும், சஞ்சலரகித என்பது "பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப்பான்காண் பொய்யாத பொழிலேழுந்தாங்கி நின்றகற்றூண்காண்"என்றதாலும், நிர்வசன என்பது "சொல்லாமற் சொன்னவரை" என்றதாலும், நிர்த்தொந்த என்பது, "தன்னியல்பால் மற்றொருவரில்லான் கண்டாய்" "ஒருவனென்னும் ஒருவன்காண்க" "ஒருத்தனுருலகங்கட்கொருசுடர்" என்பவைகளாலும், நித்தஎன்பது "காலங்களூழி கண்டிருக்கின்றானே" "ஈறிலாதவீசனொருவனே" என்பவைகளாலும், முத்த என்பது "பந்திப்பரிவாய நீயே என்றும்" "துறவாத கட்டறுத்தசோதியானை" என்பவைகளாலும், விசுவா

...ன்பது, "அண்டத்துக் கப்புறமாய் நின்றார்போலும்" என்றதனு, "வியோமபரிபூரண என்பது, "பாரிலங்குபுனலனல்கால் பரமாகாசம் ...மதிசுருதியுமாய்ப்பரந்தார்போலும்" சிற்பரவியோமமாகுந்தில்லைச்சிற் ...லத்துணின்று, பொற்புறநடஞ் செய்கின்ற பூங்கழல் போற்றி ...ற்றி" என்பவைகளாலும், சதானந்த என்பது, "இன்பனாய் துன்பங் ...கின்றனே" "இன்புருவமன்றோ எழிலுருவம் வேறுளவோ, வின்புருவ ...நிறைக்குமெண்" என்பவைகளாலும், ஞான என்பது, "கற்றிருந்த கலை ...ன மானாய் ...யே" "ஞானப்பெருங்கடலை" என்பவைகளாலும், சம்பு ...பது, "இன்பன்காண்டுன்பங்க ளில்லாதான்காண்" என்றதாலும், சிவ ...பது, "சிச்சல்மணாளனே யென்றேனானே" "சித்தல், மணவாளனென ...கின்றான்காண்" என்பவைகளாலும், சங்கரஎன்பது, "பத்தர்களுக்கின்பம் ...ந்தார்போலும்" என்றதாலும், சர்வேசஎன்பது "மேலோர்க்குமேலாய் ...ற்றி" என்பதாலுங் காண்க.

பகவன் என்பதற்கு ஆறுகுணங்களை யுடையவ என்பது பொருள், ...வையாவன-ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என் ...ர். பகவந்சப்தம் மற்றைத்தேவர்க்கு உபசாரமும், சிவபெருமானுக்கு வா ...வமுமாம். பகவதியென்னும் பெயர்பராசத்தியாருக்கே உரித்தாயிருத் ...னாலறிக. அனுஸ்யூதம் என்னும் வடமொழி அனுசூதமெனத் திரிந் ...து. (சஎ)

மண்ணாதி யைந்தொடு புறத்திலுள கருவியும்
வாக்காதி சுரோத்ராதியும்
வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி
மன்னுசுத் தாதியுடனே
தொண்ணூற்றொ டாறுமற் றுள்ளனவு மௌனியாய்ச்
சொன்னவொரு சொற்கொண்டதே
தூவெளிய தாயகண் டானந்த சுகவாரி
தோற்றுமதை யென்சொல்லுவேன்
பண்ணாரு மிசையினொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்றுதவருப்
பக்குவ விசேஷராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகைகூப்பிக்
கண்ணாறு கரைபுரள நின்றவன் பரையெலாங்
கைவிடாக் காட்சியுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(இ-ள்.) மண்ணாதிஐந்தொடு-மண்முதலாகிய பஞ்சபூதங்களுடன், புறத் ...ள கருவியும்-புறக்கருவிகளும், வாக்காதி சுரோத்ராதியும்-வாக்குமு

தலானகன்மேந்திரியமைந்தும், சுரோத்திரமுதலான ஞானேந்திரியமை
தும், வளர்கின்றசப்தாதி - விருத்தியடையாநின்ற சப்தமுதலானவிஷ
மைந்தும், மனம்ஆதி-மனமுதலான அந்தக்கரணம் நான்கும், கலைஆ
கலைமுதலான வித்தியாதத்துவங்களேழும், மன்னுசுத்தாதியுடனே
நிலைபெற்ற சுத்ததத்துவத்துடனே, தொண்ணூற்றெட்டுஆறும்-தொண்ணூ
ற்றாறும், மற்றுஉள்ளனவும்-வேறுள்ளவைகளும், மௌனியாய்-மௌனரூ
வாகிவந்து, சொன்ன-தேவரீர் உபதேசித்த, ஒருசொல்கொண்டதே - ஒ
மொழியை உட்கொண்ட அளவிலே, தூவெளியதாய்-பரிசுத்தமான ஆகா
மாகி, அகண்ட ஆனந்த சுகவாரி - இடையறாத இன்பசுகசாகரம், தோற்
மதைஎன்சொல்லுவேன் - காணப்படுவதையென்னென்று சொல்லுகே
பண் ஆரும் இசையினொடு பாடி-பண்ணிறைந்த இராகத்தோடுபாடி, ப
த்து-படித்து, அருள் பான்மை நெறிநின்று-திருவருட் பான்மைவழிநின்
தவறா-பிழையாத, பக்குவ விசேஷர் ஆய்-தீவிரதரபக்குவத்தினை யுடை
வர்களாய், நெக்கு நெக்கு உருகி-நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகி, பணிந்
ழுந்து-தொழுதெழுந்து, இருகைகூப்பி-இரண்டுகைகளைக் குவித்து, க
ஆறு கரைபுரள நின்ற-கண்ணீராலாகிய நதியானது கரைபுரண்டோ
நின்ற, அன்பரையெல்லாம்-அடியார்களையெல்லாம், கைவிடா காட்சி உ
வே - கைவிடாத அற்புத சுற்றமே, கருதரிய சிற்சபையில், என்க.

(வி-ரை) மண்ணாதியைந்தாவன பஞ்சபூதம். அவை பிருதுவி, அப்பு,
யு, வாயு, ஆகாயமென்பன. வாக்காதியென்பது கன்மேந்திரிய மைந்
அவை வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தமென்பன. சுரோத்ராதியெ
பது ஞானேந்திரியமைந்து, அவை தொக்கு, சட்சு, சிங்குவை ஆக்ரா
மென்பன. சப்தாதியென்பது தன்மாத்திரையைந்து, அவை சத்தம், பரிச
உருவம், இரதம், கந்தமென்பன. மனமாதியென்பது அந்தக்கரணங்க
நான்கு அவைமனம், புத்தி, சித்தம், அகங்காரமென்பன. ஆக ஆன்மதத்
வம் இருபத்து நாலு. வராகோபநிடதம் "ஞானேந்திரியாணி பஞ்சைவ
ரோத்ரத்வக்லோசநாதய: கர்மேந்திரியாணி பஞ்சைவ வாக்பாண்யங்கி
யாதயா; க்ரமாத்ப்ராணதயஸ்துபஞ்சைவ பஞ்சசத்பாதயஸ்ததா, மனோ
புத்திர்கங்கார: சித்தஞ் சோதிசதுஷ்டயம்; சதுர்விம் சதிதத்வா நி தாநி
ரம்ம விதோவிது" என்றதனாற்காண்க.

கலையாதி யென்பது வித்தியா தத்துவமேழு அவை காலம், நியதி, கலை
வித்தை, இராகம், புருடன், மாயையென்பன. சுவேதாசுவதரோபநிடத
"காலஸ்வபாவோநியதிர்யத் ருச்சா பூதாநி யோநி புருஷ இதி சிந்த்யப்
என்றதனாற்காண்க.

சுத்தாதி யென்பது சுத்ததத்துவமைந்து அவை சுத்தவித்தை, ஈச்சுர
சதாசிவம், சத்தி, சிவமென்பன, பிருகச்சாபாலோபநிடதம். "சிவம் சக்திஞ்
ஸாதாக்ய மீசம் வித்தியாக்யமேவச" என்றதனாற்காண்க.

தத்துவ முப்பத்தாறெனக் கூறும் இவ்வுபசிட்டதப்பிரமாணங்களைக்கொ ாடு ஆசிரியர், மண்ணாதியைத்தொடு புறத்திலுள கருவியும் வாக்காதிசு ராத்ராதியும், வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி, மன்னுசுத்தாதியு னே என்றதனால், தத்துவமிருபத்து நான்கே யெனச்சாதிக்கும் ஏகான்ம ாதிகளும், பாஞ்சராத்திரிகளு மறுக்கப்பட்டனர்.

தொண்ணூற்றோடாறு என்பது பூதகாரியம் இருபத்தைந்து, வாயுப து, கன்மேந்திரியகாரியமாகிய வசனாதியைந்து, வாக்கு நான்கு, குண ன்று, அகங்காரமூன்று ஆகிய அறுபதும் மேற்கூறிய முப்பத்தாறுமாம்- ற்றும் இவற்றின் விவரங்களைச் சித்தாந்தக்கட்டளை யென்னு நூலிற் ாண்க. (சஅ)

எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
யெல்லாமு னுடையசெயலே
யெங்கணும் வியாபிநீ யென்றுசொலு மியல்பென்
றிருக்காதி வேதமெல்லாம்
சொல்லான் முழக்கியது மிக்கவுப காரமாச்
சொல்லிறந் தவரும்விண்டு
சொன்னவையு மிவைநல்ல குருவான பேருந்
தொகுத்தநெறி தானுமிவையே
அல்லாம லில்லையென நன்று வறிந்தே
னறிந்தபடி நின்று சுகநான்
ஆகாத வண்ணமே யிவ்வண்ண மாயினே
னதுவுநின தருளென்னவே
கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்திநின்
கதிக்குவகை யேதுபுகலாய்
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(இ-ள்.) எல்லாம் உன் அடிமையே - எல்லாரும் உன் னடிமைகளே, ல்லாம் உன் உடைமையே-எல்லாவஸ்துக்களும் உன்பொருள்களே, எல்லா ன்னுடையசெயலே-எல்லாச் செயல்களும் உன்செயல்களே, எங்கணும் யாபிநீ-எவ்விடத்தும் வியாபித்திருப்பவன் நீயே, என்று சொல்லும் இய பு என்று-என்று கூறுமியல்புடையதென்று, இருக்குஆதிவேதம் எல்லாம்- ருக்குமுதலான வேதங்கள்முழுவதும், சொல்லால் முழக்கியது-சொல்லி ல்முழக்கியது, சொல்லிறந்தவரும்- பேச்சிறந்தவர்களாகிய மௌனிக ம், மிக்கஉபகாரம்ஆம்-மிகுந்தஉபகாரமாயெண்ணி, விண்டு சொன்னவை -இவைவிவரித்துச்சொன்னவைகளு மிவைகளே, நல்லகுருவானபேரும் சாரியரானபேரும், தொகுத்த நெறி இவையே அல்லாமல்-தொகுத்து ரத்தமார்க்கங்களும் இவைகளே யன்றி, இல்லையென-வேறில்லையென்று,

நன்று அறிந்தேன்-நன்குணர்ந்தேன், அறிந்தபடி நின்று-உணர்ந்த வண்ணம் நின்று, நான்சுகம் ஆகாதவண்ணம்-நான் இன்புறுமல், இவ்வண்ணம் ஆயினேன்-இப்படியானேன், அதுவும்அதுதானும், நினது அருள்என்ன-உன் திருவருளேயென்று, கல்லாத அறிஞனுக்கு உள்ளே யுணர்த்தினை-கல்லாத வறியேனுக் குள்ளேயறிவித்தாய், கதிக்குவகை எதுபுகலாய்-மோட்சகதிக்கு வழியாது சொல்லாய், கருதரிய சிற்சபையில். என்க.

(வி-ரை.) பிரமன் முதல்பிபீலிகை பரியந்தமுள்ள ஆன்மாச்சுணிறைந்த சகமனைத்து முதல்வனுக்கு அடிமையாதலால், எல்லாமுன்னடிமையே என்றார். தேவாரம் "சகமலாதடிமையில்லைத் தானலாற் றுணையுமில்லை, நகமெலாம் தேயக்கையாலுண் மலர் தொழுதுதூவி, முகமெலாங் கண்ணீர்மல்கமுன்பணிந்தேத்துந்தொண்டர். அகமலாற் கோயிலில்லை யையனையாறனார்க்கே" எனவும், திருவாசகம், "காணூர் புலித்தோலுடைதலையூண் காடுபதி, யானாலவனுக்கிங் காட்படுவாராரேடி, யானாலுங் கேளாயயனும் திருமாலும், வானாடர்கோவும் வழியடியார் சாழலோ" எனவும் வருவனவற்றாற்காண்க.

அனைத்துலகும் பஞ்சகிருத்தியத்துட்பட்டுக் காரியப்படுவன வாகலின் எல்லாமுனுடைமையே என்றனர்: திருவாசகம். "அனைத்துலகு மாக்குகப்பாயழிப்பா யருடருவாய் போக்குவாய்" என்றதனாற் காண்க.

முதல்வன் அசைவித்தாலன்றி யோரணுவு மசையாதாகலின், எல்லாமுனுடைய செயலே என்றார். தேவாரம். "ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே யடக்குவித்தா லாரொருவ ரடங்காதாரே, ஓட்டுவித்தா லாரொருவரோடாதாரே யுருகுவித்தா லாரொருவ ருருகாதாரே, பாட்டுவித்தாலாரொருவர் பாடாதாரே பணிவித்தாலாரொருவர் பணியாதாரே, காட்டுவித்தாலாரொருவர் காணாதாரே காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே" என்றதனாற் காண்க.

பசுபாசங்கள் சுதந்தரமுடையனவல்ல, ஆன்மா சேதனனாயினு மறிவித்தாலன்றி யறியான். பாசஞ்சடமாகலின் அசைவித்தாலன்றி யசையாது. ஆன்மாவுக்குத் தனுகரணங்களை யாக்கிக்கொள்ளவும், பாசத்துக்குத் தனுகரணமாகத்திரிந்து ஆன்மாவை வந்தடையவும் வகையில்லை. ஆன்மாவுக்கு தனுகரணங்களை முதல்வன் கூட்டாதபோது, அதன்ஞானக்கிரியைகள் நிகழமாட்டா, அவன் காரியப்படுத்தாதபோது பாசமுந்தனுகரண முதலியவாகப்பரிணமிக்காது, இப்பசு பாசங்களை யறிவித்தலையும், அசைவித்தலையுமே எல்லாமுனுடைய செயலே என்று கூறினர் அன்றியும், ஒருத்தரறிவியாமல் தனக்கெனவோ ரறிவில்லாத வான்மா அதீதப்பட்டுக் கிடக்கு மவதரத்தில் தானாகத் தத்துவங்களைக்கூட்டி யறியமாட்டான், தனக்கென்ன வோர் காலத்திலு மறிவுற்றுச் சடமாயிருக்கப்பட்ட விந்திரியங்களதீதப்பட்டு கிடக்கிற வான்மாவை யறிந்து கூடமாட்டாது. அங்ஙனமானாலும், தனக்கென்னவோரறிவில்லாத வான்மா பஞ்சவன்னங்களை யடுத்த படிகம்போல

த்துவங்களின் சொரூபமே தனக்கு வடிவாய் நிற்பன். இங்ஙனங் கூடி யின் றன்மையாய் நிற்கிறவனுகையால் தர்க்கு ரூபமுள்ளவனல்ல. ஆனு வைத்தனிற் கூடியறிந்தபடி பெத்தனே யென்னில், தனக்கொருவ ரறி மற்றுனே சர்வத்தைய மறியத்தக்க முதல்வனுலே யான்மா சர்வத்தையும் அறிவியா நிற்பன். ஆன்மா சர்வத்தையு மறிவனென்றது அந்தக்கரணங் ளோடுங்கூடிச் சத்தாதிகளை யறிவனென்றதெனவறிக, சிவப்பிரகாசம் தனக்கெனவறிவில்லாதான் றானிவை யறிந்து சாரான், றனக்கறிவிலாதவா றனறியா சாரா. தனக்கென வறிவிலாதான் றத்துவ வன்னனுபன், தனக்கெனவறிவானுலிச் சகலமு மகருந்தானே " என்றதனுற்காண்க. வன்செயலாலே யாதும் வருமெனத்தேறேன் என்றிவ்வாசிரியர் கூறுவது ஈமுணர்க,

இதனுல் ஆன்மாவிற்கொரு யோக்கியதையு மில்லையெனின், ஆன்மா றிவித்தா லறிந்துகொள்ளுந் தன்மையுடையயதாகலி னதுகூடாது. அன் பும் விதிவிலக்கு ரூபமான வேதசிவாகமங்களை முதல்வனருளிச் செய் மை யென்னை? நிருகாதிகள் நடந்து கொள்ளவேண்டிய முறைமைக் கன்றே. அன்றே. ஆதலின் ஆன்மா வேதாகமங்களில் விதித்தவழிவிட்டு. லக்குவழியிற் சென்றுல் அக்குற்றம்அவ்வான்மாவைச் சேர்ந்ததே எல்லா னுடைய செயலே என்றதனுல் ஆன்மா செய்யுஞ் செயலு முதல்வன் யலென்பது பாதகமாக முடியும்.

"நமஸ்தேருத்ரமன்யவே" என எசுர்வேதமும், "நமோருத்ரமன்யவே" வருக்வேதமும், ருத்ராயசேநமா" எனச்சாமவேதமும், "ருத்ராயஸ்தருத் ர" என அதர்வணவேதமுங் கொண்டாடி நான்கு வேதங்களும் சைவ மயமாக விளங்குதலால் இருக்காதி வேதமெல்லாஞ் சொல்லான் முழக்கி து. என்றனர்

குருபரம்பரையில் உபதேசித்த சித்தாந்தமிதுவே யென்பார்,நல்லகுரு னபேருந் தொகுத்தநெறி தானுமிவையே யல்லாமலில்லை எனவும், இவ் ண்மையினை நன்குதேர்ந்திருந்தும் அச் சுகாரம்பநிலையிற் றலைகூடாது னாளாசாலங்கழித்தேன் என்பார், நன்றாகவறிந்தே னறிந்தபடி நின்றுசுக னுகாரவண்ணமே யிவ்வண்ணமாயினேனவும், அவ்வுண்மையுந் தேவரீர் ருளருள் கூட்டிவைத்தா லல்லது கூடாது என்று முந்தனுக்கு விளக்கினை யன்பார், அது வினதருளென்னவே கல்லாத வறிஞனுக்குள்ளே யுணர்த் னையெனவும்; எளியேனுக்குத் தேவரீரையல்லது பேரானந்த வீட்டினை அப்பவரொவரென்பார் கதிக்குவகையேது புகலாய் எனவுங்கூறினர்.(சக)

பட்டப் பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம்
பக்ஷமோ வெனது பக்ஷம்
பார்த்தவிடமெங்கணுங் கோத்தநிலை குலையாத
பரமவெளி யாகவொருசொற்
றிட்டமுடன் மௌனியா யருள்செய் திருக்கவுஞ்
சேராம லாராகநான்

சிறுவீடு கட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு
தேக்குசிறி யார்கள்போல
நட்டணைய தாக்கற்ற கல்வியும் விவேகமும்
நன்னிலய மாகவுன்னி
நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே
நடுவேமுளைத்த மனதைக்
கட்டவறி யாமலே வாடினே னெப்போது
கருணைக் குரித்தாவனோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(இ-ள்) பட்டப்பகற்பொழுதை- கடும்பகற் காலத்தினை, இருள் என் இருட்காலமென்கிற மருளர்தம் பக்ஷமோ எனது பக்ஷம் -மயக்கவறிவுடையராது பக்ஷந்தானோ எனதுபக்ஷம், பார்த்த இடம் எங்கணும் - கண்ட இடங்களெல்லாம், கோத்தநிலை குலையாது - என்னைவிழுங்கின நிலைகெடாமல் பரமவெளி ஆக - பரமாகாயமாக, ஒருசொல்!ஒருமொழியை; மௌனியா மௌனியாகி, திட்டமுடன் அருள் செய்திருக்கவும் - திருத்தமாயருள்செ திருந்தும், சேராமல் - அதையடையாமல், நான் ஆர் ஆக - என்னை வே யாராகவோ யெண்ணி, சிறுவீடுகட்டி - சிறிய மணல்வீடுகட்டி, அதி அடுசோற்றை உண்டு உண்டு - அதில் சமைத்த மணற்சோற்றினைப்பலகா உண்டாற்போல நடித்து, தேக்குசிறியார்கள் போல - தேக்கெறிகின் சிறுர்கள் போல,நட்டணைய தாக்கற்ற - நடுவு நிலைமையாகக் கற்றுக்கொண்ட, கல்வியும் - கல்வியையும், விவேகமும் - கேள்வியறிவையும், நல்நில மாகவுன்னி-நல்ல நிலையிடமாக நினைத்து, நான் என்று நீயென்று - நானென்றும் நீயென்றும், இரண்டு இல்லை என்ன - இரண்டில்லையென்று துணிந்து, நடுவே முளைத்த மனதை - நடுவிலுண்டான மனத்தினை, கட்ட அறியாமல் - தடைப்படுவதறியாமல், வாடினேன் - மெலிந்தேன், எப்போதுகருணைக்கு உரித்தாவனோ-எக்காலத்தில் உன் கருணைக்குப்பாத்ரமாவேனோ,கருதரிய சிற்சபையில். என்க.

(வி-ரை.) பட்டப்பகற்பொழுதையிருளென்றது, தெளியக்கிடந்த வொன்றினை விபரீதமாகக் கருதுவது. அங்ஙனம் நான் மயங்கேனென்பார், மருளர்தம் பக்ஷமோ வெனது பக்ஷமென்றனர். திருவருளானது ஒன்றுயிருந்தும் அகண்டாகாரபரிபூரணமாய்ச் சர்வான்மாக்களுள்ளும்பிறிவறநின்றுயிர்க்குயிராய் விளங்கிநிற்றலின், பார்த்தவிட மெங்கணுங் கோத்தநிலை குலையாது பரமவெளியாக என்றனர். ஞானமணமாலை. "எங்கெங்கும்பார்த்தாலு மெப்பாலுமுள்ளுறவே, யங்கங்கும் பார்த்தாலு மப்பாலு - மங்காத, மெய்யே யன்பருளமேவியற வாழ்ந்திருக்கு,மையனே நீயலாதார்" என்றதனுற் காண்க. இப்பரிபூரண வுண்மையினை அடியேனனுபவத்திற் காணும்படி எனது பரமாசிரியர் உபதேசித்தாரென்பார், ஒருசொற் றிட்டமுடன் மௌனியா

ன் செய்திருக்கவும் என்றனர், நீமெனமுபதேசிக்கப்பெற்ற பெருமை யும், அவன்வழி யொழுகவேண்டுமென்னு முரிமையையு மறந்து, உலகு கல்வியிலுங் கேள்வியிலுங் காலங்கழித்துச் சிறுவர்களுக்குச் சமான னெனெம்பார். சோமலோராகான் சிறவீடுகட்டியபின், னடுசோற்றை டுண்டு தேக்குசிறியார்கள் போல கட்டளையதாக்கற்ற கல்வியும் விவே ன்னிலபமாகவுன்னி என்றனர். பேரின்பமாகிய முதல்வனிடத்தடங்கி தப்பட்டுப் பேரின்பாத்திரமாய்வாழ்க்கொண்டிருக்கையில்தன்மைமுன் ல தோன்றுதாகையால், நானென்று நீயென்றிரண்டில்லை யென்னவே ன்றனர் தாயுமானார். "அன்னையைப் பின்சென்னை யாளுடையானை யர தப். பொன்னையடைந்து நின்றகொண்டே சென்று புக்கதற் றன்னையுங் காண்கின்றிலேன் சரணம் புயத்தாள் பணித்த, வென்னை காண்கின்றிலெனென்னமாயம் வெளிப்பட்டதே" என்றதனுற்காண்க. சோகம் பாவனை முறைமையாகும். மனதைக்கட்டினலன்றி ஆனந்தா மாகிய முத்தி கைவரா தாதலால். மனதைக் கட்டவறியாமலே வாடி ன் என்றனர். திருவருட்பா|"சித்தந்தெளிவீர்கா, ளத்தனுருரைப், சிரமலர் தூவமுத்திபாகுமே" என்றதனுற்காண்க. சித்தமெனினும் மெனினுமொக்கும். ௫௦

மெய்விடா நாவுள்ள மெய்யரு ளிருந்துநீ
மெய்யான மெய்யையெல்லாம்
மெய்யென வுணர்த்தியது மெய்யிதற் கையமில்லை
மெய்யேது மறியாவெறும்
பொய்விடாப் பொய்யினே னுள்ளத் திருந்துதான்
பொய்யான பொய்யையெல்லாம்
பொய்யென வுண்மை புகலவைத் தாயெனிற்
புன்மையே னென்செய்குவேன்
மைவிடா தெழுநீல கண்டகுரு வேவிஷ்ணு
வடிவான ஞானகுருவே
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே
மதங்கடொறு நின்றகுருவே
கைவிடா தேயென்ற வன்பருக் கன்பாய்க்
கருத்தூ டுணர்த்துகுருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(கு-ரை.) மெய்விடா நாவுள்ள - மெய்யை விடாத நாவினையுடைய, மெய்யர் உள் இருந்து - மெய்யினரிடத்தில் சந்நிதி செய்திருந்து, மெய்யான மெய்யை எல்லாம் - உண்மையான உண்மைப்பொருள்களை யெல்லாம், மெய்யென உணர்த்தியது மெய் - உண்மையாகவிளக்கிக்காட்டினது சத்திய

மே, இதற்கு ஐயம் இல்லை - இதற்குச்சந்தேகமில்லை, மெய் எதும் அறியா உண்மையினைச் சிறிது முணராத, வெறும் பொய்விடா - வெறும் பொய்யைநீங்காத, பொய்யினேன் - பொய்யினையுடையவனாகிய எனது உள்ளதிருந்து - மனத்தின்கண் ணிருந்து, பொய்யான பொய்யை எல்லாம் பொய்யாகிய பொய்ப்பொருள்களை யெல்லாம், பொய் என வண்ணம்-மெய்யென்று சொல்லாதபடி, புகலவைத்தாய் எனின் - (மெய்யென்று) சொல்லும்படி (என்னைநியமித்து) வைத்தனையாயின், புன்மையேன் என் செய்வேன்-அற்பனாகிய நான் என் செய்யவல்லேன், மைவிடாது எழும் நீலகண்டகுருவே - கருமை நீங்காது வளர்கின்றநீலகண்டஉருத்திர வடிவான ஆசிரியனே, விஷ்ணு வடிவு ஆனஞானகுருவே - திருமாலுருவாகிய ஞானாசிரியனே, மலர் மேவி-தாமரையினை யிடமாகப்பொருந்தி, மறை ஓதும் - வேதத்யயநம் பண்ணுகிற,நான்முகக்குருவே-பிரமனுருவாகியவாசிரியனே,மதங்கள் தோறும் நின்றகுருவே-எல்லாச்சமயங்களிலும் (அவரவர் கருதியபடி) நின்ற ஆசிரியனே, கைவிடாதே என்றஅன்பருக்கு - கைவிடவேண்டாமென்று பிரார்த்தித்த அன்பர்கட்கு அன்பு ஆய் - அன்புருவமாகி, கருத்தும் (அவரது) கருத்தினுள், (இருந்து) உணர்த்துகுருவே (அறியவேண்டுவன யாவும்) அறிவித்த ஆசிரியனே, கருதரிய என்க.

(வி-ரை.) பூர்வபுண்ணியவசத்தால் சத்தியத்தினைக்கைகொண்டொழுகுஞ் செந்நெறியாளரிடத்து அதிஷ்டான வியாப்தியாயெழுந்தருளியிருந்து உலகோபகாரமான அனேகஅற்புதச் செய்கைகளை உண்மையாய் விளக்கிக் காட்டினது பிரத்தியட்சம் என்பார் மெய்விடா நாவுள்ளமெய்யருளிருந்து நீ மெய்யான மெய்யை யெல்லாம் மெய்யெனவுணர்த்தியது மெய்யிதற்கையமில்லை என்றனர். கன்மத்தடிப்பால் சத்தியத்தினை யாராயாது பொய்யாகிய பிரபஞ்ச வசமாயுள்ளவனிடத்துதிரோதானசத்தியாயிருந்து அசத்தாகிய தனுகரண புவனபோகங்களைக்கூட்டி அவ்வழியேசிறுத்துவனாகலின், மெய்யேது மறியாவெறும் பொய்விடாப்பொய்யினேனுள்ளத்திருந்துதான் பொய்யான பொய்யையெய்லாம் பொய்யெனு வண்ணமே புகலவைத்தாய் என்றனர். திருமந்திரம் "மெய்கலந்தாரொடு மெய்கலந்தான் றன்னைப், பொய்கலந்தார் முன்புகுதாவொருவனை,புய்கலந்தூழித்தலைவனுமாய்நிற்கு, மெய்கலந்தின்பம் விளைந்திடு மெய்யர்க்கே." என்றதனாற் காண்க. எச்செயலுங் கன்மத்தின் வழிகூட்டிமுடிக்கின்றாய்அவ்வழியேநடக்குந்தொழிலுடையனென்பார், புன்மையே னென்செய்குவேன் என்றனர். இதனால் ஆன்மாக்களுடைய கன்மத்திற்குத் தக்கபடி வினைப்போகங்களை யூட்டிமலபரிபாகப்படுத்துகின்றவன் நீயே யென்பதாயிற்று.

ஆசாரியனைத் திரிமூர்த்திவடிவமாகக்கொண்டுதுதிப்பது மரபு. அன்றியும்,"திருமாலிந்திரன் பிரமனுபமன்யன் றபனனந்தி செவ்வேளாதி, தம்முதுகுரவருக்குந் தனதருளா லாசிரியத்தலைமை நல்கி,வருமெவர்க்குரு

வாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம்மலரும் வாய்ந்த, திருவழகுங் குறு
யுங் காட்டி யருடருள் சிவனையுளத்தில் வைப்பாம்." என்றபடி கொள்
மையும். ருக

பண்ணேனுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலருடு நீயேயிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனின்
நாணுமென்னுள நிற்றிநீ
நான்கும்பி டும்போ தரைக்கும்பிடாதலா
னுன்பூசை செய்யன் முறையோ
விண்ணேவிணாதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தே யவித்தின் முளையே
கண்ணே கருத்தேயெ னெண்ணே யெழுத்தே
கதிக்கான மோனவடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(இ-ள்.) உனக்கு ஆன பூசை பண்ணேன் - உனக்குப் பிரியமான பூச
யைச் செய்யேன், ஒரு வடிவிலே பாவித்து இறைஞ்ச - ஒருருவத்தில்
னைப்பாவனை செய்து வணங்க, ஆங்கே - அதற்காகவே, பார்க்கின்ற
ரும் - பார்க்கின்ற மலர்களெல்லாவற்றுள்ளும், நீயே யிருத்தி - நீயே நீக்
ன்றி, நிறைந்திருக்கின்றாய் (ஆதலால்) அப்பனிமலர் எடுக்க மனமும் நண்
ணேன் - அந்தக்குளிர்ச்சியாகிய மலர்களைப் பறிக்கவும் மனம் பொருந்
ன், அல்லாமல் - அன்றியும், இருகை குவிக்க எனின் - இருகரங்களைக்
த்து வணங்க வென்றாலோ, நீ என் உள்ளம் நிற்றி - நீ என் மனத்தி
நக்கின்றாய், (ஆதலால்) நாணும் - என் மனம் நாணுகின்றது, (அப்படி மன
ருப்பாடின்றி) நான் கும்பிடும்போது - நான் நமஸ்கரிக்கும்போது,
ரைக்கும்பிடு ஆதலால் - (அது) அரை நமஸ்காரமாகையால், நான் பூசை
ய்யல் முறையோ - நான் பூசனை புரிதல்கிரமமாகுமோ, விண்ணே-பரமா
யமே, விண் ஆதி பூதமே-விண்முதலாகிய பஞ்சபூதமே. நாதமே-நாதகத்
வமே, வேதமே-மறையே, வேதாந்தமே-மறைமுடிவே, மேதக்ககேள்வி
-மேன்மைபொருந்திய கேள்வியே, கேள்வி ஆம் பூமிக்குள் வித்தே-கேள்
யாகிய நிலத்தில் முளைக்கின்ற பீஜமே, அவ்வித்தின்முளையே - அந்தப்
ஜத்தினின்று முண்டாகிற அங்குரமே. கண்ணே-கண்களே, கருத்தே-

மனமே,என் எண்ணே-என் தருக்கமே,எழுத்தே-இலக்கணமே,கதிக்குஞ
மோனவடிவே-மோட்சத்திற்கேதுவாகியமௌனரூபமே, கருதரிய. என்

(வி-ரை.) பூசை புரியவேண்டுவது ஒவ்வொருவருக்கும் இன்றியமை
யாத கடனென்பார், பண்ணேன் பூசையென்றார். தேவாரம். "பூக்கை
கொண்டரன் பொன்னடி பூசியார் நாக்கைக்கொண்டரனாமநவில்கிலா
ஆக்கைக்கேயிரைதேடியலமந்து, காக்கைக்கே யிரையாகிக்கழிவரே" எ
வும், பிரபுலிங்கலீலை. "பீடுறுமானிடப் பிறப்பைவாய்ந்துநல், ஏடவிழ் ம
ரினு லிறையைப்பூசியார், பாடனைநாளெலாம் பாழுக்கிறைப்பவர்,மூட
யெண்ணுங்கால்மூந்திநிற்பரே" எனவும் வருவனவற்றாற்காண்க. அன்புட
புரியும் பூசையே முதல்வனுக்கா மென்பதுபற்றி, ஆனபூசை யென்றன
தேவாரம். "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்குநிற்கும் பொன்
சடைப் புண்ணியன்,பொக்கமிக்கவர் பூவுநீருங்கண்டு,நக்குநிற்ப ரவர்த
நாணியே." என்றதனாற் காண்க.

ஒரு வடிவென்பது மகேசுர பேதங்களான சந்திரசேகரர், உமாம
சர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிட்சாடனர், காமாரி,
லாரி, திரிபுராரி,சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்
நாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்க
பிரதர், கசமுகானுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர்,சுகாசீனர், தட்சி
மூர்த்தி, இலிங்கோற்பவர் ஆகியஇருபத்தைந்து மூர்த்தங்களிலொன்றி

முதல்வன் எங்கு நிறைந்திருக்கும் வியாபகப் பொருளென்பதனைச்
து நோக்காது, ஒருவடிவத்திலேயே யேகதேசியா யிருப்பனெனக்கொண்
பூசித்தலும், மலரினிடத்து இருக்க அதனைகொண் டருச்சித்தலும்செ
என்மன மொப்பவில்லையென்பார், பாவித்திறைஞ்ச வாங்கே பார்க்கின
மலரோடு நீயே யிருத்தியப் பனிமலரெடுக்க மனமு நண்ணேன்என்றனர்.
னுல்,பெருமான் சொரூப விலக்கணத்தினை நோக்குழி நிஷ்களமும், தட
விலக்கணத்தினை நோக்குழி சகளமும் உண்மையாகலின் இவ்விரண்டினை
மறிந்து பரிபூரணனே அன்பர்பொருட்டு ஏகதேசியாய் விளங்குவனென
தேர்ந்து பூசிக்கவேண்டு மென்பதாயிற்று. பட்டினத்தார். "சொல்லிலு
சொல்லின் முடிவிலும் வேதச்சுருதியிலு, மல்லிலுமாசற்ற வாகாயந்த
னிலுமாய்ந்துவிட்டோ, ரில்லிலுமன்பரிடத்திலு மீசனிருக்குமிடங்,கல்
லுஞ் செம்பிலுமோ விருப்பானெங்கள் கண்ணுதலே." என்றதனாற்கா
இத்திருச்செய்யுளில் செம்பிலுமோ என்றதற்குச்செம்பில் மாத்திரந்தா
வென்று பொருள்கொள்க.

கன்மத்திற்குத் தக்கபடி பரமானமா செய்விக்க ஆன்மா செய்கின்
நியதமாகலின், செய்தல்பாதியும், செய்வித்தல் பாதியுமாக ஒருதொழி
முற்றுப்பெறுதலால் அரைக்கும்பிடென்றார்.பரதந்திரனாகிய நான் சுதந்
னாக வெண்ணி யஞ்சலித்தலும்,பூசித்தலுங் கூடாதென்பார்குவிக்கவென
நாணுமென்றும்,பூசைசெய்யல் முறையேவென்றுங் கூறினர். இதனால்,
போதமிழந்து வணங்குதலும், பூசித்தலும் வேண்டுமென்பதாயிற்று.

சப்புலனுக்குத் தோன்றும் பொருள்களிலும், மனத்திற்கு விஷயமா ம் பொருள்களிலும் இருப்பதுபற்றிக், கண்ணே கருத்தே என்றும், வே ங்களிற் கூறப்படு மெல்லாப் பொருள்களையும் ஒருவனுணர்தற்குத் தருக் மும் இலக்கணமுமாகிய கருவிகளன்றி புணரப்படாமையின், எண்ணே முத்தே என்றும் கூறினர். எண் என்பதற்குத் தருக்கமே பொருளென் னைத். தருக்க பரிபாஷை என்னு நூலின் உபோற்காதத்திற் காண்க.

சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
 தான்வந்து முற்றுமெனலால்
சகமீ திருந்தாலு மரணமுண் டென்பது
 சதாநிஷ்டர் நினைவதில்லை
சிந்தையறி யார்க்கிது போதிப்ப தல்லவே
 செப்பினும் வெகுதர்க்கமாம்
திவ்யகுண மார்க்கண்டர் சுகராதி முனிவோர்கள்
 சித்தாந்த நித்யரலரோ
இந்த்ராதி தேவதைகள் பிரமாதி கடவுள
 ரிருக்காதி வேதமுனிவர்
எண்ணரிய கணநாதர் நவநாத சித்தர்க
 ளிரவிமதி யாதியோர்கள்
கந்தருவர் கின்னரர்கண் மற்றையர்க ளியாவருங்
 கைகுவித் திடுதெய்வமே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
 கருணா கரக்கடவுளே.

(இ-ள்.) வேதமொழி வேதவாக்கியமானது, சந்ததமும்-சதாகாலமும், யாதொன்று பற்றின்-யாதொன்றையாயினும் ஆசையாற்பற்றினால். அதுதா ன்வந்து முற்றும் எனலால்-அதுவாகவே வந்து முடிவுபெறுமென்று சொ ல்லுதலால், சகமீது இருந்தாலும்-உலகத்திலிருப்பினும், மரணம் உண்டு என்பது-மரணமுண்டென்பதை, சதாநிஷ்டர் நினைவது இல்லை-சகசநிட்டா பர் நினைப்பதேயில்லை, ஈது-இது, சிந்தை அறியார்க்கு-கருத்தறியாதவர் க்கு, போதிப்பது அல்ல-அறிவுறுத்துவதன்று, செப்பினும்-அறிவுறுத்தி னும், வெகுதர்க்கம் ஆம்-அநேகமாகிய வாதுக்கள்விளையும், திவ்யகுணம்- தெய்வீகமான குணத்தையுடைய, மார்க்கண்டர்-மார்க்கண்டரும், சுகர் ஆதி முனிவோர்கள் சுகர்முதலாகிய முனிவர்களும், சித்தாந்த நித்தியரலரோ முடிவுசெய்யப்பட்ட நித்யாத்மாக்களல்லரோ, இந்த்ராதிதேவதைகள்-இந் திரன் முதலான சாமாந்ய தேவர்களும், பிரமாதிகடவுளர்-பிரமன் முத லான விசேஷதேவர்களும், இருக்கு ஆதிவேதம் முனிவர்-இருக்குமுதலிய வேதங்களை நுட்பத்திறிபறவுணர்ந்த முனிவர்களும் எண்அரிய கணநாதர்- எண்ணுதற் கருமையாகிய கணநாதர்களும், நவநாதசித்தர்கள்-சத்தியநாதர் முதலிய ஒன்பது சித்தர்களும், இரவிமதி ஆதியோர்கள்-சூரியன் சந்திரன்

முதலானவர்களும், கந்தருவர்-கந்தருவரும், கிந்நரர்கள்-கின்னரரும், மற்றையர்கள் யாவரும்-வேறுள்ள யெல்லோரும், கைகுவித்திடு தெய்வமே-கைகூப்பித் தொழுதற்குரியதெய்வமே, கருதரிய-என்க.

(வி-ரை.) உயிர்கட்கெல்லாம் எக்காலத்திலும் உண்டாகின்ற பிறவியை விளைவிப்பதாகிய காரணம் பற்று (அவா) எனநூல்கள் கூறுதலின், சந்ததமும் வேதமொழியாதொன்று பற்றினது தான்வந்து முற்றும் என்றனர் உத்தரவேதம். அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து என்றதனுற் காண்க.

ஒருவன் யாதானுமொன்றின்கட் சிறிதாயினும் பற்றுவைக்கில், அப்பற்றினை யனுபவித்தற்குப் பிறப்புவலையுள் அகப்படவேண்டியிருத்தலின், சந்ததமும் வேதமொழியாதொன்று பற்றினதுதான்வந்துமுற்றும் என்றனர் திருக்குறள். "பற்றிவிடாஅவிடும்பைகள்பற்றினைப்'பற்றிவிடாஅதவர்க்கு" எனவும், "பற்றற்றகண்ணே பிறப்பறுக்குமற்று, நிலையாமைகாணப்படும்" எனவும் வருவன வற்றுற்காண்க. மரணமொன்றுண்டென்று நினைப்பதுமோர்வகையிற் பற்றாகலினானும், அதனைச்சிவயோகிக்ள் எண்ணுவதில்லையாகலினாலும், மரணமுண்டென்பது சதாநிஷ்டர் நினைவதில்லையென்றனர். அன்றியும், சதாநிஷ்டையுடையார் தமது திருமேனி உருவச்சித்தி, அருவச்சித்தி, உருவருவச்சித்தியென்னு மூன்றிலொன்றினைப்பெற்ற சீவன் முத்தராகையால், மரணமுண்டென்பதைநினையார். இச்சித்திபேதங்களை யினிவரும் ப்ராபாக்கண்ணியில் காண்க. உருவச்சித்திபெற்றோர் சுந்தரமூர்த்திசுவாமிகள், சேரமான் பெருமாணயனார் முதலியோர். இது சுத்ததேகமெனவும், சுவர்ணதேகமெனவும், பிரணவதேகமெனவும் வழங்கும். அருவச்சித்திபெற்றோர் மாணிக்கவாசக சுவாமிகள் முதலியோர். உருவருச்சித்திப்பெற்றோர்திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள் முதலியோர்.

பிரமமுதல் பிபீலிகைபரியந்தமுள்ள சீவகோடிகளியாவும் முதல்வனையே பூசித்தும், யாசித்தும், துதித்தும், தியானித்தும், உபாசித்தும்வருமாகலின், இந்திராதி தேவதைகள் பிரமாதிகடவுளரிருக்காதி வேதமுனிவர் எண்ணரிய கணநாதர்நவநாததசித்தர்களிரவிமதியாதியோர்கள் கந்தருவர்கின்னரர்கண் மற்றையர்க ளியாவரும் கைகுவித் திடுந்தெய்வமேஎன்றனர். பஸ்சாலோபநிடதம். "லிங்கரூபிணம் மாம்ஸம் பூஜ்யசிந்த்யந்தி யோகினஸ்விதாவித்திம்கதாய ஜந்தியஜ்வாஞேமா மேவஸ்துவந்திவேதாஸ்ஸாங்காஸ்ஸர்வோபதி ஷதஸ்ஸேதி ஹாஸாநஹத்தோன்ய தஹமேவ ஸர்வம் மயிஸவம் ப்ரதிஷ்டிதம்-ததாகாஸ்யாம்ப்ரயதைரேஹமன்வஹம்பூஜயஸ்தத்ரகரௌத்ராகநர: நாநாநகாநாநாஸஸ்த்ரதாரிணோ நாநாரூபதராநாநா சிஸ்ஷதாஸ்தேஸர்வே பஸ்மதிக்தாம் காருத்ராக்ஷாபரண: க்ருதாஞ்ஜலயோ நித்மபித்யாயம்தி தத்ரபூர்வஸ்யாம் திவிப்ரஸ்மக்ருதாஞ்ஜலிமுபாஸ்தேட்திச்யாமிந்த்ரஸ்ஸன்னதாங்க உபாஸ்தே உதீச்யாமக்கினிகாயாமா முட

தே" என்று சொல்லியபின்னர் தசுஷிணையாம் "சிவிமுக்திஸ்தானம் முக்தி ண்டபஸம்ஸ்ஸ்திதம் - தத்ராஜேகனு பாலகாஸ்ஸாயுத பாபகாதகாஸ்தத் நஷயன்ஸாம்பவா: பாசுபதாம் ஸாஸைவவேதாவதம்ஸம்சைவம் பஞ் சுஷரம் ஜபமுதஸ்மாரகம் ஸப்ரணவம் மோதமாஞஸ்திஷ்டம்தி." ௬௪

துள்ளுமறி யாமனது பலிகொடுத்தேன்கர்ம
துஷ்டதே வதைகளில்லை
துரியநிறை சாந்ததே வதையா முனக்கே
தொழும்பனன் பபிஷேகநீர்
உள்ளுறையி லென்னுவி நைவேத்தி யம்ப்ராண
னோங்குமதி தூப தீபம்
ஒருகால மன்றிது சதாகால பூஜையா
வொப்புவித் தேன்கருணைகூர்
தெள்ளிமறை வடியிட்ட வமுதப் பிழம்பே
தெளிந்ததே னேசீனியே
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே
தெவிட்டாத வானந்தமே
கள்ளமறி வூடுமே மெள்ளமெள வெளிபாய்க்
கலக்கவரு நல்லவுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(இ-ள்) துள்ளும்-துள்ளிகுதிக்கின்ற,மறியாம்மனது-மனமாகிய ஆட்டி ன, பலிகொடுத்தேன்-பலியிட்டேன், கர்மதுஷ்டதேவதைகள் இல்லை-(ஆ கலால்) கன்மமாகிய துஷ்டதேவதைகள்இனிஎன்னைவருத்தமாட்ட", துரி யம் நிறை-துரியபதத்தில் நிறைந்த,சாந்ததேவதை ஆம்உனக்கே-சாந்ததே வதையாம் உனக்கே, தொழும்பன் அன்பு-உன்தொண்டனாகிய அடியேனு டைய அன்பானது, அபிஷேகநீர் - திருமஞ்சன தீர்த்தமாகும், உள்ளுறை யில்-தேவரீர் என்மனத்திற்றங்கினால், என் ஆவி-என்னுயிரானது, நைவே த்தியம்-நைவேத்தியமாகும், ப்ராணன்-பிராணவாயுவும்.ஓங்குமதி-உயர்ந்த அறிவும்,தூபதீபம்-தூபதீபங்களாகும், இது-இவ்வாறு அடியேன் பூசனைபுரி வதாகிய இது, ஒருகாலமன்று ஒருபொழுதின்மாத்திரமேயல்ல, சதாகால பூசையாக ஒப்புவித்தேன்-சதாகால பூசனையா யொப்புவித்தேன்,(ஆதலால்) கருணைகூர்மிகுந்த கிருபையைப்பண்ணும் மறைதெள்ளி வடியிட்ட-வேதங்க ளால்தெளிவித்து வடிக்கப்பட்ட,அமுதப் பிழம்பே-அமிர்தத்தொகுதியே, தெளிந்ததேனே-தெளிந்ததேனே, சீனியே-சீனிசர்க்கரையே. திவ்யரசம் யாவும்-தெய்விகமான சுவைகளெலாம், திரண்டு ஒழுகு பாகே-ஒருசேரக் கூடி ஒழுகாநின்றபாகே, தெவிட்டாத ஆனந்தமே-வெறுக்கப்படாத இன்

பமே,கள்ளன் அறிவுடய்-கள்ளனாகிய என்னறிவிடத்தும், மெள்ள மெள்ள பையப்பைய, வெளியாக்கலக்கவரும்-வெளிபடக்கலக்க வருகின்ற,நல்ல றவே-நன்மையைப்பயக்குஞ் சுற்றமே, கருதரிய. என்க.

(வி-ரை) இத்திருச்செய்யுள் காமிகம், வாசிகம், மானசம் என்னு மூ கையுள் மானச பூசைமுறைமை கூறியது. மனத்தினை பலியிடும் பொருள ன ஆடாக உருவகஞ்செய்ததற்கேற்ப,கன்மத்தினைத் துஷ்ட தேவதைய கவும், சாந்தத்தினைப் பரதேவதையாகவும், அன்பினை அபிஷேக நீராகவும் ஆவியினை நைவேத்தியமாகவும்,பிராணனைத்தூபமாகவும், அறிவினைத் தீ மாகவும் கூறினர்.

அசுர ராக்கத பூதபிசாசாதிகள் மாமிசபக்ஷணயோக்கியராகலின் அத பற்றி, சாமான்னியர் துஷ்டதேவதைகட்குப் பலியிடுதல் வழக்கமா யிரு தலின் உலகவழக்காக பலிகொடுத்தேனென்றனர். உத்தம பரிபாகிக துஷ்டதேவதைகளை யொருபொருளாகமதித்து பலிமுதலிய தொழில்கள யொருபோதுஞ் செய்யத்துணியார். செந்நெறியிற்செல்லும் பெரியோ ஒருக்கால் துஷ்டதேவதையின் ஆலயத்தினைச் சந்திக்கநேரிடினும் அ தேவதையின்மீது கோபித்துக்கொள்ளுதலும், பலிமுதலிய காரியங்களை காணின் நடுநடுங்கிப்பயந்திடுதலும் பிரத்தியட்சம். திருப்புகழ்ச்சுவாமியா "ஒற்றியூர் காளிநீயுனக்கேனோ வூன்விருப்பம்,வெற்றிமழு வானருட்சீர் வே ண்டாமா-சிற்றுயிரைக்,கொல்வாருக் கின்பங் கொடாதா னவன்கண்டாய் நல்வார்த்தை சொன்னேனிந் நாள்" எனவும்,திருவருட்பிரகாச வள்ளலா "நலிதருசிறியதெய்வமென்றையோ நாட்டிலே பலபெயர் நாட்டிப்-பலித வாடு பன்றிகுக் கிடங்கள் பலிக்கடா முதலிய வுயிரைப், பொலிவுறக் கெ ண்டேபோகவுங் கண்டே புந்திநொந் துளநடுக் குற்றேன், கலியுறு சிறி தெய்வவெங் கோயில் கண்டகாலத்திலும் பயந்தேன்" எனவும் வருவன ற்றுற்காண்க.

உலகரால் அனுபவிக்கப்படும்இனிமையானபதார்த்தங்க ளவையே அவைகளாகவெல்லாம் அன்பினுல் முதல்வனைக் கூறுவது சாம்பிரதாய ம கலின் அமுதப்பிழம்பே, தேனே, சீனியே, பாகே, ஆனந்தமே, உறவே எனக்கூறினர். தேவாரம். "திருவே யென்செல்வமே தேனே வானோர் செ ழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற்சோதிமிக்க, உருவே யென்னுறவே யென்னு னேயூனினுள்ளமே யுள்ளத்தி னுள்ளே நின்ற, கருவே என்கற்பகமே கண் ணே கண்ணிற்கருமணியே மணியாடுபாவாய், காவாய் அருவாய் வ வினைநோயடையா வண்ணம் மாவடுதண்டுறையுறையுமமரரேறே" என்ற ஞற் காண்க.

வேதம் ஆன்மாக்களுடைய அதிகாரானுகுணமாகப் பலபொருள்கள க்குப் பரத்துவங் கூறினபோதிலும் உபக்கிரம உபசம்மார முறையால் சி பெருமானே பரம்பொருளென்று நாட்டுதலால், தெள்ளுமறை வடியிட்ட வமுதப்பிழம்பே என்றனர்.

உடல்குழைய வென்பெலா நெக்குருக விழிநீர்க
ளூற்றென வெதும்பியூற்ற
வூசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
யோருறவு முன்னியுன்னிப்
படபடென நெஞ்சம் பதைத்துண் ணடுக்குறப்
பாடியா டிக்குதித்துப்
பனிமதிமுகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பிபார்த் தார்த்தெழுந்து
மடலவிழு மலரனைய கைவிரித்துக்கூப்பி
வானே யவானிலின்ப
மழையே மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழியென வாழ்த்தியேத்தும்
கடன்மடை திறந்தனைய வன்பரன் புக்கெளியை
நன்னெஞ்ச னுக்கெளியையோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(இ-ள்,) உடல் குழைய-சரீரம்வாடவும்,என்பு எல்லாம் நெக்கு உருக-எலும்புகளெல்லாம் நெகிழ்ந்துருகவும், விழிநீர்கள் ஊற்று என வெதும்பி ஊற்ற-கண்ணீர் மணற்கேணியென்னலாம்படிகொதித்தொழுகா நிற்கவும், ஊசிகாந்தத்தினைக்கண்டு அணுகல்போல - இரும்பூசியானது காந்தக்கல்லினைக்கண்டு (அதினிடத்துச்சென்று) பொருந்துதல்போல, ஓர் உறவும் உன்னி உன்னி-ஒப்பற்ற (ஆத்ம) பந்துவாகிய வுன்னையு நினைத்து நினைத்து-நெஞ்சம் படபடெனபதைத்து-மனம் படபடெனத்துடித்து,உள் நடுக்குற-உள்ளே நடுக்கமடையவும், பாடி ஆடி குதித்து - பாடியாடித்துள்ளி, பனிமதிமுகத்திலே நிலவு அனைய-குளிர்ச்சியையுடைய சந்திரனிடத்திலுண்டாகும் கிரிகையையொத்த, புன்னகை பரப்பி-புன்சிரிப்பை விரித்து, ஆர்த்து எழுந்து - பலகாலாரவாரித்தெழுந்து, மடல் அவிழும் மலர் அனைய கை-இதழ்கள் விரியாநின்ற தாமரை மலரை யொத்தகைகளை, விரித்துக் கூப்பி-விரித்துங் குவித்தும், வானே-சிதாகாயமே,அவ்வானில் இன்பமழையே - அவ்வாகாயத்தினின்றும் பொழிகின்ற ஆனந்தவருஷமே, மழைத்தாரவெள்ளமே - அந்தமழை தாரைகளாலுண்டாகும் பெருக்கே, நீடூழி வாழியென வாழ்த்தியேத்தும்-நீடூழிகாலம் வாழ்கவென்று திருப்பல்லாண்டு பாடித் துதிக்கின்ற, கடல் மடைதிறந்தனைய-கடலான்து மடைதிறந்தாற்போன்ற, அன்பர் அன்புக்கு எளியையோ அன்பரது அன்புக்கு எளியையாயிருப்பாயோ, கருதரிய. என்க.

(வி - ரை.) அன்போடுருகி யகங்குழைவார்க்கன்றி முதல்வன் வெளிப்படாமையின், அன்பின் மயமாகச் சரீரம் வாடுதலும், என்பு நெகிழ்ந்துரு

ருகுதலும், கண்ணீர்பெருகுதலும் அன்புடையார்க்கியற்கையாகையால், உ
ல்குழைய வென்பெலா நெக்குருக விழிநீர்களூற்றெனவெதும்பியூற்ற என்
றனர். திருமந்திரம். "என்பேவிறகாயிறைச்சியறுத்திட்டுப், பொன் போ
கனலிற் பொரிய வறுப்பினு, மன்போடுருகியகங்குழை வார்க்கன்றி, யெ
போன்மணியினை யெய்தவொண்ணாதே." என்றதனாற்காண்க.

ஊசியானது காந்தத்தின் முன்னர் நேரிட்டகாலத்திலேயே அவ்வூ
யினுக்குச் சேட்டையுண்டாமாறு, முதல்வன்றிருவருளை அடியார் முன்னி
டவன்றே யன்புமயமான துடிப்புண்டாமாகையால், ஊசிகாந்தத்தினைக்க
டணுகற் போலவே, யோருறவு முன்னி யுன்னிப் படபடென நெஞ்ச
பதைத்துண்ணடெக்குறப் பாடியாடிக்குதித்து என்றனர். அத்தகையடி
முகமலர்ச்சியுடன் அஞ்சலித்து வாயாரத்தோத்தரிப்பாராகையால், ப
மதிமுகத்திலே நிலவனைய புன்னகை பரப்பியார்த்தார்த்தெழுந்து மட
விழுமலரனைய கைவிரித்துக் கூப்பி என்றனர்.

ஒருவரால் காரியங்கொள்வார், அவரைவாழ்த்துதல் பெருவழக்கா
லால் தமக்கெளியனுக்குகைக்கு நீடூழிவாழி யெனவாழ்த்துவாராயினர். தி
வாசகம். "வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனநின்பால், தாழ்
துவதும் தாமுயர்ந்து தம்மையெலாந் தொழவேண்டிச், சூழ்த்துமது க
முரலுந் தாரோயை நாயடியேன், பாழ்த்த பிறப்பறுத்திடுவான் யானுமு
னைப் பரவுவனே." என்றதனாற்காண்க. இத்திருச்செய்யுள், பத்திவலையி
படுவோன் என்னும் உண்மையும், அப்பத்தியுடையார் தன்மையும் விளக்
யது. (ருசு)

இங்கற்ற படியங்கு மெனவறியு நல்லறிஞ
ரெக்கால மும்முதவ்வார்
இணைசொறவ ரார்பொய்ம்மை யாமிழுக் குரையா
ரிரங்குவார் கொலைகள்பயிலார்
சங்கற்ப சித்தரவ ருள்ளக் கருத்திலுறை
சாக்ஷீ யிகபரத்தும்
சந்தான கற்பகத் தேவாயிருந்தே
சமஸ்தவின் பமுமுதவுவாய்
சிங்கத்தை யொத்தெனைப் பாயவரு வினையினைச்
சேதிக்க வருசிம்புளே
சிந்தாகு லந்திமிர மகலவரு பானுவே
தீனனேன் கரையேறவே
கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளரருட்
ககனவட் டக்கப்பலே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(இ-ள்.) இங்கு அற்றபடி - இம்மையில் முடிந்தவண்ணமே, அங்கும் அறியும் - மறுமையினுமாமென் றறிகின்ற, நல் அறிஞர் - பேரறிவினர், காலமும் உதவுவார் - எக்காலத்திலும் பிறருக்கு உதவி செய்வார்கள், இன்சொல் தவறார்-மதுரமொழி வழுவார்கள், இழுக்கு ஆம் பொய்ம்மை உரையார் - குற்றமாகிய பொய்யுரை யாடார், இரங்குவார் - சீவர்கண்மேல் இரக்கஞ்செய்வார்கள், கொலைகள் பயிலார் - சீவஹிம்சையைப் பழகமாட்டார்கள், சங்கற்பசித்தர்-சங்கற்பசித்தத்தினை யுடையவராகிய, அவர்-அவர், உள்ளக்கருத்தில் - மனக்கருத்தில், உறை - வாசம்பண்ணுகிற, சாக்ஷி - காட்சிபூதனாகிய. இகபரத்தும் - இம்மை மறுமைகளிலும், சந்தானம்கற்பம் தேவு ஆய் இருந்து - சந்தான விருட்சம் போலவும் கற்பகவிருட்சம் போலவும் உள்ளே தெய்வமாயிருந்து, சமஸ்த இன்பமும் உதவுவாய்-எல்லா சுகங்களையுங் கொடுப்பாய். சிங்கத்தை ஒத்து-சிங்கத்தினை நிகர்த்து,எனை பாயவருவினையினை - என்னைப்பாய வருகின்ற வினைகளை, சேதிக்க வருசிம்புளே-கிழித்தெறிதற்காக வருகிற சரபமே, சிந்தா ஆகுலம் திமிரம் அகல வந்த - மனக்கிலேசங்களாகிய இருள் நீங்கவருகின்ற, பானுவே - சூரியனே, ஏழையேன் - எளியேனாகிய நான், கரை ஏற - (பிறவிக்கடலைக்கடந்து முத்தியாகிய) கரையில் ஏறும்படி, கங்கு அற்ற-வரம்புகடந்த, பேராசை வெள்ளத்தின் வளர் - எனது பேரன்பாகிய பிரவாகத்தில் சஞ்சரிக்கிற, அருள் வானம் வட்டம்-கிருபையுடைய ஆகாயவட்டத்தில்(உலாவுகின்ற),கப்பலே- மரக்கலமே, கருதரிய. என்க.

(வி-ரை.) இத்திருப்பாடல் பொதுதருமங்களை யெடுத்தோதின் நல்லறிஞராகுஞ் சித்தாந்தச்செல்வர்களை இம்மை யம்மை மறுமை யென்னு மூவகைப் பயனையுந்தரும் வினைகள் யாவுந் தொடராவாகலின், அவர்கள் இம்மையில் முடிந்தவண்ணமே மறுமையிலாகுமென்று கொள்ளும் பேரறிவுடையா ராவராகலின், இங்கற்ற படியங்கு மெனவறியு நல்லறிஞர் என்றார். திருவருட்பயன். "மும்மைதருவினைகண்மூளாவா மூதறிவார்க்கம்மையு மிம்மையேயாம். ,, என்றதனாற் காண்க.

இனி வரவைத் தன்கட் சொனனார்க்கு ஈதல்லவ்வறிஞர்க்கியற்கையாதலின், எக்காலமுமுதவுவார் என்றும், அன்புடன்கலந்து வஞ்சனை யிலவராயிருக்கின்ற அறத்தினையுணர்ந்த அறிஞர் வாய்ச்சொற்கள் எக்காலத்து மின்சொல்லாவனவாகலின், இன்சொற்றவறார்என்றும்,பிறிதோருயிர்க்குத்தீங்கு சிறிதும் பயவாத சொற்களையே யுடையராகலின், பொய்யாமையா மிழுக்குரையார் என்றும், அருளையே தாரமாகக்கொண்டு வாழ்பவராகலின், இரங்குவார் என்றும், பிறப்பின்ற நிலையை அஞ்சிப் பிறவாமைப்பொருட்டு இல்வாழ்க்கையைத்துறந்த எல்லாருள்ளும் கொலைப்பாவத்தை அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தை மறவாது உயர்ந்தவரே, தலையாயருளொருவராகலின், கொலைகள் பயிலார்எனவுங்கூறினர். திருக்குறள். "இலனென்றுமெய்ய முரையாமை, பிறல் குலனுடையான்கண்ணேயுள." எனவும், இன்சொலாலீரமளைஇப்படிறிலவாஞ் செம்பொருள் கண்டார்வாய்ச்

சொல்." எனவும், "நாய்மையெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந் தீமையிலாத சொலல்." எனவும், "நல்லாற்று ஞடி யருளாள்க பல்லாற் ருற்,றேரினு மஃதேதுணை." எனவும், "நிலையஞ்சி நீத்தாருளெல்லாங் கொலையஞ்சிக், கொல்லாமை சூழ்வான்றலை." எனவு முறையே வருவன வாற்ருற் காண்க.

சங்கற்பசித்தராவார்: ஆகாமியமேறுதற் கிடங்கொடாமல் பிராரத்துவ மாத்திர மனுபவித்துவருஞ்சிந்தாந்தச்செல்வர்கள், இத்தகையார்எக்கால மும் அதோமுகமாகத் தரிசனஞ்செய்ய அவர்களுள்ளத்தில்நாளுமுதல்வன் விளங்குவாளுதலின்,அவருள்ளக்கருத்திலுறை சாட்சி நீயென்றனர். திருமந் திரம். "நத்தியெழுந்துநடுவுற வோங்கிய, செந்தீகலந்துட்சிவனென நிற்கு முந்திகலந்தங் குலகம் வலம்வரு, மந்தி யிறைவனதோ முகமாமே" என் தனுற்காண்க. முதல்வன் தனது தாதான்மியமான பராசத்தியி னெருகூற கிய திரோதான சத்தியினைக்கொண்டு பெத்த திசையில் மலபரிபாகம் வரச் செய்தும், முத்தி திசையில் அச்சத்தியினையே அநுக்கிரகசத்தியாக விளங் கச்செய்து வருவானுகலின்,இகபரத்தும் சந்தானகற்பகத்தேவாயிருந்தேசம் ஸ்தவின்பமுமுதவுவாய் என்றனர். சந்தானம் கற்பகமென்பன தேவலோகத் த்திலுள்ள பஞ்சதருக்களி லிரண்டு. அத்தகைய நீஎன்வினையை நீக்கவேண் டுமென்பதற்குருவகமாக்கி,சிங்கத்தையொத்தெனைப்பாய வருவினையினை சேதிக்கவருசிம்புளே என்றனர். சிம்புள் என்றதுஎண்கால்களையுடையதோர் பட்சி,அது சிங்கத்தினை மிகவும் எளிதாகக் கவர்ந்து சென்று தன்குஞ்சு களுக்கு உண்பிப்பது. ஆகையினுலன்றே இரணியன்பொருட்டுத் தூணிடை வந்த சிங்கஞ் செருக்குற்றபோது சிம்புளாய்வந்து பெருமான் கண்டித்தன ர். பூதவிருளைநீக்கும் ஆகாய சூரியனைப்போல, கவலையாலுண்டாகும் மன விருளை நீக்கும் ஞானசூரியனென்பார், சிந்தாகுலந்திமிர மகலவரு பானு வேஎன்றும், பிறவிக்கடல் கடப்பதற்கோர் புணையாயினை என்பார், தீன னேன் கரையேறவே சங்கற்பமோசைவெள்ளத்தின் வளரருட் சனகவா ட்க் கப்பலே என்றுங்கூறினர். (ருக)

## சித்தர் கணம்.

திக்கொடு திகந்தமும் மனவேகமென்னவே
சென்ருேடி யாடிவருவீர்
செம்பொன்மய மேருவொடு குணமேரு வென்னவே
திகழ்துருவ மளவளாவி
யுக்ரமிகு சக்ரதர னென்னநிற் பீர்கையி
லுழுந்தமிழு மாசமனமா
வோரேழு கடலையும் பருகவல் லீரிந்த்ர
னுலகுமயி ராவதமுமே
கைக்கெளிய பந்தா வெடுத்துவிளை யாடுவீர்
ககனவட்டத்தை யெல்லாம்

கடுகிடை யிருத்தியே யஷ்டகுல வெற்பையுங்
காட்டுவீர் மேலுமேலும்
மிக்கசித் திகளெலாம் வல்லநீ ரடிமைமுன்
விளங்கவரு சித்தியிலிரோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(இ-ள்.) திக்கோடு திக்கந்தமும்-திக்குகளிலும் திக்குகளின்முடிவிலும், வேகம் என்ன - மனோவேகம்போல; சென்று - விரைந்துசென்று, ஓடி வருவீர் - ஓடியும் விளையாடியும் வருவீர்கள், செம்பொன் மகமேருவோ செம்பொன் மயமான மகமேரு மலையோடு, குணமேரு என்ன - நற்கு ஆகிய மேருமலைபோல, திகழ் - விளங்குகின்ற, துருவம் அளவுஅளாவி- துருவமண்டலத்தின் அளவும்போய், உக்ரமிகு - வேகமிகுந்த, சக்ரதரன் என - சக்ராயுதத்தையேந்திய திரிவிக்கிரமன்போல, நிற்பீர்-நிலைத்திருப் பீர், கையில் உழுந்து - கையிலுள்ள உழுந்தினளவாக, அமிழும் ஓரேழுகடலும் - ஆழ்ந்த சப்தசமுத்திரங்களையும், ஆசமனமாபருகவல்லீர் - ஆசமனமாக குடிக்கவல்லீர்கள், இந்திரன் உலகும் ஐராவதமும்-இந்திரலோகத்தை அதிலுள்ள ஐயிராவதமென்னும் யானையையும், கைக்கு இனியபந்தாஎடுத்து - கைக்கு இலேசானபந்துபோல் எடுத்து, விளையாடுவீர் - விளையாட்டுச் செய்வீர்கள், கனகவட்டத்தையெல்லாம் - ஆகாயமண்டலங்களையெல்லாம், கடுகிடையிருத்தி-கடுகைத்தொளைத்து(அதில்)புகட்டி, அஷ்டகுலவெற்பை யும் - அஷ்டகுலகிரிகளையும், காட்டுவீர் - காண்பிப்பீர்கள், மேலும் மேலும் - மென்மேலும், மிக்க சித்திகளெல்லாம்-மிகுந்த சித்திகளையெல்லாம், வல்லநீர் - செய்துகாட்டவல்ல நீங்கள். அடிமைமுன்விளங்கவரு சித்தியில ரோ - உங்கள் அடிமையாகிய எனக்கு எதிரில் பலருமறியவராநின்ற சித்தி யையுடையீர் அல்லிரோ, வேதாந்த சித்தாந்த சமரச நிலைபெற்ற - வேதாந் த சித்தாந்தங்களைச் சமரசமாகப்பாவித்தவராகியசிறந்த நிலையையடைந்தத னால் உண்டாகிய, வித்தகம்-ஞானத்தினையுடைய, சித்தர்கணமே - சித்தர் கூட்டமே. என்க.

(வி-ரை.) 'மூலன்பரபில்வரு மௌனகுருவே,' எனமுன் கூறியுள்ளபடி இவ்வாசிரியருக்கு ஆசிரியராகிய மௌனகுருமூர்த்தி திருமூலர் மரபினராத லாலும், திருமூலதேவர் அணிமாதி சித்திகள் கைவந்தவாராதலாலும் இங்குச் சித்தர்கள்கணத்தினைத் துதிப்பாராயினர் எவ்வகைப்பட்டஅரிய செயல்களை யும் எளிதாகமுடிக்கவல்லார் எழுந்தருளிவந்து அருள்புரிய வேண்டுமென்று கருத்து. குணமேருவென்பதனைக் "குணமென்னுங் குன்றேறி நின்றார்" என் னுந்திருக்குறளால் காண்க, துருவமென்பது அசையாநிலை.

துருவமண்டலமாவது - ஐம்பெரும்பூதங்களும் அன்னமயத்திற் பொருந்தும், அந்த அன்னமயமும் மழையிலுண்டாம். அம்மழைக்குக் காரணமா சூரியன் முதலாகியகிரகங்களும்நட்சத்திரங்களும் வாயுவினாற் பிணிக்,

கப்பட்டு நீங்காமற்சுழன்றுகொண்டிருக்கும்படி செய்புமேருமலையி னுச்சியி லுள்ள வொரு சோதிசக்கரம்.

துருவன் என்பவன் சுவாயம்பு மனுவின் புத்திரனுகிய உத்தானபாத னுடையமகன். இவன்தன்தந்தைமடிமீதேறித் தன்சுருதியென்னும் சிற்றன்னையின் மடிமீதேற, அவள் என்வயிற்றிற் பிறக்கும் பாக்கியம்பெருது, என் மாற்ருளாகிய சுநீதிமகனுயினையென்று சொல்லக்கேட்டுப் பொருது, தன்தாயினிடஞ்சென்று சொல்லி, தவஞ்செய்தற்குச்செல்கின்றேனென்று விடைபெற்றுப்போய்த் தவமியற்றி விண்டுமூர்த்தியின்கட்டளைப்படிகாசிமாநகரத்தினையடைந்து வையித்தியநாதலிங்கத்தின் சமீபத்தில்ஓர்சிவலிக்கக்குறிலைப்பிரதிஷ்டைசெய்து ஷெ மண்டலத்தினையடைந்ததனுல்துருவ மண்டலமெனப்பெயராயிற்று. இவற்றின் விரிவைக் காசிகண்டத்திற் காண்க.

சக்ரதரன் யெனப் பொதுப்படக்கூறினும் துருவம் அளவளாவி என்றதனுல் திரிவிக்கிரமனை உணர்த்தி ன்றது. ஆசமனமென்பது வலக்கையில் கோகன்ன (பசுவின்காது) முத்திரைகொண்டுஒருளுந்தமிழுமளவு நீரெடுத்து மும்முறை குடிக்குநீர். இதனை முக்குடிநீரென்பர். ஏழுகடல்-உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், சருப்பஞ்சாறு, தேன் என்பனவாம். ஐயிராவதம் பாற்கடலில்அமுதொடுபிறந்தவெள்ளையானை. இதுஅட்டதிக்கயங்களிலொன்ருய்க் கீழ்த்திசைக்குரியது. தேவேந்திரன்வாகனமுமாம். அட்டகுலவெபு-கைலை, இமையம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்பனவாம், சித்திகளென்றது அணிமா முதலிய எட்டுசித்திகளையுட

"பாட்டளி துதைந்துவளர் கற்பகந னீழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பத்மநிதி சங்கநிதி யிருபாரிசத்திலும்
பணிசெயுந் தொழிலாளர்போல்
கேட்டது கொடுத்துவரநிற்கவைப் பீர்பிச்சை
கேட்டுப் பிழைப்போரையும்
கிரீடபதி யாக்குவீர் கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை குறுகவைப்பீர்
ஓட்டினை யெடுத்தாயி ரத்தெட்டு மாற்ருக
வொளிவிடும் பொன்ஞக்குவீர்
உரகனு மிளைப்பாற யோகதண்டத்திலே
யுலகுசுமை யாகவருளான்
மீட்டிடவும் வல்லநீ ரென்மனக் கல்லையனன்
மெழுகாக்கி வைப்பதரிதோ
வேதாந்த சிந்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(இ-ள்.) பாட்டு அளி முதைத் தாளர்-இசைப்பாட்டை யுடைய வண்டு நெருக்கி வளர்கின்ற,கற்பகநல்கிழலே - கற்பக நல்கிழலே,பாரின் இடை வழைப்பீர்-உலகத்தில் வரும்படி செய்வீர்கள், பத்மநிதி சங்கநிதி - பத்நிதியையும் சங்கநிதியையும், இருபாரிசத்தும்-இரண்டு பக்கத்திலும், பணியும் தொழிலாளர்போல் - வேலைசெய்கின்ற அடிமையாட்கள்போல, ட்டது கொடுத்துவர - கேட்டவஸ்துக்களைக் கொடுத்துக்கொண்டுவரு ற்காக, நிற்கவைப்பீர் - நிற்கும்படி செய்வீர்கள், பிச்சைகேட்டுப் பிழைபாரையும் - பிச்சைகேட்டுண்டு உயிர்வாழ்வோரையும். கிரீடபதி ஆக்கு - முடிமன்னராகச் செய்வீர்கள், கற்பாந்தவெள்ளம் - கற்பமுடிவில் ண்டாகிற பிரவாகத்தினை, ஒருகேணியிடை குறுக வைப்பீர் - ஒரு கிண ணிடத்துச் சுருங்கிநிற்கவைப்பீர்கள், ஓட்டினையெடுத்து - மட்கலஞ்சிந்த ஓட்டினை எடுத்து. ஆயிரத்தெட்டுமாற்றுகவொளிவிடும் - ஆயிரத் ட்டுமாற்றுள்ளதாகப் பிரகாசிக்கின்ற, பொன்னுக்குவீர்-சுவர்ணமாக்கு ,உரகனும் இளைப்பாற ஆதிசேஷனும் இளைப்பாறும்படி, உலகு உலகத் ன. யோகதண்டத்திலேசுமையாக-யோகதண்டத்தில் சுமையாகநிற்க, நுளால்மீட்டிடவும் வல்லநீர் - கிருபையினால் மீட்டிடவும் வல்லவராகிய கள், என் மனக் கல்லை-என்மனமாகிய கற்பாறையை. அனல் மெழுகாக் வைப்பது அரிதோ-நெருப்பிலிடு மெழுகுபோல் உருகும்படி செய்துவைப் ாகிய இது உங்களுக்கு அரிதாமோ. வேதாந்த. என்க.

(வி-ரை.) கற்பகநிழலைப் பாரினிடை வரவழைத்தல் முதலியசெய்தற் ப செயல்களைச் செய்யவல்ல வுங்களுக்கு என்மனங் குழையும்படி செய் அருமையோ என்பதாம். பொன்னுலகத்தில் இந்திரனனுபவிக்கின்ற நிதிகளுளிரண்டு சங்கநிதி பதுமநிதி யென்பன. சங்கநிதி சங்குருவாய்க் க்கும் பொன்,பதுமநிதி தாமரையுருவாய்க்கிடக்கும் பொன். இவையே டியவற்றைக்கொடுக்கவல்லன. கேணி-திசைச்சொல் இது சிறுகுளம். உர -உரத்தானகருபவன் ஆதிசேடனெனும் பாம்பு. உரம்-மார்பு. (நிஅ)

பாரொடுநீ ரொடு தீயொன் றொடொன் றாகவே
    பற்றிலய மாம்போதினில்
பரவெளியின் மருவுநீர் கற்பாந்த வெள்ளம்
    பரந்திடி னதற்குமீதே
நீரிலுறை வண்டாய்த் துவண்டுசிவ யோகநிலை
    நிற்பீர்விகற்பமாகி
நெடியமுகி லேழும் பரந்துவரு ஷிக்கிலோ
    நிலவுமதி மண்டலமதே
வாரண விளங்குவீர் பிரமாதி முடிவில்லிடை
    யூர்தியரு ளாலுலவுவீர்
உலகங்கள் கீழ்மேல வாகப் பெருங்காற்
    றுலாவினற் றாணையினால்

மேருவென வசையாம னிற்கவல் லீருமது
மேதக்க சித்தியெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(இ-ள்.) பாரொடு - நிலத்தோடு, நல்நீர் ஆதி-நல்லநீர்முதலியவைகளு ஒன்றொ டொன்றாகவே - ஒன்றோடொன்றாக, பற்றி - தொடர்ந்து, லய ஆம்போதினில்-ஒடுங்குகிறகாலத்தில், பரவெளியில் - பரமாகாயத்தில், ம வுவீர்-பொருந்தியிருப்பீர்கள், கற்பாந்தவெள்ளம்-யுகாந்தகாலப் பிரளய பரந்திடின் - பரவினால், அதற்கு மீது- அதற்குமேல் நீரில்உறை - நீரில்வ சம்பண்ணுகிற, வண்டு ஆய்த்துவண்டு - வண்டுபோலச்சுழன்று, சிவயோ நிலைநிற்பீர் - சிவயோகநிலையில் நிற்பீர்கள். நெடிய - பெரிதான, முகி எழும்-மேகங்கள் எழும். விகற்பமாகி. வேறுபட்டு, பரந்து - பரவி, வருஷி கில்-பெய்தால், நிலவு - சந்திரிகையையுடைய, மதிமண்டலமதே - சந்தி மண்டலமே, ஊர் எனவிலங்குவீர் - இடமாகக்கொண்டு பிரகாசிப்பீர்க பிரமாதி முடிவில்-பிரமன் முதலானோருடைய முடிவுகாலத்தில், விடையூ தி அருளால் - இடபவாகனனாகிய சிவபெருமானது ,கருணையினால், உல வீர் - சஞ்சரிப்பீர்கள், உலகங்கள் - உலகங்களெல்லாம், கீழ்மேலாக-கீ மேலாகும்படி, பெருங்காற்றுஉலாவின் - பிரசண்டமாருதம் வீசினால், நல் தாரணையினால்-நல்லதாரணையோகத்தினால். மேருவென - மேருமலைபோ அசையாமல்-சலிக்காமல், நிர்க்கவல்லீர்-நிர்க்கவல்லீர்கள், உமது-உம்முடை ய,மேதக்க-மேன்மைபொருந்திய, சித்தி - சித்தியானது, எளிதோ - சொ லுதற் கெளிதாமோ, வேதாந்த. என்க.

(வி-ரை.) ஆகாயத்திற் காற்றும், காற்றில் நெருப்பும்,நெருப்பில்நீரு நீரில் நிலமுமாகத்தோன்றிய பஞ்சபூதங்கள் தோன்றிய முறையே யொ குமாதலால், ஒன்றொடொன்றாகவே பற்றிலயமாம் என்றனர். பஞ்சதன் த்திரைகளிலே பஞ்சபூதங்களுந் தோன்றிஅவற்றி லொடுங்குமென்றுசித் ந்தங்கூற. ஆகாய மாதியொன்றிலேயொன்றுதோன்றி முறையே யொடுங் மென்பதென்னை யெனின், ஆகாயமுதலாக ஒன்றின்பின்னொன்றுண்டாங் மத்தினாலும், பஞ்சீகரணத்தினாலு மிங்ஙனங் கூறியதால் விரோதமில் இதனால் பூதசதுஷ்டயமேயல்லாது ஆகாயமென்பதொன்றில்லை யென்னு உலோகாயதனும், பௌத்தனு மறுக்கப்பட்டனர்.

பிரமாதியென்றதனால்,பிரமனுடன் விண்டுவையும் இந்திரனையுங் கூ டுக. முடிவில் என்றது இவர்கள் மரணத்தினைக்குறித்தது. தேவாரம் "நூ கோடிபிரமர்களுங்கினர், ஆறுகோடிநாராயணரங்ஙனே, ஏறுகங்கைம லெண்ணிலிந்திரர், ஈறிலாதவ னீசனொருவனே" எனவும், திருவாசகம் " லயனை யிந்திரனாய் வாழுவதாய் மாளுவதாஞ், சால மயல்பார்த்துத் யசைப்பர்" எனவும், இலிங்கபுராணம், "அசங்க்யாதாச்சகாலாக்யா அச யாதா: பிதாமக: அரயச்சாப்ய சங்க்யாதாஎக எவ மகேச்வர: எனவும் வனவற்றாற் காண்க.

தாரணையென்பது அட்டாங்கயோகத்தொன்று இது நாபி, கண்டம், ...பம், நெற்றி, கபாலம். இவற்றி லொன்றிற்சத்ததம் சிந்தை வைத்தல். ...மந்திரம் "அறித்தவுடலையம்பூதத்தில்வைத்துப், பொருத்தவைம்பூதஞ் ...தாதியிற்போர்த்து, தெரித்தமனுதிசத்தாதியிற்செல்லத், தரித்ததுதாரணை ...பரத்தோர்டே." என்றதனுற்காண்க. உலகங்கள்தட்டழியுங்காலத்தும் ...சையாமல் நிற்கவல்லீர்என்பதை, "வானந்துளங்கிலென் மண்கம்பமாகி ...லன்...ஒருவனுக்காட்பட்ட வுத்தமர்க்கே" என்ற தேவாரத்தாற் காண்க.

பிருதுவியாதியைம் பெரும் பூதங்களும் ஒன்றிலொன்று ஒடுங்குங் ...லத்துக் கற்பாந்த வெள்ளத்தின்மீதுவண்டாய் உலவுதல் முதலிய சித்தி ...ளச் செய்யவல்லவுமது பெருமையை யெம்மாற் சொல்விமுடியுமோ என் ...றாம். (நிகூ)

எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா
னியாதினும் மரிதரிதுகாண்
இப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ
வேதுவரு மோவறிகிலேன்
கண்ணகலிலத்துநா னுள்ளபொழு தேயருட்
ககனவட் டத்தினின்று
காலூன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
கலந்துமதி யவசமுறவே
பண்ணுவது நன்மையிந் நிலைபதியு மட்டுமே
பதியா யிருந்ததேகப்
பரிவுகுலை யாமலே கௌரிகுண் டலியாயி
பண்ணவித னருளினுலே
விண்ணிலவு மதியமுத மொழியாது பொழியவே
வேண்டுவே னுமதடிமைநான்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(இ-ள்.) எண்ணரிய-எண்ணுதற்கரிய, பிறவிதனில்-பிறவிகளுள், மானி ப்பிறவி-மனிதப்பிறப்பு, யாதினும்-எல்லாப்பிறவிகளினும், அரிது அரிது-கவும் அரியது, இப்பிறவி-இந்தச்சன்மம், தப்பினுல்-தவறினுல், எப்பிறவி-ந்தச்சென்மம், வாய்க்குமோ-கிடைக்குமோ, ஏதுவருமோ-என்ன அனர்த் ங்களுண்டாகுமோ, அறிகிலேன் - தெரிகிலேன், (ஆதலால்) கண்ணகல் லத்து - இடமகன்ற பூமியில், நான் உள்ளபொழுதே - நான்இருக்கும் பாழுதே, அருள்ககனவட்டத்தினின்று - திருவருளாகிய ஆகாயமண்டல தில்நின்றும், காலூன்றி நின்று ஆனந்தம் பொழி - நிலைத்து நின்று இன்ப

மழையைப் பொழியாநின்ற, முகிலொடு-மேகத்துடன், கலந்து - சேர்ந்து மதி அவசம் உறப்பண்ணுவது நன்மை - என்அறிவானது பரவசப்படும்படி செய்வது நன்மையாகும், இந்நிலைபதியும் மட்டும் - இந்நிலையில் அழுந்துகிற வரைக்கும், பதியாய் இருந்த - எனக்கு இடமாயிருந்த, தேகப் பவுரி குலையாமல்-தேகமாகிய பவுரிக் கூத்துக்கலையாமல்,கௌரி-கௌரியாகிய,குண்டலிஆயி-குண்டலசத்தியென்கிற,பண்ணவிதன் அருளினாலே-தேவியின் திருபையினால், விண்நிலவும் மதி அமுதம் - சிதாகாசத்தில் நிலைபெற்றிருக்கின்ற சந்திரனிடத்துள்ளஅமிர்தமானது, ஒழியாது பொழிய - இடையறாது பெய்ய, உமது அடிமைநான் வேண்டுவேன்-உமதடிமையாகிய நான்விரும்புவேன். வேதாந்த. எங்க.

(வி-ரை.) கீழ்ப்போன அனந்த சனனங்களில் செய்திராநின்ற மேலான தபோபலத்தினால் அரிதாகிய மானிடதேகங்கிடைப்பதாகலின்,எண்ணரிய பிறவிதனில் மானிடப்பிறவிதானியாதினும் மரிதரிதுகாண் என்னர். திருமந்திரம், "பெருதற்கரிய பிறவியைப் பெற்றும், பெறுதற்கரிபிரானடி சேராப், பெறுதற்கரியபிராணிகளெல்லாம், பெறுதற்கரியதோபேறிழந்தாரே." எனவும்,சிவஞானசித்தியார். "அண்டசஞ் சுவேதசங்ளுற்பீசஞ் சராயுசத்தோ, டெண்டெரு நாலெண்பத்து நான்கு நூறுயிரதா, லுண்டுபல் யோனிதோறு மொழித்துமா னுடத்துதித்தல், கண்டிடிகடலைக்கையா னீந்தினன் காரியங்காண்." எனவும்வருவனவற்றாற்காண்க. அடுத்தபிறவி யின்னதெனை நிச்சயிக்கக் கூடாமைபற்றி, இப்பிறவி தப்பிலெப்பிறவிவாய்க்குமோ வேதுவருமோ வறிகிலே னென்றனர். இத்தேமுள்ளபோதே இரண்டறக்கலக்கு மத்துவித முத்தி யடையவேண்டுமெபார்,கண்ணகனிலத்து நானுள்ளபொழுதே யருட்ககன வட்டத்தினின்காலூன்றி கனமழை பொழியுமானந்தமுகி லொடுகலந்து மதியவசமுறபண்ணுவதுநன்மைஎன்றனர். சிவானுபூதியடைவதற்கு முன்தேகம் நழுவிடின் அது பெறுதற் கரிதாகலின், இந்நிலை பதியுமட்டுமே பதியாயிருந்தேகப்பவுரி குலையாமலே கவுரி குண்டலியாயி பண்ணவித னருளினாலே விண்ணிலவு மதியமுத மொழியாது பொழியவே வேண்டுவே னுமதடிமைநான்என்றனர். பவுரி-கூத்தின்விகற்பம். கௌரி-கிரியின்புத்திரி, குண்டலசத்தி - மூலாதாரத்தில் பாம்புருவமாய் இருப்பதாகிய ஓர் சத்தி. (சுபி

பொய்திகழு முலகநடை யென்சொலக்கே னென்சொல்கே
பொழுதுபோக்கே தென்னிலோ
பொய்யுட னிமித்தம் புசிப்புக் கலைந்திடல்
புசித்தபின் கண்ணுறங்கல்
கைதவமலாமலிது செய்தவம தல்லவே
கனன்கெட்ட பேர்க்கும் வெளியாய்க்
கண்டதிது விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்

காலமோ வதையறிகிலேன்
மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையிஞெடு செம்பொன்மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல்.
வரைந்துசய விருதுகாட்டி
மெய்திகழு மஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர்
வேந்தரே குணசாந்தரே
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(இ-ள்.) பொய் திகழும்-பொய்யேமிகுந்து விளங்குகின்ற,உலகநடை கவொழுக்கத்தினைப்பற்றி, என் சொல்கேன் என்சொல்கேன் - என்ன ால்லுவேன் என்ன சொல்லுவேன், (ஆயினுமொருவிதமாகச் சொல்லு றேன்) பொழுதுபோக்கு எதுஎன்னிலோ - (இவ்வுலகத்தார்) காலங் த்தல் எப்படியென்ருலோ, பொய் உடல் நிமித்தம் புசிப்புக்கு அலைத ல்-பொய்யுடம்பினைப் பாதுகாத்தற் பொருட்டு உணவுக்காகத் திரிதல், க்தபின் கண்ணுறங்கள்-உண்டபின் நித்திரைபோதல், (ஆகிய இவைக லேயே) இது கைதவமலாமல் - இதுபொய்யொழுக்கமேயன்றி, செய் ம் அல்லவே - செய்தற் குறித்தாய் (உயிர்க்குறுதிதருவதாகிய) தவமல்ல , கண்கெட்டபேர்க்கும் - குருடருக்கும், வெளியாய்க்கண்டது 'இது - ிப்படையாய்க் காணப்பட்டது இவ்வொழுக்கம், இதை கண்டித்து ாடு நிற்றல் எக்காலமோ-இக்குருட்டொழுக்கத்தைக் கண்டித்துவிட்டு றல் எந்தக்காலமோ,அதை அறிகிலேன்-அதனையுணருமாற்றலில்லேன், திகழும் முகிலினம் குடைநிழற்றிட-கருமை விளங்குகின்ற மேகக்கூட் குடைபோல் நிழலைச்செய்ய, அட்டவரையிஞெடு - எட்டுமலைகளோடு, ம்பொன் மேருமால்வரையின் முதுகூடும் - செம்பொன் மேருவாகிய ரிய மலையின் புறத்தும், யோகதண்டக்கோல் வரைந்து - யோகதண் சிய கோலையெழுதி, ஜயவிருதுகாட்டி-வெற்றி விருதாகக்காட்டி, மெய் ழும் - உண்மை விளங்குகின்ற,அஷ்டாங்கயோக பூமிக்குள் வளர-அஷ் ங்கங்களையுடைய யோக நிலத்தில் விருத்தியடையாநின்ற, வேந்தரே - சரே, குணசாந்தரே - சாந்தகுண சீலரே. வேதாந்த. என்க.

(வி-ரை.) என் சொல்கேன் என் சொல்கேன் என்ற அடுக்கு இரக்கப் ருள்து, அதாவது பிராகிருதர் நிலையினைக்கண்டு பரிதபித்துக் கூறியதா ் உடலெடுத்ததனுலடையவேண்டிய வுண்மையினை விசாரிப்பதிற்சிறிதுங் லைப்பாது,நிலையில்லாதஉடலைக் காப்பாற்றவேண்டியதன்பொருட்டு டாறு மலைவதும்,ஓய்ந்தகாலத்திலே நன்ருகத் தூங்குவதுமானதொழி மேற்கொண்டொழுகுதல் சிறிதும் பிரயோசனமின்றி அப்பிரயோசன ்யே மூடியவமென்பார், பொய்யுடனிமித்தம்புசிப்புக் கலைந்திடல் புசித்த

பின் கண்ணுறங்கல் கைதவமிலாமலிது செய்தவமதல்லவேஎன்றனர். இங் ஙனமெடுத்துக்காட்டிய வுண்மை யாவருக்கும் பிரத்தியட்சமென்பார்,கண் கெட்டபேர்க்கும் வெளியாய்க் கண்டதிது என்றனர். இத்தகைய புன்மார் கத்தினையறவே கைவிடுங்கால மெப்போது வருமோவென்பார், விண்பு ளைதக்கண்டித்து நிற்றலெக்காலமோ வதை யறிகிலேன் என்றனர்.

அஷ்டாங்கயோகத்தினைப் பூமியாக வுருவகஞ் செய்ததற் கேற்ப இ ர்கள் அவ்வரசாண்டுவரும் வேந்தரென்றமையான், அரசன் வெண்கொற் க்குடைநிழலி லிருக்கவேண்டு மாகலின், மைதிகழு முகிலினம் குடைநிழ றிடஎனவும், அவன் ஆணையை மேருவிற் பொறித்து விருது மேற்கொண் டிருக்குமாகலின்,அட்டவரையினொடுசெம்பொன் மேருமால்வரையின்மு கூடும் யோக தண்டக்கோல் வரைந்து சயவிருதுகாட்டிஎனவுங் கூறின

அஷ்டாங்கயோகமாவன - இயமம் நியமம், ஆதனம், பிராணாயாம பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியென்பனவாம். திருமந்திரம் "இயம நியமமே யெண்ணிலா வாதன, நயமுறு பிராணாயாமஞ் பிரத் யாகாரம், சயமிகுதாரணை தியானஞ் சமாதி, பயமுறு மட்டாங்கமாவ மாமே" என்றதனாற் காண்க. இவற்றுள் இயமமாவது-கொல்லாமை, மெ ம்மை கூறல், கள்ளாமை,பிறர்பொரு ளிச்சியாமை, இந்திரியமடக்கல்.நிய மாவது-தவம், தூய்மை,தத்துவநூலோர்தல், மனமுவந்திருத்தல், தெய்வ வழிபடல். ஆதனமாவது-சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேச பத்திரம், முத்தம், மயூரம், சுகம். அவையாவன,சுவத்திகம் - தொடைக் முழங்காற்கு நடுவே யிரண்டுள்ளங்காலையுஞ் செலுத்தி யிறுமாந்திருத்த கோமுகம் - சகனப்பக்கத்தி லிருகாற்பரட்டையு மாறவைத்து இருகா பெருவிரலைக் கைப்பிடித்திருத்தல், பதுமம்-இருதொடைமேலு மிரண்டு ளங்காலையு மாறித் தோன்றவைத்தல், வீரம் - வலத்தொடையி லிடக்கா பரட்டைச் சேர்த்தி யிறுமாப்புற்றிருத்தல், கேசரி-பீசத்தின் கீழ்க் சீவ யிடத்துப்பரட்டை வைத்திட முழங்கையை முழந்தாளில் வைத்தங்கு விரித்து நாசியைப் பார்த்திருத்தல், பத்திரம் - பீசத்தின்கீழ்ச் சீவனியிட திருகாற் பரட்டையும் வைத்தவ் விருபதத்தையு மிருகையா லிறுகப்பிடி தசையா திருத்தல், முத்தம் - இடக்காற் பரட்டால் சீவனியை யழுத் வடக்காற் பரட்டாற் பரட்டின் கீழுந்த விருத்தல், மயூரம் முழங்கை ண்டு முந்திப் புறத்தி லழுந்தப் புவியிற் கையூன்றிக் கானீட்டித் தலைநிமி திருத்தல், சுகம்-சுகமுந்திடமு மெவ்வாறிருக்கி னெய்துமோ வவ்வாறி தல், பிராணாயாமமாவது பிராணவாயுவை இரேசகபூரக கும்பகஞ்செய் பிரத்தியாகாரமாவது உபாதியைநீக்கியுண்ணோக்கல். தாரணையாவதுக டம் இதயம் நெற்றி கபாலம் நாபி இவற்றி லொன்றிற் சந்ததம் சிந் வைத்தல். தியானமாவது ஐம்புலனடக்கி யோகஞ்சேர்தல். சமாதியாவ இந்திரிய முதலியதத்துவசேட்டைகட்கேதுவா யாக்கையுனின்றவற்றோ கூடினு மவற்றிற் பற்றின்றியிருக்குமான்மாவாகியதன்னைத்தான்காண்ட

கெசதுரக முதலான சதுரங்க மனமாதி
கேள்வியி னிசைந்துநிற்பக்
கெடிகொண்ட தலமாறு மும்மண்ட லத்திலுங்
கிள்ளாக்குச் செல்லமிக்க
தெசவிதம தாய்நின்ற நாதங்க ளோலிடச்
சிங்காச னாதிபர்களாய்த்
திக்குத திகந்தமும் பூரண மதிக்குடை
திகழ்ந்திட வசந்தகாலம்
இசையமலர் மீதுறை மணம்போல வானந்த
மிதயமேற் கொள்ளும்வண்ணம்
என்றைக்கு மழியாத சிவராச யோகரா
யிந்த்ராதி தேவர்களெலாம்
விஜயஜய ஜயவென்ன வாசிசொல வேகொலு
விருக்குநும் பெருமையெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(இ-ள்.) கெசதுரக முதலான - யானை குதிரை முதலான, சதுரங்கம் ...ரங்களாக, மனமாதி - மனமுதலிய அந்தக்கரண நான்கும், கேள்வி ...ர இசைந்து நிற்ப - பணிவிடைக்கு இணங்கி நிற்கவும், கெடிகொண்ட ...மாறும்-கீர்த்திபொருந்திய ஆறுஆதாரங்களினும், மும்மண்டலத்தினும் ...ன்று மண்டலங்களினும், கிள்ளாக்குசெல்ல-அதிகாரம் செல்லவும், மிக்க ...சவிதமாய் நின்ற நாதங்கள் ஒலிட - மேலாகியபத்துவகைப்பட்டு நின்ற ...தங்கள் முழங்கவும், சிங்காசனாதிபர்களாய் - சிங்காசனாதிபதிகளாய், ...கு திகந்தமும் - திக்குகளிலும் திக்குகளின் முடிவுவரையிலும், பூரண ...க்குடைதிகழ்ந்திட - பூர்ணசந்திரனாகிய குடையானது பிரகாசிக்கவும்; ...ந்தகாலம் இசைய - வசந்தகாலம் வர, மலர்மீது உறைமணம்போல- ...ரிலிருக்கிற பரிமளம்போல, ஆநந்தம் இதயமேற்கொள்ளும் வண்ணம்- ...ரபமானது இதயத்திற்குடிகொள்ளும்வகை, என்றைக்கும் அழியாத-எப் ...ாதுங் கெடாத, சிவராஜயோகராய் - சிவராஜயோகத்தை யுடையராகி, ...த்ராதி தேவர்களெலாம் - இந்திரன்முதலான தேவர்களெல்லாம் விஜய ...ஜய என்ன ஆசிசொல்ல-விஜய ஜயஜயவென்று மங்களமொழி கூறவும், ...ாலு இருக்கும் - கொலு வீற்றிருக்கின்ற, நும்பெருமை எளிதோ-உமது ...ருமையானது சொல்லுதற்கு எளிதாகுமோ. வேதாந்த. என்க.

(வி-ரை) இராஜயோகத்திற் பிறந்த அரசர்களுக்குச் சமானமாகச்சிவ ...ஜயோகியரையுங் கூறுயான்றொடங்கி, அவர்கட்குயானைமுதலிய சதுரங் ...களும் இவர்கட்குமனமுதலியசதுரங்கங்களும், அவர்கட்குக்கிள்ளாக்கு

சுவர்க்கமுதலிய மூன்றுலகங்களிலும்,இவர்கட்குக் கிள்ளாக்கு மும்மண்ட லங்களிலும். அவர்கட்கு வாத்திமம் காகளமுதலான பத்தும், இவர்கட்கு வாத்தியம் தசவித நாதங்களும். அவர்கட்குத் திசையின் முடிவுவரையில் பூரணசந்திரன் போன்ற வெண்கொற்றக் குடையும், இவர்கட்கு மதி மண் டலமேவெண்கொற்றக் குடையுமாகவமைந்ததென்றும் இருவர்கட்கும்இ திராதியர் ஆசிகூற கொலுவீற்றிருப்ப ரென்றுங் கூறினர்.

மனமாதிகள் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. மும்மண் டலங்கள் - அக்கினி மண்டலம், சூரியமண்டலம், சந்திர மண்டலம் என் பன. சுவானுபவமாலை, "மண்டலங்கள் மூன்றுவகுப்பார்கள் மற்றவற்றை விண்டுரைப்போமன்பாய் வினவிடுக - மண்டங்கி, மண்டலமா தித்தனுய மண்டலம்வெண் சந்திரன்றன், மண்டலமா மென்றே மல்," என்றதனு காண்க. அக்கினி மண்டலம் மூல முதல் நாபிவரையில், சூரிய மண்டல நாபிமுதல் கண்டம்வரையில், சந்திரமண்டலம் கண்டமுதல் புருவம்வரை யிலாம். தசவித நாதங்கள்-சிணி நாதம், சிணி சிணீநாதம், கண்டநாதம் சங்க நாதம், வீணநாதம், தாளநாதம், முரளீ நாதம், பேரீ நாதம், மிருதங்க நாதம், மேகநாதம், என்பன. ஆதாரங்கள் - மூலாதாரம், சுவாதிட்டானம் மணிபூரகம், அநாகதம், விசுத்தி. ஆஞ்ஞை. இவற்றிற்கு முறையேயிடம் குதம், குய்யம், நாபி,இதயம், அடிநா, நெற்றி.

என்றைக்கு மழியாத சிவராசயோக மெனவே மற்ற அடயோக முத லிய நிலையற்றதெனலாயிற்று. சிவராசயோகமாவது - உச்சுவாசம் நிச்சுவா சம் இரண்டையும் அடக்கி சுழுமுனை மார்க்கத்திலே பிராணவாயுவைநி த்தி, விஷயங்களின்வழி மனதைச் செல்ல வொட்டாமல் திருப்பி, ஒரு குறிப்பிலே நிறுத்தி, ஆறுதாரங்களின் அந்தர்மாதிரு காக்கிரமத்தை அறி ந்து அவ்வவ்வாதாரங்களின் அதிதேவதைகளைத் தியானித்து அவ்வாறுதா ரங்களினும் அசபாசத்தி சிவான்மிகையாய் நிற்கும் முறைமையைப்பார்த்து மூலாதாரந்தொடங்கி விநாயகர் முதலிய தேவதைகளைப் பொருந்தி, அட முகம் பண்ணிக்கொண்டு ஆறுதாரத்துக்கும் மேலாகிய பிரமரந்திரமளவு அசபையுடன் சென்றணைந்து, அந்தப் பிரமரந்திரத்திலே அதோமுகமாய் சகஸ்த்ரதளமாயிருக்கிற தாமரைமுகையைச் சோதி சோதிபதோச்சாரண த்தாலே உதிக்குஞ் சிவார்க்கனலே அலரச்செய்து,அந்தத்தாமரைப் பூவின் கேசாரக்கிரத்திலே உள்ளசந்திர மண்டலத்தை ஆகுஞ்சனஞ் செய்தலின லே மூலாக்கினியை அக்கினி பீசாக்கர உச்சாரத்தினலே எழுப்பி,நாடிசக் கரத்தைப் பேதித்து,அவ்வக்கினியினலே சந்திரமண்டலத்தை இளக பண்ணி, அந்தவமிர்தத்தைச் சர்வநாடிவழியாக நிரப்பி. அவ்விடத்திலுண் டாகிய சுகோதயத்தில் அந்தமயமான ஞானமிர்தாவத்தையை அடைந்த நின்று,சோமசூரியாக்கினிப் பிரகாசாதிகளாகிய பிரத்தியேகப் பிரகாசங்க ளெல்லாஞ் சூரியோதயத்திலே நட்சத்திராதிப் பிரகாசங்கள் அடங்கினு போலத் தன்னிடத் தடங்கச் சர்வதோமுகமாய்ச் சுவயபரப் பிரகாசமாய் இருக்கின்ற் பூரணம் பிரகாசத்தைப் பாவித்திருப்பது வேயாம்.

பின்னாக்கு - பின்னிலே. சிறுபிள்ளைகள் தம்முடையவீடுகளில் இரவிற்
ந்தார்களென்பதற்கடையாளமாகத் தாய்தந்தையர் உபாத்தியாயர்கட்
கின்னிக்கொடுத்தனுப்பும் வெற்றிலை,இதுபூர்வவழக்கம். ஆக்கு-இலைகின்
க்கு என்றுஞ்சொல்இக்காலத்தில்அதிகாரமெனும்பொருளைப்பயக்கும்.

ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை
யகிலத்தின் மிசையுள்ளதோ
ஆடிய கறங்குபோ லோடியுழல் சிந்தையை
யடக்கியொரு கணமேனும்யான்
காணிலேன் திருவருளை யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடுமூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்பநினைவும்
பூணிலே னிற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பொய்யுலக னாயினே னாயினுங் கடையான
புன்மையே னின்னமின்னம்
வீணிலே யலையாமன் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(இ-ள்.) ஆணிலே பெண்ணிலே - ஆண் பெண் இரண்டனுள்ளும், போல ஒரு பேதை - என்னைப்போல ஒரு அறிவில்லாதவன், அகிலத் மிசை உள்ளதோ - உலகத்திலுண்டோ, ஆடிய கறங்குபோல்-சுழலா ற காற்றாடிபோல, ஓடி உழல் சிந்தையை - (விஷயங்களின்மேல்) விரை அவற்றினின்றும்மீளமாட்டாது அவற்றின்கண்ணே) சுழலாநின்றமனத் அடக்கி-(அவ்வாறுசெல்லாது)தடுத்து, திருவருளை ஒருகணமேனும் காணிலேன்-திருவருளை ஒரு கணப்பொழுதாயினும் யான் கண்டிலே அல்லாது-அன்றி, மௌனியாய்-மௌனநிலையை யுடையேனாகி, கண்மூடி- ணிதழ்களைச்குவித்து, ஓடுமூச்சைக்கட்டி-ஓடும் இயற்கையாயுள்ளபிரா ாயுவைத்தடுத்து, கலாமதியைமுட்ட - கலைகள் நிறைந்த சந்திரனைத் டும்படி,மூலவெங்கனலினை எழுப்ப-மூலாக்கினியையெழுப்புதற்குரிய, வும் பூணிலேன் - கருத்துங் கொண்டிலேன், இற்றைநாள் - இத்தனை வரைக்கும், கற்றதும்கேட்டதும்-நான் கற்றகல்வியையும்கேட்டகேள் யையும், போக்கிலே போகவிட்டு-அவைசெல்லும் வழியிற்செல்லவிட்டு, ப் உலகம் ஆயினேன்-பொய்யுலக வாழ்க்கையன்ஆயினேன், நாயினுங் டையான புன்மையேன் - நாயினும்இழிந்த அற்பத்தன்மையை யுடையவ

னுகிய நான், இன்னம் இன்னம் - மேன் மேலும், வீணிலே அலையாம வீண்காரியங்களில் பிரவேசித்துத்திரியாமல், மலைஇலக்குஆக - மலைக்கு போல, நீர்-நீங்கள், வெளிப்படதோற்றல்வேண்டும் - பகிரங்கமாகக்காட் கொடுத்தருளவேண்டும். வேதாந்த-என்க.

" (வி-ரை.) மனிதப்பிறப்பினை யெடுத்ததனாலடையவேண்டிய முக்கி மாகிய பிரயோசனம். திருவருளையனுபவித்தல்.அது கிட்டாதவழி அத்தி வருளையடைதற் கேதுவாகிய யோகத்தினையடைதல் இவ்விரண்டிலொ றேனுந்தானடையாது, கற்றல் கேட்டலாலுண்டாகியஅறிவை மறந்து உ கபோகத்திலழுந்தி வாழ்ந்தேனென்பார் ஆணிலே பெண்ணிலே........ பொய்யுலகனுயினே னென்றனர்.

அறிவினுக்குத் தாரகமாவிருப்பதுதிருவருளாகையால்அத்தகையதி வருளினைத்தான்தரிசித்திலேனென்பார், காணிலேன்றிருவருளை என்றன துகளறு போதம். " என்னறிவை நீயே யுணர்வையே' யாமாகி, விந்தெ நாட் பாசத்திசையாயே - யுன்னறிவை, நீங்கா வறிவாகி நீருமிரதமும்பே லாங்காணரனுருள். " என்றதனாற்காண்க, மூச்சைக்கட்டிக்கலாமதிவ மூட்டவே மூலவெங்கனலினையெழுப்ப நினைவும்பூணிலேன் " என்றதற் முப்பத்தாறுவது செய்யுளினுரையில் விரித்தாம். கற்பனவும் கேட்பன ஆசிரியர் காட்டிய வின்பசிட்டைபெறுதவிடத்துப் பயன்படாதாகலின்,‹ றதும் கேட்டதும் போக்கிலே போகவிட்டு என்றனர். இவ்வுண்மை ( வாசிரியரே, கற்றதுங் கேட்டதுந்தானே யேதுக்காகக், கடபடமென்ற ட்குதற்கோ என்றுகூறுதலினு லறிக. (கூ

கன்னலமு தெனவுமுக் கனியெனவும் வாயூறு
கண்டெனவு மடியெடுத்துக்
கடவுளர் கடந்ததல வமுதமுது பேய்போற்
கருத்திலெழு கின்றதெலாம்
என்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியா
லீட்டுதமி ழென்றமிழினுக்
கின்னல்பக ராதுலக மாராமை மேவிட்
டிருத்தலா லித்தமிழையே
சொன்னவணி யாவனவன் முத்திசித் திகளெலாந்
தோய்ந்தநெறி யேபடித்தீர்
சொல்லுமென வவர்நீங்கள் சொன்னவவை யிற்சிறித
தோய்ந்தகுண சாந்தனெனவே
மின்னல்பெற வேசொல்ல வச்சொல் கேட்டடிமைம
விகசிப்ப செந்நாளோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ஓ - ள்.) கன்னல் அமுது எனவும் - கருப்பஞ்சாற்றின் சுவைபோல முக்கனியெனவும் - முக்கனிகளின் சுவைபோலவும், வாய் ஊறுகண்டு ம் - வாயூறுதற்குக் காரணமான கற்கண்டு போலவும், அடி (சுவையு ) அடியானது, கடவுளர்கள் எடுத்துத்தந்தது அல்ல - கடவுளரால் எடு க் கொடுக்கப்பட்டதல்ல, பேய்போல அழுது அழுது - பேய்போல பல அழுது கருத்தில் எழுகின்றதெல்லாம்-என்மனதில் உண்டாவதாகிய லாம், என்னது அறியாமை அறிவு என்னும் - எனது உணர்வின்மை ர்வு என்கிற, இருபகுதியால் - இரண்டுபெருப்பினுல் கூட்டு தமிழ் - சொ ப தமிழ்மாலையாகும், என் தமிழுக்கு - அப்படி என்னுற்சொல்லப்ப தமிழ்மாலைக்கு, ஆராமை மேலிட்டிருத்தலால் - பேரன்பு அதிகப்பட் த்தலால், உலகம் இன்னல் பகராது உலகமானது குற்றங்கூறுது - சிற்க) முத்திசித்திகளெலாம் தோய்ந்த - முத்தி சித்திகளெலாமமை நெறியே - மார்க்கத்தையே, படித்திர் - படித்தவர்களே, இத்தமி யே - இத்தமிழ்மாலையையே, சொன்னவன் அவன் யாவன் - சொல்லிய பெ அவன் எவனென்று, அவர் - அவ்வுலகத்தார், சொல்லும் என - ல்லுங்கொன்று வினவ, நீங்கள் சொன்ன அவையில்-நீங்கள் மறுமொ ாகச் சொன்ன அவ்வார்த்தைகளினுல், சிறிது தோய்ந்த குண சாந்தன் - சாந்தகுணம் சிறிது அமைந்தவன் என்று, இன்னல்பெற சொல்ல - ாசம் உண்டாகப்புகழ, அடிமை - அடியேன், அச்சொல்கேட்டு - அந்த த்தையைக்கேட்டு, மனம் விகசிப்பது - மனமகிழ்ச்சியடைவது, எந்த ளா - எந்த காலமோ, வேதாந்த. என்க.

(வி - ரை.) திருவெண்ணெய் நல்லூர்ப்பொல்லாப்பிள்ளையார் மெய்க தேவருக்குச் சிவஞானபோதமியற்றும்படி "கல்லாநிழன்மலை,, என் அருணை அறுமுகக்கடவுள் அருணகிரி நாதருக்குத் திருப்புகழ் இயற் படி" முத்தைத்தருபத்தித்திருநகையத்திக்கிறை சத்திச்சரவணன் முத் கொருவித்துக்கொருபரனெனவோது" என்றும், காஞ்சிக்குமரக்கோட் றுமுகப்பெருமான் கச்சியப்பசிவாசாரியருக்குக் கந்தபுராணமியற்றும் கடசக்கரச்செம்முகமைந்துளான்' என்றும், கனகசபேசன் சேக்கிழார் ருக்குத் திருத்தொண்டர்புராணமியற்றும்படி 'உலகெலா முணர்ந் தற்கரியவன்' என்றும், திருவாரூர்த் தியாகேசப்பெருமான் சுந்தரமூர்த் யனுக்குத் திருத்தொண்டத்தொகை யியற்றும்படி 'தில்லைவாழந்தண டியார்க்கு மடியேன்' என்றும், அதிமதுரமான செந்தமிழ்மொழிக ந்த அடிகளையெடுத்துக்கொடுத்தாற்போலத் தனக்கேயவில்லை யென் கடவுளர்கடந்ததல்ல என்றனர்.

இருளுக்கும் ஒளிக்கும் இடமொன்று யிருத்தல்போல. அறியாமைக் அறிவினுக்கும் இடமொன்றாக வாய்க்கப்பெற்ற தான்சொன்ன தமி ப்பார். என்னது அறியாமை யறிவென்னு மிருபகுதியா லீட்டுதமிழ் என்ற அக்காமாயினும் இத்தமிழினைப் பாடக்குற்றமேதாவும் பண்டிதர் முதல்

பாமரரீருகக் கண்ணீருங்கம்பலையுமாக மனமுருகுகின்ருரென்பார், இன்
ல்பகரா துலகம்மாராமை மேலிட்டிருத்தலால் என்றனர்.

சித்தகணங்களே! அழுதழுதுகூறியஅடியேனுடைய தமிழ்ப்பாடலி
அருமையினையறிந்த உலகினர் இங்ஙனம் பாடினுன் யாவனென உங்க
வினுவ, சிறிது சாந்தகுணமுடையவன் என நீங்கள் சொல்லக்கேட்டு அ
கள் மகிழ அச்சொல்லினை அடியேன்கேட்டு மனமகிழ்வது எந்தக்காலமே
என்பதாம். என்றதனுல் ஒரு நூலினையும் அந்நூலாசிரியனையும் தக்கவர்க
மதிக்கவேண்டுமென்பதாயிற்று. (சு

பொற்பினெடு கைகாலில் வள்ளுகிர் படைத்தலாற்
போந்திடையொடுக்கமுறலால்
பொலிவான வெண்ணீறு பூசியே யருள்கொண்டு
பூரித்த வெண்ணீர்மையால்
எற்படவிளங்குகக னத்திலிமையாவிழி
யிசைந்துமே னேக்கமுறலால்
இரவுபகலிருளான கனதந்தி படநூறி
யிதயங் களித்திடுதலால்
பற்பல விதங்கொண்ட புலிகலையி னுரியது
படைத்துப்ர தாபமுறலால்
பனிவெயில்கள் புகுகாம னெடியவான் ஹெடர்நெடிய
பருமா வனங்களாரும்
வெற்பினிடை யுறைதலாற் றவராஜ சிங்கமென
மிக்கோ ருமைப்புகழ்வர்காண்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே.

(இ - ள்.) பொற்பினெடு - அழகோடுகூடிய, கைகாலில் - கைகா
ளில், வள்உகிர்படைத்தலால் - கூர்மையாகியநகங்களைப் படைத்தலா
இடைபோந்து ஒடுக்கம் உறலால் - இடையானதுசுருங்கிவந்து இருத்
லும், பொலிவு ஆன வெண்ணீறு பூசி -பிரகாசமுள்ள திருவெண்ணீற
பூசி, அருள்கொண்டு பூரித்த - திருவருள் பெற்று இறுமாந்த, எண் ர்
யால் - மதிக்கத்தக்க குணத்தினுலும், எல்படவிளங்கு ககனத்தில் - பி
சம் உண்டாக விளங்குகின்ற சிதாகாயத்தில், இமையாவிழி இசைந்
இமையாமல் கண்கள்பொருந்தி, மேல்நோக்கம் உறலால் - ஊர்த்துவ
ஷ்டியைப் பொருந்துதலாலும், இரவுபகல் - இரவினும் பகலினும், இ
ன - அஞ்ஞானந்தகாரமாகிய, கனதந்தி படநூறி - பெரியயானையா
இறக்கும்படி அறைத்து, இதயம் களித்திடுதலால் - மனம் செருக்க
திருத்தலாலும், பற்பல விதம் கொண்ட-பற்பலவிதமான; புலிகலையின்

டத்து - புலித்தோலையும் மான்தோலையும் ஆசனங்களாகப் படைத்து, தாபம் உறலால் - மனோபல வைபவத்தைப் பெற்றிருத்தலானும், பனி யில்கள் புகுதாமல் - பனிவெயில் முதலியவைகள் நுழையப் பெறுமல், டியவான்றொடர் - விசாலமான ஆகாயத்தை அளாவிய, நெடிய - உயர ன, பருமரவனங்கள் ஆரும் - பருத்தமரங்கள் அடரப்பெற்ற, காடுஞ்சுறை வெற்பின் இடைஉரைதலால் - மலையினிடத்து வசித்தலாலும், தவ சிங்கமென-தவராஜ சிங்கமென்று, மிக்கோர்-மேலோர்கள், உம்மைக் ண்டாடுவார்கள், வேதாந்த. என்க.

(வி ரை.) இதில் தவசிகட்கும் சிங்கத்திற்கும் உவமைகூறித் தவரா சிங்கமெனக் கூறியிருத்தலால், மேல்தவசிகட்குக் கூறியவைபோலச் கத்திற்கும் கைகால்களில் கூரிய நகங்களும், ஒடுங்கிய இடையும், வெண் நிறமும், மேனோக்கியகண்களும், யானைகளைக் கொல்லுதலால்களிப் புலிகளையும் மான்களையுங் கொன்றுஅவற்றின் தோல்களைத்தன் குகை வைத்திருத்தலும், அடர்ந்த காட்டில் வாழுதலும் ஆகிய குணங்கள் ருந்தி யிருத்தலைக் காண்க. மிருகங்களுக்குள் சிறந்து விளங்குவதுசிங் னது'போல, மனிதர்களுக்குள் சிறந்து விளங்குபவர் தவசிகள்.

பொலிவானவெண்ணீறு என்பதற்குப் பிரகாசமான வெண்ணீறு என் என்னையோவெனின், வெண்மைநிறத்தோடுங்கூடிய விபூதியே சிறந்த ன்றும், அத்தகைய விபூதியினையே யாவருந் தரிக்கவேண்டு மென்றும், மை, செம்மை முதலிய நிறம்வாய்ந்த விபூதியினைத் தரிக்கப்படாதென் தரித்தால், கருநிற விபூதி வியாதியையும் செந்நிற விபூதி கீர்த்தி நாச தயும், புகைநிற விபூதி அபமிருத்துவையும், பொன்னிற விபூதி ஐசுவரிய த்தையும் உண்டு பண்ணு மென்றும் ஆகமங்கள் கூறுதலினுலென்க. ரியோராவார் விபூதியினைக்கேசாதிபாதம் வரையில் தரித்துமுழுநீறு ய முனிவராக விளங்குவராகலின், நீறுபூசியென்றனர். யதிகளாகியமுனி கள் சலஞ்சேர்த்துக் குழைத்துத் தரிக்காமல் உத்தூளனமாகப் பூசிக் ள்ள வேண்டுவதே விதியாகலின் நீறுபூசி என்றன ரெனினுமொக்கும். த்ய।ஈனம் "ஸார்வகாலே ப வேஸ்த்ரீணும் யதீநாம் ஜலவர்ஜிதம்." றதனுற் காண்க. இங்ஙனம் பெரியோர் உத்தூளனஞ் செய்வானே னில், தேகமுழுதும் விபூதியணிந்து கொண்டிருக்கும் புருஷனைப்பின் டர்ந்தவன் மகா பாபியாயிருப்பினும் உடனே பரிசுத்தனுகிறுன் என்று த்திருத்தலினுல் அங்ஙனமணிவாரென்க. ரோா ங்கிதை. "பஸ்மநாஸ் ஸர் வாங்க ம குஸ்சதிய: புமாந், ஸ்ர்வ பாதக யுக்தோபிஸஸத்ய:பூய ர:"என்றதனுற் காண்க. விபூதியணிதலாலே மோட்சமாகிய திரு ஜ் கிட்டுமாதலின், பூசியே வருள்கொண்டு என்றனர். பாரதம் "நித்யம் தாரயே த்பஸ்மமோக்ஷகாமீ சவைத்வி: " என்றதனுற்காண்க. பூசி ள்கொண்டு என்னது பூசியே யருள்கொண்டு எனத் தேற்றேகாரங்கொ துக் கூறினமையின், பஸ்மம் ஒன்றே முக்கியமென்றும், அதனையே எத்

தகையரு மணியவேண்டுமென்றும் அதனாலேயே எல்லாப் பலனு முண்ட மென்றும், அதை யணிந்தவர்கள் மும் மூர்த்திகளையும், மூன்று அக்கி களையுந் தரித்தவ ராவாரென்று நிச்சயிக்கப்படும்.

கூர்மபுராணம். "அபிவாவைஷ்ணவோ மர்த்யோ அபிவாபீதரோஜா பஸ்மஸ்நாயீ பஸ்மதாரிகர் மஸ்வதிகரோதிவை, தத்பஸ்மதாரணம் முக்ய ஸர்வ ஸ்யைவத்ரீ புண்ட்ரகம், ப்ரமவிஷ்ணு மஹேஸாநாம் த்ரயாக்நா சதாரணம்." என்றதனாற் காண்க.

மாணவகன்வினா:—விபூதி திரிபுண்டரமன்றி வேறு ஊர்த்துவபுண் நெற்றியில்தரிக்கப்படாதோ?

விடை:—வேதத்தில் விபூதி திரிபுண்டர மொன்றே சொல்லப்பட ருக்கிறது வேறு ஊர்த்துவபுண்டரம் சொல்வப்படவில்லை. பாராசரபுரா ஸ்ரௌதலிங்கந் துவிஜ்ஞேயம் த்ரிபுண்ட்ரோத் தூளநாதிகம். அஸ்ரௌ "தந்தூர்த்வ புண்ட்ராதி நைவதிரியக்திரிபுண்ட்ரகம்." என்றதனாற்கா அன்றியும், பிரமாவானவர் பிரஜாசிருஷ்டி செய்கையிலேயே பஸ்ம மகி யைச்சொல்லி அதையணிந்துகொள்ள வேண்டுமென்று கருதியே நெ யைக் குறுக்காகச் சிருஷ்டித்தார். விருத்தமாகவும், ஊர்த்துவமாகவும்ப க்கவில்லை. அப்படியிருந்தும் சிலர் நெற்றியில் திரிபுண்டர மணிவதில் ஐயோ இன்தென்ன ஆச்சரியம். கூர்மபுராணம். "ஸ்ரஷ்டாஸ்ருஷ்டிச்ச நாகத்ரிபுண்ட்ரஸ்ய ப்ரஸஸ்ததாம், ஸஸர்ஜஸலலாடம் ஹிதிர்யங்நோ வம் நவர்துலம், ததாபிமாநவா மூர்க்காநகுர்வந்தி த்ரிபுண்ட்ரகம்." என் றாற் காண்க.

வினா:—நாராயணமூர்த்திக்கும் அவரைவழிபடுபவர்க்கு முரியபுண் மியாது?

விடை:—நாராயணமூர்த்தி யணிவதும் பஸ்மமே, அவரைவழிப்ப ஆழ்வார்கள் அணிந்ததும் பஸ்பமேயாம்.

வினா:—நாராயணமூர்த்தி பஸ்மமணிந்துள்ளாரென்பதற்குப் பிரம ங்களுண்டா?

விடை:—அநேகமுண்டு அவற்றுள் சிலகூறுவாம் பிரமாண்டபுரா "ஸாஸாபேஸததம் விஷ்ணுர்பஸ்மதிக்கநூலத, த்ரிபுண்ட்ரா ஸர்வாங்கோ ஜடாமகுடமண்டித:" எனவும், காளிகாகண்டம். "நாரா ஸ்தபஸ்தேபே ஜடாமுண்டஸமேகலீ, பஸ்மோத்தூளிதஸர்வாங்க த்ரிபு ராங்கித மஸ்தக" எனவும், இராமரகசியோபநிடதம், "ராமந்த்ரிணே சோமார்த்ததாரிண ம்ஸமலிநம்பரம், பஸ்மோத்தூளித ஸர்வாங்கம் பா முபாஸ்மகே" எனவும், இராமாயணம். "ஸ்வர்ண வர்ண ஜடா ஞாகஷாத் ருத்ரமிவாபரம், பஸ்மோத்தூளித ஸர்வாங்கம் த்ருஷ்ட்வா வஸங்கதா" எனவும், உத்தரராமசரிதம். "சூடா சும்பிதகங்க பத்ர ஸ்தூணித்வயம் ப்ருஷ்டதோ, பஸ்மஸ்தோகபவித்ரலாஞ்சித முரோத

சம் ரௌரவீம்." எனவும், திருவாய்மொழி, "கரியமேனி மிசைவெளி றசிறிதேயிடும், பெரியகோலத்தடங் கண்ணன் விண்ணோர் பெருமான் ர்னை, பெரியசொல்லாலிசைமாலைகளேத்தியுள்ளப்பெற்றேன், கரியதுண் டாமெனக் கின்றுதொட்டு மினியென்றுமே." எனவும் வருவனவற்றாற் ண்க.

வி:—ஆழ்வார்கள் விபூதிதரித்தார்களென்பதற்குப்பிரமாணமென்னை?

விடை:—திருவாய்மொழி "எறிய பித்திரெடெல்லா வுலகு கண்ணன் டைப்பென்றும், நிறசெவ்வே யிடக்காணி னெடுமாலடியாரென்றேடும், றுதுழாய் மலர்காணி ஞரணன் கண்ணியீதென்னும், தேறியுந் தேறு மாயோன் றிறத்தினளே யித்திருவே." என்றதனுற் காண்க.

வி:—பிரபஞ்சப்பற்றுச் சிறிதுமில்லாத முமூட்சுவுந் தரிக்கவேண்டு ன்பது அவசியமோ?

விடை:—மீண்டும்பிறவியை அபேட்சிக்காதமுமூட்சுவுந்தரிக்கவேண்டும் ன்னும் பொருளால் உலகவின்பங்களை வெறுத்துமோட்சத்தையேபொரு க மதித்த முமூட்சுவாலுந் தள்ளப்படாமற் கொள்ளப்படுவதா யுள்ளது ம்மமே. "தத்ஸமாசரேன் முமூக்ஷு ரபுநர்பவாய !! என்றதனுற்காண்க ன்றியும் துறவர் சிகாமணியாய்ச் சர்வசங்க பரித்தியாகமுற்ற பட்டினத் டிகளே விபூதி நீங்கப்பெற்றிருந்தா ரில்லையெனின், விபூதியணியாத மற் றயர் கதியினை யென்னவென்று கூறுவது. அந்தோ ! இத்தகையர் நிலை ய பரிதாபம்! பரிதாபம் !! பட்டினத்தார்பாடல் "ஐயுந்தொடர்ந்துவிழி ந்செருகி யறிவிழந்து, மெய்யும்பொய்யாகிவிடுகின்றபோதொன்றுவேண் டினியான், செய்யுந் திருவொற்றியூருடையீர் திருநீறுமிட்டு, கையுந்தொ ப்பண்ணி வைந்தெழுத்தோதவுங் கற்பியுமே." என்றதனுற் காண்க.

வி:—இத்தகைய வேதபடிதமான விபூதியினைச் சில பிராமணர் முதவி யார் நிந்திப்பதென்னை?

விடை:—பிராமணர்கள் நிந்திக்கின் அவர்களுடையஉற்பத்தியானது சூத் ரசம்பந்தமாயிருக்கலாமென்று புத்திமானுலோசிக்கவேண்டுமெனவாசி டலைங்கம்கூறுகிறது. "யேபஸ்மதாரிணந் த்ருஷ்ட்வாவாசாநிந்தந்திமாந வ: தேஷாம்சூத்ரேண ஸம்பூதிரனுமேயாவிபச்சிதா." எனவும், மற்றை நிந்திக்கின் அவர்களுக்குக் கர்ப்பதான முதலிய வைதிககிரியைகள் இல் லையென்பது நிச்சயமென ஜாபாலோபநிடதங்கூறுகிறது. "ஏஷாம்ஜாயதே ஷத்தாஸ்யௌதே பஸ்மநிலர்வதா, கர்ப்பாதா நாதிஸம்ஸ்காரஸ்தேஷா நாஸ்தீதி நிஸ்சய" எனவும் வருவனவற்றாற் காண்க. (௬௫)

கல்லாத பேர்களே நல்லவர்க ணல்லவர்கள்
கற்றுமறி வில்லாதவென்
கர்மத்தை யென்சொல்கேன் மதியையென் சொல்லுகேன்
கைவல்ய ஞானநீதி

நல்லோர் ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன் சர்மமொருவன்
நாட்டினு லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லா னொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்லதமி ழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லா மலெவரையு மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(இ-ள்,) கல்லாதபேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் - கல்வியைக்க லாதவர்களே நல்லவர்கள், கற்றும் - கல்விகற்றும், அறிவு இல்லாத - ஞா மில்லாத, என் கர்மத்தை என்சொல்கேன் - என்கன்மபலத்தை என் சொல்லுவேன், மதியை யென்சொல்லுகேன் - (மந்த) மதியை யென் சொல்லுவேன், கைவல்ய ஞானநீதி - கைவல்லியபதவியைக் கொடுக்கின் ஞானநீதியை, நல்லோர் உரைக்கில்-நல்லோர்கள் சொன்னல், கர்மம் மு கியமென்று நாட்டுவேன் - கர்மமேமுதன்மையான தென்றுகல்வி வலியா நிலை நிறுத்துவேன், ஒருவன் கர்மம் நாட்டினுல் - ஒருவன் கருமத்தை நி நிறுத்தினுல் - பழயஞானம் முக்கியம் என்று நவிலுவேன் - முன்சொல்லி ஞானமே முதன்மையான தென்று சாதித்துரைப்பேன், வடமொழியிலே வல்லான் ஒருத்தன் வரவும் - வடமொழியில் வல்லவனுகியவொருவன் வ னும் - திராவிடத்திலே வந்ததாவிவகரிப்பேன்-தமிழ்ப்பாஷையிலே (சிற பனைத்தும்) வந்ததாக விவகரித்துப்பேசுவேன், வல்ல தமிழ் அறிஞர் வரி தமிழ் வல்லவராகியஅறிஞர்வந்தால், அங்ஙனே - தமிழ்வசனங்கள் சொ னதுபோலவே, வடமொழியில்வசனங்கள்சிறிதுபுகல்வேன்-வடமொழியி (சிறப்பனைத்தும் வந்ததாக) வாக்கியங்கள் சிலவற்றையெடுத்துப் பே வேன், வெல்லாமல்-நியாயமாய் வெல்லாமல், எவரையும் மருட்டிவிடவ வந்த-யாவரையும் மருளும்படிசெய்ய வகையேற்பட்டதற்குக் காரணமா வித்தை - வித்தையானது, என் - என்பயன்தரும், முத்திதருமோ - முத் யைக்கொடுக்குமோ, வேதாந்த என்க.

(வி-ரை.) கற்றும் அறிவில்லாத என்றுஇழிவு சிறப்பு உம்மை கொ தோதினமையின், கல்வியே அறிவையுண்டாக்குமெனவும், கற்கவேண்டி வைகளைக் கற்றும் அக்கல்வியில் கூறியவழி நில்லாதாரைக் காட்டிலும், க லாதபேர்களே நல்லவர்களெனவு மாயிற்று. கல்லாதவர்கள் தாமே தம யறிந்து கற்றோர்முன் ஒன்றனையுஞ் சொல்லாதிருப்பராகலின், கல்லாதபே

ளே நல்லவர்கள் நல்லவர்களென்றனர். கல்லாதவரு நனி நல்லர்'' என்ற
ிருக்குறளானுங் காண்க.

கர்மமாவது சதசத்தாற் செய்யப்படுதலின் அறம்பாவமென் றிருவகைத்தாய், இருவகைக்கு முரிய பயன்றருதலாற்செயப்படுபொருளாகிய தனக் முதற்காரண முண்டென்பது காட்டிக்கான்மியமல மென்னப்பட்டு,பந்தறுத்துத லொப்புமையான் மும்மலத்துளொன்றென உடன்வைத் தெண்ணப்பட்டுக் காரணவேதுவானுங் காரிய வேதுவானும் அனுமித் தறியுமாறு ற்பது. சிவஞான சித்தியார். "தன்மமோ டதன்மமாகித் தானிரு பயனுந்து, நன்மை தின்மையினு மின்பத் துன்பினுநாடிக்காண, முன்னமே யான் ாவின்றன் மும்மலத் தொன்றதாகிக், கன்மமு மூலங்காட்டிக் காமிய மல ாய் நிற்கும்." என்றதனுற் காண்க, இம்மையில் நிகழ்வனயாவும் பிராரத் ்வமே யாகலினுலும் அவ்வழியே அறிவு நடக்கு மாகலினுலும், கர்மத்தை யன் சொல்கேன் மதியை யென் சொல்லுகேன் என்றனர்.

ஞானமே முக்கியமென் றொருவர்கூறின் அதனை மறுத்து, ஆன்மாவா வன் அறிவுள்ளவனுப் அனேகாத்மாவாய் வியாபியாய்ப் புத்தியைத்தனக் க் குணமாகவுடையனுய்ப் புத்தியைப்பொறிகளிலே பிரவேசிக்கச்செய்து ஷயங்களை அனுபவிக்கும் பொருட்டுப் பூதங்களைப் புத்திமுதலான தத் வங்களாகவும், தூல சூக்கும தேகமாகவுங்கொண்டு நல்வினை தீவினைக் ாகாரக சொர்க்கங்களை யனுபவிப்பதா யிருப்பன் அன்றியும், உடலையுஞ் க துக்கங்களையும் கொடுப்பது கன்மமல்லாமல் வேறொரு தெய்வம் கொடு றதில்லை. ஞானத்தால் வீடில்லை. வினைகள் விடுகிறதற்கு வேறு விதியி லை. யாகஞ்செய்து அந்த யாகத்தினு லுண்டான பலன்களைச் சொர்க் க்தி லனுபவித்து அந்தப்பலன் நசித்துத் திரும்பி வேறுவிதியில்லாமற் மியிற் பிறக்கும். சுருதி மந்திரங்களாற் செபம் பண்ணினல் கருதியபலன் ளைக் கொடுக்கும். ஆகலின் கருமமே முக்கியம் என்பராகலின், கைவல்ய ானநீதிநல்லோருறைக்கிலோ கர்மமுக்கியமென்று நாட்டுவேன்என்றனர்.

கர்மமே முக்கியமென்றொருவர் கூறின், கர்மமோ சடம் அதுதானே யாரு பயனையுங் கொடாது.சகலமான கலைஞானங்களும், புராணங்களும், வதாகமங்களிலுள்ள கருமகாண்டங்களும்.மற்றச் சாத்திரங்களும், எனைச் மயநூல்களு மாராய்ந்து பலவழிப்படுகிற பொருண்முழுவதுங் கீழெனக் காண்டு கழித்து, மேலான பதிபசுபாசமாகிய மூன்று பொருள்களையுந் டத்த லட்சணத்தில்வைத்து வகுத்துணர்த்தி அம் மூன்றனுட் பதிப் பாருள் எனைப்பசுபாசங்கட்கு மேலாதலி னது விளங்கச்சொரூபலட்சண தில் வைத்துணர்த்தலாகிய நல்வழிக் கேதுவான ஞானகாண்டத்தினை தல் கேட்டல் களுடன் சிந்தித்து ஞாதுருஞான ஞேயமாகிய பகுப்பின்றி த்துவிதமாயகண்டாகார நித்திய வியாயக சச்சிதாநந்தப் பிழம்பாகிநிறை து நிற்கின்ற முதல்வனேடு கலக்குந் தன்மைத்தாகிய ஞானத்தினை யனு டித்தலே முக்கியம் என்பராகலின், கர்மமொருவன் நாட்டினுலோ பழய ானமுக்கிய மென்று நவிலுவேன் என்றனர்.

வடமொழியில் வல்லவனொருவன்வரின். தமிழ்மொழி அநாதியிலேயே
யுள்ளதென்றும், காமிகமுதலிய ஆகமங்கள் வேதமுண்டாய காலத்தேஅ
தியே யிறைவனால் உண்டாக்கப்பட்டதனால் அவ்வாகமங்களு ளொன்று
காமிகத்திலே "ஊர்த்வம் திராவிட பாஷாங்கம் சாஸ்த்ரந்தயுதந்துவா
என்று கூறியிருத்தலினாலும், தமிழ்மொழிப் புணர்ச்சிகட்படும் செய்கை
ளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை, முதலிய சொல்வில
கணங்களும், உயர்திணை, அஃறிணை, ஐம்பால் என்னுஞ் சொற்பாகு பா
களும், அகம்புறமென்னும் பொருட்பாகு பாடுகளும், குறிஞ்சி, முல்லை,ம
தம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை, வெட்சி, உழிஞை, தும்பை
வாகை, காஞ்சி, பாடாண்டிணை என்னும் பொருட்பகுதிகளும், அவையி
றுறைகளும், வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, அவற்றி
இனங்கள், மருட்பா முதலியவற்றின் இயல்களும் இன்னோரன்ன பிறவு
வடமொழியிற் பெறப்படாமையானும், சிவபெருமானே சங்கப்புலவர்
ளோடுந் தானுமோர் புலவனாக வெழுந்தருளியிருந்து பரிபாடல் முதலி
நூல்களை இயலுமிசையும் பொருந்தத் தெரிந்து ஆராய்ந்தமையானும்,தி
கராஜபெருமானைப் பரவையாரிடத்தில் தூதின்மேற் செல்லப் போக்
னமையானும், முதலையுண்ட பார்ப்பனப் பிள்ளையைக்கழிந்த பருவத்தோ
வருவித்தமையானும், எலும்பு பெண்ணுருவமாகச் செய்வித்தமையானு
வேதங்கள் மூடியகதவைத் திறப்பித் தமையானும், கைலாயத்திலே வ
ங்கி வருகின்றமையானும்,வாய் என்னும் உறுப்பிற்குச் சொல்லின்றி மு
தின் பெயர்களைவைத்து வழங்கும் வாயில்லா வடமொழியினின்றும் இ
னிசை வாய்ந்து உலகமெங்கும் தனதிசைமயமா யொலிக்கும் கரையிறந்
தமிழ் மொழிபிறந்ததல்ல வாகலினாலும் தமிழே சிறந்தது என்பாராகலி
வடமொழியிலே வல்லானொருத்தன் வரினுந் த்ராவிடத்திலே வந்ததா வி
கரிப்பேன் என்றனர்.

தென்மொழியில் வல்லவனொருவன்வரின்,வேதங்களும், ஆகமங்களு
புராணங்களும், சோதிடம், வைத்தியம், சிற்பம், மந்திரம், யோகம்,நீ
ரசம், ரசாயன முதலிய பிரத்தியக்க சாஸ்திரங்களும், இல்லறவாழ்க்கைக்
எற்ற கன்மநூல்களும் ஸ்மிருதி பூர்வமீமாஞ்சை முதலிய ஞானநூல்களு
உபநிஷதங்கள், உத்தரமீமாஞ்சை முதலிய பரோட்சசாஸ்திரங்களும், சி
ங்காரமுதலிய ரசங்கள் ஒன்பதும் நிறைந்து, பெயர் கேட்கு முன்னே அதி
ள்ள சரித்திரத்தின் நாயகன் முதலிய பற்பலவிஷயங்களை யூகிக்கத்தக்
நாடகங்களும், பிரகரணமுதலியஅனேகவேற்றுமைகணிறைந்த காவியங்
ளும் வடமொழியிலேயேயிருத்தலின் இம்மொழியே சிறந்ததென்பாரா
லின், வல்லதமிழறிஞர்வரினங்ஙனே வடமொழியின் வசனங்கள் சிறி
புகல்வேன் என்றனர்.

இதனால், ஞானமுக்கியமெனின் கர்மமுக்கிய மென்றும், கர்மமுக்கி
மெனின் ஞானமுக்கிய மென்றும், வடமொழிசிறந்ததெனின் தென்மொ
சிறந்ததென்றும் தென்மொழிசிறந்ததெனின் வடமொழி சிறந்ததென்று
பிறரைமருட்டுஞ்செய்கைகளை மேற்கொண்டொழுகும் வித்தை முத்தியை
த் தருமோவெனபதாம். (சுஉ

## ஆனந்தமானபரம்.

கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்குமக்
குணமொன்று மொன்றிலேன்பால்
கோரமெத் தனைபக்ஷ பாதமெத் தனைவன்
குணங்களெத் தனைகொடியபாழ்
கல்லாமை யெத்தனை யகந்தையெத் தனைமனக்
கள்ளமெத் தனையுள்ளசற்
காரியஞ் சொல்லிடினு மறியாமை யெத்தனை
கதிக்கென் றமைத்தவருளில்
செல்லாமை யெத்தனை விர்தாகோஷ்டி யென்னிலோ
செல்வதெத் தனைமுயற்சி
சிந்தையெத் தனைசலன மிந்த்ரஜா லம்போன்ற
தேகத்தில் வாஞ்சைமுதலா
அல்லாமை யெத்தனை யமைத்தனை யுனக்கடிமை
யானே னிவைக்குமாளோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

(இ-ள்.) கொல்லாமை - கொல்லாமையாகிய குணம், எத்தனை குணக் ...ட்டை நீக்கும் - எத்தனை துர்க்குணங்களைப்போக்கும், அக்குணம் ஒன் ... ஒன்றிலேன்பால் - அக்குணம் ஒன்றும் பொருந்ாதவனாகிய என்னிட ...ல், கோரம் எத்தனை (அமைத்தனை) - கோரமானநடக்கைகளெத்தனை ...மத்தாய், பக்ஷபாதம் எத்தனை (அமைத்தனை) - பக்ஷபாதங்கள் எத்தனை ...மத்தாய், வன்குணங்கள் எத்தனை (அமைத்தனை) - வலியகுணங்கள்எத் ...யமைத்தாய், கொடியபாழ் கல்லாமை எத்தனை (அமைத்தனை) - கொ ...மையும் பாழ்படுதற்குக்காரணமானவுமாகிய கல்லாமைக்குணங்கள் எத் ...யமைத்தாய், அகந்தையெத்தனை (அமைத்தனை)-அகங்காரகுணங்கள் ...தனையமைத்தாய், மனக்கள்ளம் எத்தனை (அமைத்தனை) - மனக் குற்றங் ... எத்தனையமைத்தாய், உள்ளசற்காரியம் சொல்லிடினும் அறியாமை எத் ...ன (அமைத்தனை) - உளதாகிய சற்காரியத்தைச் சொன்னாலும் அதை ...ந்து கொள்ளாமையாகிய துர்க்குணங்கள் எத்தனையமைத்தாய், கதிக் ...ன்றமைத்த்அருளில் செல்லாமை எத்தனை (அமைத்தனை) - மோக்ஷத் ...க்கென்றமைக்கப்பட்ட அருட்குணங்களில் பிரவேசியாமையாகியகுணங் ... எத்தனையமைத்தாய், விர்தாகோஷ்டி என்னிலோ செல்லுவதெத்தனை ...மைத்தனை)-பயனற்ற கூட்டமென்றாலோ அதில் பிரவேசித்தற்குக்கார ...மாகிய காரணங்கள் எத்தனையமைத்தாய், முயற்சி சிந்தை எத்தனை ...மைத்தனை) - பயனில்லாத முயற்சியில் செல்லுஞ் சிந்தைகளெத்தனை

யமைத்தாய், சலனம் இந்திரசாலம்போன்றதேகத்தில் - கெடும் இயற்கை யில் இந்திரசாலத்தை யொத்த சரீரத்தில், வாஞ்சைமுதலான அல்லாமை எத்தனை (அமைத்தனை) விருப்பம்முதலியனவாகியதகாமையாகிய குணங்க எத்தனை யமைத்தாய், உனக்கு அடிமை ஆனேன்தேவரீருக்கு அடிமையா னேன். இவைக்கும் ஆளோ-(கோரம் முதலிய) இத்தீக்குணங்களுக்கும் நா ளாகவோ, அண்டபகிரண்டமும்-இவ்வண்டங்களும் இவற்றின்புறத்திலுள் அண்டங்களும், அடங்க-குறுகியுள்ளடங்கும்படி, ஒரு நிறைவு ஆகி - ஒரு பூரணமாகி, ஆனந்தம் ஆன பரமே - சுகரூபமான பரம்பொருளே, என்க.

(வி-ரை.) கொல்லாமையெத்தனை குணக்கேட்டை நீக்குமென்றதனு கொல்லாமையாகிய தருமமொன்றை அனுட்டித்து வருவதினாலேயே எ லாப்புண்ணியங்களுமிலேசாகக்கூடிவருமென்பதாயிற்று. திருக்குறள், "அ வினையாதெனில் கொல்லாமை கோறல், பிறவினையெல்லாந்தரும்" எனவு சிவஞானதீபம், "கொலையாதிநெறியகன்ற ஞானந்தானே கூறரிய மேலா ஞானமாகும், கொலையாதியகன்றொழுகுந் தவங்கடாமே குற்றமில் ற்றவமென்று ரைக்குநூலுங், கொலையாதியகற்றியநல் லறங்கடாமே கு லயத்தி லொப்பரிய வறங்களாகுங், கொலையாதியகன்றுபெறுஞ் செல் தானேகூறிலுயிர்க்கிதமானவாழ்வதாமே." எனவும், இதிகாசம், "ஆனை டியி லடங்காவடியில்லை, தானதுபோ னிற்கின்ற தன்மைதா - ஞானு ரைக், கொல்லாவறத்தின்கொழுநிழற்கேயுள்ளடங்கு, மெல்லாவறமுமிவ ந்து." எனவும் வருவனவற்றாற் காண்க.

கொல்லாமையெத்தனை குணக்கேட்டை நீக்கும் என்றதனால், கொல் தலினாலேயே எல்லாப்பாவங்களுமுண்டாகி அப்பாவங்களை யனுபவிப்ப கு நரகம் நிச்சயமாய்க் கிடைக்குமென்பதுமாம் - திருமந்திரம், "கொல்ல குத்தென்று கூறிய மாக்களை, வல்லிடிகாரர் வரிகயிற்றாற்கட்டிச், சொல் நீரென்று தீவாய்நரகிடை, நில்லிடுமென்று நிறுத்துவர் தாமே." எனவு சிவஞானதீபம், "எவ்வுயிரும் பராபரன்சந்நிதியதாகு மிலங்கு முயிருடலை த்துமீசன் கோயில், எவ்வுயிரு மெம்முயிர்போ லென்றுநோக்கி யிரங்கா கொன்றருந்து மிழிவினோரை, வவ்வியமதூத ரருந் தண்டஞ்செய்து வல் ரும்பையுருக்கியவர் வாயில்வார்த்து, வெவ்வியதீயெழுநரகில் வீழ்த்திமா வேதனைசெய்திடுவரென் றோதுநூலே" எனவும், சிவதருமோத்தரம், "உ றிடுவருரைத்ததுயரனைத்தினையு முயிர்க்கிரக்க,மற்றுவதைத் தவைதம் யவலமெனுதுவற்றானைத், துற்றினரு மற்றுமுள கொலைபுரிந்த துரிசினரு பற்றுமிலர் படுந்துயர்க்குக் கடுந்தூதர் வலைப்பட்டே" எனவும், இதிகாச "இந்நோய் நமக்குண்டென் றெண்ணாதே யெவ்வுயிரு, முன்னேவக் கொ றுண்ணுமூர்க்கத்தா-மெந்நோவும், பண்ணப்படுநரகிற் பாவிகளிற் பா ளென்றெண்ணப்படுவாறிசைந்து." எனவும் வருவனவற்றாற் காண்க.

கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்கும் என்றதனால், கொ லுதலினால் இம்மையிற் றுன்பமெய்தாவிடினும் மறுசென்மத்திலப்பா வந்து மூண்டுகொண்டு நோயினைச் செய்யுமெனலுமாம். நாலடி, "அக்

யொழிய விரலழுகித் துக்கத்தொழுநோ யெழுபவே-பக்கா,லலவனைக் லித்துக் கான்முறித்துத்தின்ற, பழவினைவந்தடைந்தக்கால்," எனவும், தருமோத்தரம், "கருவிலுளழிவன்முற்றிக் கழித்துடனழிவன் காளைப்ப முற்றழிவரிகை பகர்ந்தபின்னுதவாப்பாவி, பெருவலே கண்ணியாலும் த்துயிர் வதைத்தபேதை, கருதிய பொருளைத் தக்கோர்க் குதவிடான் த்தகையன்." எனவும் வருவனவற்றாற் காண்க.

கொல்லாமையெத்தனை குணக்கேட்டை நீக்கும் என்றதனால், கொல்லுந் ாழிலே மேற்கொண்டொழுகுவாரிடத்துக் கோரமான நடக்கை, பட்சபா , வன்குணம், கற்கவேண்டியவைகளைக் கற்காமை, அகந்தை, மனக்கள் , அறியாமை, அருளிற் செல்லாமை, விருதா கோஷ்டியிற் பிரவேசம், னில்லாதமுயற்சி, அனித்தியசரீரத்தில்வாஞ்சைமுதலியனவு முண்டாகு ன்றனர்.

மாணவகன்வின — சர்வசங்கபரித்தியாகமுற்ற துறவிகளாகிய ஞானி நம்கொல்லாமையைமேற்கொண்டொழுகவேண்டுமென்பது அவசியமோ?

விடை.—இல்லறத்தார் ஒருகால் தவறிக்கொல்வரேல்அப்பாவத்தினை ாழித்துக்கொள்ள அவருக்குப் பரிகாரமுண்டாம். துறவிகள் மறந்துங் ாலைத்தொழில் செய்தல் கூடாது,செய்யினும் பரிகாரங் கிடையாதாம். கையின லன்றோ தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் தமது திருக் ளில் கொல்லாமை யென்னு மதிகாரத்தினைத் துறவற வியலில் வைத்து லையஞ்சி நீத்தாருளெல்லாங்கொலையஞ்சிக்,கொல்லாமைசூழ்வான் றலை." ன்றோதினர். திருவருட்பா, "மருவாணைப் பெண்ணாக்கி யொரு கணத்தில் ன்விழித்துவயக்குமப்பெண். ணுருவாணையுருவாக்கியிறந்தவரையெழுப்பு ன்றவுருவனேனுங்,கருவாணையுறவிரங்காதுயிருடம்பைக் கடிந்துண்ணுங் நத்தனேலெங் குருவாணை யெமதுசிவக் கொழுந்தாணை ஞானியெனக் றுணதே." என்றதாலுங் காண்க.

வின.— அறுபான்மும்மை நாயன்மார்களி லொருவராய்க் கொல்லுந் தாழிலை மேற்கொண்ட கண்ணப்பநாயனருக்கு முதல்வன் அனுக்கிரகஞ் வாறென்னை?

விடை.—கண்ணப்பநாயனார் ஒரு ஆசிரியனையண்டிதுபாவம் இது ண்ணியம் இதுசெய்யலாம் இதுசெய்யலாகாதெனக் கேட்டறிந்தவரல்லர். வர்பழகியிருந்தபழக்கத்தைப்பக்திருசியினற்செய்தனர். அவர்பூர்வ.ஜென த்திற்செய்த தபோபலத்தினாலே மோட்சம் கைகூடிற்று,அவர்வாய்நீரால் ருமஞ்சனமாடிச்செருப்புக்காலாலுதைப்பதுஞ்செய்துமுத்தியடைந்தனர் ண்டேசுரநாயனார் பிதாவைக்கொன்று முத்தியடைந்தனர். சிறுத்தொண்ட நாயனார் பிள்ளையையறுத்து முத்தியடைந்தனர். இச்சரித்திரங்களைப் பிர ணமாகக்கொண்டொருவன் அந்நடத்தை முத்தியடைய முயலுவனேல் துகையினால் உலகாதீதமாகிய வொருக்கிரகவலியில்லையுடைய திருத்தபத்தி த்தியெனக்கொள்ளுதல் கூடாது.

(இ - ள்.) நீ - தேவரீர், படைத்த - உண்டாக்கின, உயிர்த்திரளில் - ஆன்மகோடியுள், என்போல்-என்னைப்போல, ஒரு பாவி-ஒருபாவி, உண்டோ - உளனோ, தேகாதி - தேகமுதலாகச் சொல்லப்பட்ட, உலகம் உலகமானது, பொய்ஆ - பொய்யாயிருக்க, கண்டேயும் - தெரிந்தும், எள் அளவு - எள்ளத்தனையாகிய, துறவும் இன்றி - துறவும் இல்லாமல், காசினிக்குள் - உலகத்துள் - அலைந்தவர் - உழன்றவர்கள், ஆர் - யாவர், காட்டாய் - காட்டுவாய், தேவே - கடவுளே, என்க.

(வி - ரை.) பிரபஞ்சமனைத்தும் எந்நாளும் ஒருபடித்தாக நிலையுறுத லின்றி நாளும் நாளும் காரியப்பட்டு வருதலைப் பிரத்தியட்சமாக வனுபவித்து வந்தும் அவற்றில் வெறுப்புண்டாகி அக்காரியப்பாட்டால் விளையும் சுக துக்கங்களினின்று நீங்கித் தனித்துவாழுதலின்றி மேலும் மேலும் அக்காரியப்பாட்டினை யனுபவிப்பா னுழலுகின்றே னென்பார், துறவு மின்றிக் காசினிக்கு ளலைந்தவரார் என்றனர். (௬௭௭)

தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாண் முக்கட்
 செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச் செவிக்கே
 மூடனேன் புலம்பியசொன் முற்று மோதான்.

(இ - ள்.) தேவரெலாம் - பிரமாதி தேவரனைவரும், தொழ - வந்து வணங்குதலால், சிவந்த - செவந்த, செந்தாள் - செவ்விய திருவடிகளையும் முக்கண் - திரிநேத்திரங்களையு முடைய, செங்கரும்பே - செம்மையாகிய கரும்பே, மொழிக்குமொழி - சொல்லுக்குச்சொல், தித்திப்பு ஆக-உருசியாக, மூவர்சொல்லும் - மூவர்பாடிய, தமிழ் - தமிழ்ப்பாடல்களை, கேட்கும் - கேட்கும், திருச்செவிக்கு - திருச்செவிகளுக்கு, மூடனேன் - மூடனாகிய நான், புலம்பியசொல் - புலம்பிய சொற்கள், முற்றுமோ - எற்கப்பெறுவனவோ, என்க.

(வி - ரை.) திருக்கயிலையிலே திருவோலக்கங்கொண் டெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ கண்ட பரசிவன் திருவடியில், பிரமாதி தேவர்கள் தினமும் வந்துபணியுந்தோறும் அவர்கள் திருமுடி படுதலினால் அத்திருவடி சிவந்திருக்குமென்பார், சிவந்த செந்தாள் என்றனர்- மூலராவார் ஆளுடையபிள்ளையார், ஆளுடையவரசு, ஆளுடைய நம்பி, ஆளுடையவடிமை எனப்படுவார். சிந்தைக்கினிதாயும் செவிக்கினிதாயும் வாய்க்கினிதாயும் தேன்பால் தீங்கன்னல் அமுதுமுதலிய வொப்பவினித்து எவரையும் சிவானந்தமயமாக்குதலின், மொழிக்குமொழித்தித்திப்பாக என்றனர். ஈண்டுதமிழ் என்றது திருக்கடைக்காப்பு, திருப்பாட்டு, தேவாரமாகிய மூன்றனையும். இவற்றில் முதல்வனுக்கு அதிகப் பிரியமென்பார். தமிழ்கேட்குந் திருச்செவிக்கே என்றனர். "மூவர் தமிழ்க்குருகரன்" எனவும், "ஒழித்திடும்பவப்பகை வினைக்குள்ளமேயாது மூவர்வோர்மூர், பழிச்சுபாடலை யாற்சுவை விடர்க்கிடும்பாவையருரைபோதும்." எனவும் வருவனவற்றாற்காண்க. (௬௭௮)

முற்றுமோ வெனக்கினியா னந்த வாழ்வு
மூதறிவுக் கினியாய்நின் முளரித் தாளிற்
பற்றுமோ சற்றுமில்லை யையோ வையோ
பாவிபடுங் கண்கலக்கம் பார்த்தி லாயோ.

(இ-ள்) எனக்கு - அடியேனுக்கு, இனி - இனி, ஆனந்த வாழ்வு - சுக வு, முற்றுமோ-கிட்டுமோ, மூதறிவுக்கு-பேரறிவிற்கு, இனியாய் - இனி யானவனே, நின் - தேவரீரது, முளரி - தாமரை மலர்போன்ற, தாளில்- வடிகளில், பற்றுமோ-விருப்பமோ, சற்றும் இல்லை-சிறிதுமில்லை, ஐயோ யோ-அந்தோ அந்தோ, பாவிபடும்-பாவியேன் அநுபவிக்கின்ற, கண் கலக் கண் கலக்கத்தை, பார்த்திலாயோ-பார்த்திலையோ, என்க.

(வி-ரை.) முதல்வனுடைய திருவடித்தாமரை மலரில் பற்றிலாதா த ஆனந்தவாழ்வு உண்டாதலில்லையாகலின், சற்றும் பற்றிலாதவனுக்கு வணங்கிடைக்குமெனப் பரிதபித்துச் சொல்வார் ஐயோ ஐயோ வென் ர்.

பார்த்தனவெல் லாமழியு மதனாற் சுட்டிப்
பாராதே பார்த்திருக்கப் பரமே மோன
மூர்த்திவடி வாயுணர்த்துங் கைக்காட்டுண்மை
முற்றியென தல்லல்வினை முடிவ தென்றோ.

(இ-ள்.) பார்த்தன-கண்ணுற்கண்டன எல்லாப்பொருளும், அழியும்- யாசிற்கும், அதனால்-ஆகையினால், சுட்டிப்பாராதே - சுட்டிப்பார்த்திடா பரமே - பரம்பொருளே, மோனமூர்த்திவடிவாய் - மவுனகுருவடிவாகி, ர்த்தும்-அறிவுறுத்திய, கைகாட்டும் உண்மை-கைகாட்டலின் உண்மை ரது, முற்றி - முற்றுப்பெற்று, எனது - அடியேனது, அல்லல்வினை-துன் ற்கேதுவாகிய கருமங்கள், முடிவது - முடிவு பெறுவது, என்றோ - எக் மோ, என்க.

(வி-ரை.) ஆன்மாவாற் சுட்டியறியப்படும் பொருளனைத்தும் அசத் மாய் நிலையில்லாதனவா யிருத்தலின், பார்த்தனவெல்லா மழியும் என் ர். சுட்டுப்பொருள்களில் ஒரு சாரனவேயன்றி அனைத்து மசத்தாதலி யெனுந் தார்க்கிகரை நோக்கிச் சுட்டுப் பொருளனைத்தும் அசத்தென்ப ற்றி எல்லாமென்றனர். சிவஞானசித்தியார். "அசித்தாம் சுட்டி யுணர் ருனானவெல்லாம்" என்றதனாற்காண்க. ஆகலின் இச்சுட்டுப் பொருள் த்தற்போத முன்னிட்டுப் பாராமல் திருவருளை முன்னிட்டுப் பார்த்தல் ண்டுமென்பார், பாராதே பார்த்திருக்க என்றனர். முதல்வன் சகளீகரித் து குருவடிவாகிச் சின் முத்திரைகாட்டி யாட்கொண்டா லல்லது வினை ழியாதென்பார், அல்லல் வினைமுடிவதென்றோ என்றனர். (கூஅ0)

என்றுமொரு நீ யன்றுளம்யா மென்ப தென்னை
யிதுநிற்க வெல்லாந்தா மில்லையென்றே
பொன்றிடச்செய் வல்லவனி யெமைப் படைக்கும்
பொற்புடையா யென்னினது பொருந்திடாதே.

(இ-ள்.) நீ - தேவரீர், என்று உளை - என்று உள்ளாய், அன்று - அக்காலத்து, யாம்-யாங்களும், உளம் - உள்ளோம், என்பது - என்று சொல்வது, என்னை - என்ன, இதுநிற்க - இதுகிடக்க, எல்லாம்தாம் - எல்லாப் பொருள்களுமே, இல்லையென்றே-இல்லையாமாறே, பொன்றிடச்செய் - அழித்திடச்செய்தலில், வல்லவன் - வல்லவனாகிய, நீ-நீயே, எம்மைப் படைக்கும் - எங்களைப்படைக்கின்ற, பொற்பு உடையாய்-பொலிவினையுடையாய், என்னின் - என்றால், அதுபொருந்திடாதே - அதுபொருந்திடாதோ, என்க.

(வி-ரை.) என்று பதியுண்டோ அன்றே ஆன்மாவுளராகி எக்காலத்தும் பதியும் பசுக்களும் அநாதி நித்தியராய் விளங்கலின், என்றுளை நீ யன்றுளம் யாம் என்றனர். திருமந்திரம். "பதிபசுபாசமெனப் பகர்மூன்றில் பதியினைப்போலப் பசுபாசமநாதி." என்றதனாற்காண்க. இக்கருத்தினையே இவ்வாசிரியர் முன்னமும், 'என்று நீ யன்றுநா னுன்னடிமையல்லவோ' என்றனர். இங்ஙனமாயின், பொன்றிடச் செய்வல்லவனென்றும் படைக்கும் பொற்புடையானென்றும் சங்காரத்தையும் சிருட்டியையும் சொல்லுவானேனெனின், சங்காரமாவது கன்மத்தினா லலைப்புண்ணு மான்மாக்களை யொடுக்கி யிளைப்பாற்றுகை. அங்ஙனமொடுங்கிய காலத்து மலத்தோடு மொடுங்கினராகலின் அம்மல நீங்குகைப் பொருட்டாகத் தனுகரணபுவன போகங்களோடுங் கூட்டுதல் சிருஷ்டி. இங்ஙனங்கூறுக்கால் பதிபசுபாசம் அநாதியென்று கூறி சங்காரமும் சிருட்டியும் சொல்வது முரண்படுமென்பார் பொருந்திடாதே என்றனர். இதனால் ஏகான்மவாதிகளும் சூனியோபதாலவாதிகளும் மறுக்கப்பட்டனர். (கூஅ

பொருந்துசக மனைத்தினையும் பொய்பொய் யென்று
புகன்றபடி மெய்யென்றே போதரூபத்
திருந்தபடி யென்றிருப்ப தன்றே யன்றோ
வெம்பெருமான் யான்கவலை யெய்தாக் காலம்.

(இ-ள்.) பொருந்து - பொருந்திய, சகமனைத்தினையும் - உலகமுழுதினையும், பொய்பொய் என்று-அநித்தியமென்று, புகன்றபடி - தீர்மானித்தபடி, மெய் என்றே- (அங்ஙனம் பொய்யென்றதே) சத்தியமென்றே, போதரூபத்து-ஞானரூபத்துடன், இருந்தபடி-இருந்தவண்ணம், என்று இருப்பது எக்காலமிருப்பது, அன்றே யன்றே-அக்காலத்திலல்லவோ, எம்பெருமான் எமது பெருமானே, யான் - நான், கவலை - துன்பம், எய்தாக்காலம் - அடையாதகாலம், என்க.

(வி-ரை.) ஈண்டு சகம் என்பது பஞ்சபூதக்கூட்டத்தை. பூமி நீர் தீ வளி வானமிவைகள். ஆகாயமுதலாக வொன்றி னொன்று தோன்றிக் காரியப்பட்டு நின்று திக்குமுறையால், சகமனைத்தினையும் பொய் பொய் என்றனர். ஈண்டு பொய்என்றதற்குச் சூனிய மெனக்கொள்ளாது அநித்திய எனப் பொருள்கோடல்வேண்டும். அங்ஙனம் கொள்ளாக்கால் ஆசிரியர்கருத்திலுக்கு முரண்பட்டு, "கருதுகாரண முண்டாகக் காரியமுள்ளதாகும் கருதலா லநாதிவைய

என்றுஞ் சுருதியுடன் முரணும். சகம் எக்காலத்தும் நிலையுறுதலின்றிக் காரணகாரியப் பட்டுக்கொண்டேயிருக்கும் எனு மெய்யினையுணர்ந்தவரே கவலையற்றிருப்பாரென்பார், கவலையெய்தாக்காலம் என்றனர். (௧௮௨)

காலமே காலமொரு மூன்றுங் காட்டுங்
காரணமே காரணகா ரியங்க ளில்லாக்
கோலமே யெனைவாவா வென்றுகூவிக்
குறைவறநின் னருள்கொடுத்தாற் குறைவோ சொல்லாய்.

(இ-ள்.) காலமே - காலமே, காலம் ஒரு மூன்றும்காட்டும் - முக்காலங்களையும் காட்டுகின்ற, காரணமே - காரணமே, காரண காரியங்கள் - காரண காரியங்கள், இல்லா - அற்ற, கோலமே - உருவே, என்னை - என்னை, வா வா என்று - வா வா என் றழைத்து, குறைவு அற - குறைவு நீங்க, நின் அருள் - நினது அருளினைக்கொடுத்தால், குறைவோ - குறைவாமோ, சொல்லாய் - சொல்லுவாய். என்க.

(வி-ரை.) காலமானது சடமாய், அநேகமாய், நித்தியமாய் முதல்வனது சனனி, ரோதயித்ரி, ஆரணி யென்னும்சத்திகளால் அதிட்டிக்கப்பட்டுச் சிருட்டி முதலிய கிருத்தியங்களுக்குத் துணைக்காரணமாகவிருக்கவும், முதல்வனை யீண்டுக்காலமே என்றதென்னையெனின், உலகமெல்லாங் காலத்தாற் றோன்றி நின்று அழிந்து காரியப்படுமாகலின் அக்காலமவற்றைக் காரியப்படுத்துங்கால் எல்லாப்பொருட்கும் தான்ஆதாரமாய்த் தனக்கோராதாரமின்றி நிற்றல்போல, முதல்வன் நிராதாரமாய் நின்றே காரியப்படுத்தலின் ஒருவாற்றானுவமையில் வைத்துக்காலமே என்றனர். சடரூபமாகிய காலம் இறப்பு நிகழ்வு எதிர்வு ஆம்படி முதல்வன் காரியப்படுத்தலின், காலமொரு மூன்றுங்காட்டும் காரணமே என்றனர். இதனால் "காலமே கடவுளாகக் கண்டனம்" என்னும் காலவாதிமதம் மறுக்கப்பட்டது. காரணகாரியப்படுதல் சடத்துக்கேயன்றி சித்துக்கன்மையின், காரணகாரியங்களில்லாக் கோலமே என்றனர். (௧௮௩)

சொல்லாய தொகுதி யெல்லாங் கடந்துநின்ற
சொரூபானந் தச்சுடரே தொண்டனேனைக்
கல்லாகப் படைத்தாலு மெத்தநன்றே
கரணமுடனுறவுகலக்க மாட்டேன்.

(இ-ள்.) சொல் ஆய - சொற்களால் ஆகிய, தொகுதி எல்லாம் - கூட்டமெல்லாவற்றையும், கடந்து நின்ற - தாண்டி நின்ற, சொரூபானந்தச் சுடரே - ஆனந்த சொரூபமாகியசோதியே, தொண்டனேனை - அடிமையாகிய என்னை, கல்லாகப் படைத்தாலும் - கல்லாகப்படைத்திடினும், மெத்த நன்றே - மிகவும் நல்லதே, நான் - நான், கரணமுடன் - கரணங்களுடன், உறவு - சிநேகம், கலக்கமாட்டேன் - செய்யேன், என்க.

(வி - ரை.) சொற்கூட்டமனைத்தும் பாச சாலமாகலினாலும், முதல்வன் பாசஞானத்தா லறியப்படாதவனு கலினாலும், சொல்லாயதொகுதியெல்லாங்கடந்து நின்ற என்றனர். கல் முதலிய பதார்த்தங்கட்குக் கரணமில்லையாகலானும், காரணமில்லையாகவே, பிரபஞ்சசேஷ்டை விளையாதாகலினாலும், விளையாதாகவே துன்பம் இன்பம் உண்டாகாதாகலினாலும், உண்டாகாதாகவே பிறப்பு இறப்பு ஏற்படாதாகலினாலும், கல்லாகப்படைத்தாலு மெத்தநன்றே என்றனர். படைத்தாலும் என்றதனால் அங்ஙனம்படையாது மானுடப்பிறப்பாய்ப் படைத்ததே சிறப்பெனவுமாம். பிறந்ததனாலாய பயனடையாதாதலினால் கல்லாகப் படைத்தாலுநன்றே எனக்குறிப்பிட்டனர்.

கலங்காத நெஞ்சுடைய ஞானதீரர்
கடவுளுனைக் காணவே காயமாதி
புலங்காணார் நாஞெருவன் ஞானம்பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை கண்டாய்.

(இ - ள.) கலங்காத - கலக்கமுறாத, நெஞ்சு உடைய - மனத்தையுடைய, ஞானதீரர் - ஞானதீரர்கள், கடவுள் - கடவுளே, உன்னைக்காணவே - தேவரீரைத் தரிசிக்கும்பொருட்டே, காயம் ஆதி - உடல் முதலானவைகளின், புலங்காணார் - இடங்காணாதவர்களானார்கள், நான் ஒருவன் - யானொருத்தன், ஞானம்பேசி - வாசாஞானம் பிதற்றி, பொய்க்கூடு - பொய்யுடலை, காத்தது - காத்திருந்தது, என்ன புதுமை - என்ன அதிசயம், கண்டாய் - கண்டாய். என்க,

(வி - ரை.) முத்தர்களாகிய ஞானிகள் சிவமயமாயிருத்தலின் அவர்கட்குப் பிரபஞ்சந்தோன்றாதென்பார், ஞானதீரர் புலங்காணார் என்றனர். "பதிபசுபாச விளக்கம்" சேதன சிவத்தைநோக்கிச் செகத்தினை நோக்குங் காலைச்சேதனச் சிவமேவிட்டுச் செகமெலாமறைந்துபோமே." என்றதனாற் காண்க. நான் பேசும்ஞானம் உடலைக்காத்தற் பொருட்டேயன்றி வேறல்லவென்பார், நாஞெருவன் ஞானம்பேசிப் பொய்க்கூடு காத்தது என்றனர்.

கண்டிலையோ யான்படும்பா டெல்லாமூன்று
கண்ணிருந்துந் தெரியாதோ கசிந்துள்ளன்பர்
தொண்டரடித் தொண்டனன்றோ கருணைநீங்காச்
சுத்தபரி பூரணமாஞ் சோதிநாதா.

(இ - ள.) யான் - அடியேன், படும்பாடு - படுந்துன்பத்தை, எல்லாம் - எல்லாம், மூன்று கண்ணிருந்தும் - மூன்று கண்கள் தேவரீருக்கிருந்தும், கண்டிலையோ - பார்த்திலையோ, தெரியாதோ - தெரிந்[illegible]ளவில்லையோ, கசிந்து - உருகி, உள் அன்பு ஆர் - உள்ளன்பு நிறைந்த, தொண்டர் - தொண்டர்களுக்கு, அடித்தொண்டன் - திருவடித்தொண்[illegible], அன்றோ - அல்லவோ, கருணை நீங்கா - கிருபை நீங்காத, சுத்த பரி[illegible]ணம் ஆம் - சுத்தபரிபூர்ணமாகிய, சோதி நாதா - ஒளிவாய்ந்த இறைவ[illegible]. என்க.

(வி - ரை.) இரண்டு கண்களையுடைய யாரும் பசுக்களே யாவர். மூன்று கண்களையுடைய வொருவனேபதி. அங்ஙனமாகவும் என்றுன்பதத்தினையறியாததென்னை யென்பார், கண்டிலையோ தெரியாதோ என்றனர். நான் உண்மை அடியார் பரம்பரையில் வந்தவனென்பார், தொண்டரடித்தொண்டனன்றோ என்றார். (கஅசு)

சோதியாயிருட் பிழம்பைச் சூறையாடுந்
 தூவெளியே யெனைத்தொடர்ந்து தொடர்ந்தெந்நாளும்
வாதியாநின்ற வினைப்பகையை வென்ற
 வாழ்வே யிங்குனைப்பிரிந்து மயங்குகின்றேன்.

(இ - ள்.) சோதியாய் - ஒளியாகி, இருள் பிழம்பை - இருட்கூட்டத்தை; சூறை ஆடும் - கொள்ளைகொள்ளும், தூவெளியே - பரிசுத்தமான சிதாகாயமே, எனை - அடியேனை, தொடர்ந்து தொடர்ந்து-பற்றிப் பற்றி, எந்நாளும், - எக்காலமும், வாதியாநின்ற - வருத்தாநின்ற, வினைப்பகையை - கன்ம சத்துருவை, வென்ற - செயித்த, வாழ்வே - பெருவாழ்வே, உனைப் பிரிந்து - உன்னைவிட்டு, இங்கு மயங்குகின்றேன் - இவ்விடத்து மயங்காநின்றேன், என்க.

(வி - ரை.) முதல்வன் அருட்பெருஞ்சோதியாகலின் அவன் முன்னர் இருளனைத்துந் தலையெடாதாகலினாலும், அவன் திருவருணோக்கத்தின் முன்னர் வினையனைத்துநீங்கிப்போகுமாகலினாலும், இருட்பிழம்பைச் சூறையாடுந்தூவெளியே எனவும், வினைப்பகையை வென்றவாழ்வே எனவும் கூறினர்.

மயக்குறுமென் மனமணுகாப் பாதைகாட்டி
 வல்வினையைப் பறித்தனையே வாழ்வேநானென்
செயக்கடவேன் செயலெல்லா நினதேயென்று
 செங்கைகுவிப்பே னல்லாற்செயல் வேறில்லை.

(இ - ள்.) மயக்குறும் - மயக்கத்தைச் செய்யாநின்ற, என் - அடியேன், மனம் - மனமானது, அணுகா - பொருந்தாத, பாதை - வழியை, காட்டி- காட்டி, வல் - கொடிய, வினையை - கன்மத்தினை, பறித்தனையே - நீக்கினையே, வாழ்வே - வாழ்வே, நான் - அடியேன், என்செயக்கடவேன் - என்ன செய்யக்கடவேன், செயல் எல்லாம் - செய்கைகள் எல்லாம், நினதே என்று - உன்னதேயாம் என்று, செங்கைகுவிப்பேன் - செவ்விய கரங்களைக் குவிப்பேன், அல்லால் - அன்றி, செயல் - செய்கை, வேறு இல்லை - மற்றொன் றில்லை, என்க.

(வி - ரை.) சிவன் முத்தர்கள் செயலனைத்தும் தனதாகக்கொண்டு முதல்வன் அவர்கட்கு வேண்டியவற்றைப் புரிவனாகலின், செயக்கடவேன் செயலெல்லா நினதே என்று செங்கைகுவிப்பேன் என்றனர். தேவாரம்,

"யாதேசெயினு நாமல்லோ நீயெனி, லாதே செய்யுமளவில் பெருமையன், மாதேவாகிய வாய்மூர் மருகனூர், போதேயென்று புகுந்தும் பொய்கொலோ" என்றதனாற் காண்க. (௬௮அ)

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்துபார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட்டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின்மோன
வாரிதியினதித் திரள்போல் வயங்கிற்றம்மா.

(இ - ள்) வேறுபடும் - முரண்படும், சமயம் எல்லாம் - எல்லாச் சமயங்களும், புகுந்து - விசாரித்து, பார்க்கின் - ஆராயின், விளங்கு - அச்சமயங்களில் விளங்கும், பரம்பொருளே - பெரிய பொருளே, நின் - தேவரீரது, விளையாட்டல்லால் - திருவிளையாடலேயல்லாமல், மாறுபடும் - வித்தியாசப்படும், கருத்து இல்லை - கருத்து இல்லையாகும், முடிவுஇல் - முடிவற்ற, மோன வாரிதியில் - மவுனசாகரத்தில், நதிதிரள்போல் - நதிக்கூட்டங்கள் போல், வயங்கிற்று, விளங்கிற்று, என்க.

(வி - ரை.) ஒரு சமயம் சொன்னபடி மற்றொருசமயம் சொல்லாது எல்லாச்சமயங்களின் கொள்கைகளும் வேறுபட்டுக் கிடத்தலின், வேறுபடும் எனவும், சமயங்கள் இருபத்து நான்கு வகைப்பட்டுக்கிடத்தலின் சமயமெல்லாம் எனவும், "யாதொரு தெய்வங்கொண்டீரத் தெய்வமாகியாங்கே மாதொருபாகனூர்தாம் வருவர்"என்றதற்கேற்ப, எல்லாச்சமயங்களிலும் விளங்குபவன் முதல்வனே யாகலின், விளங்கு பரம்பொருளே எனவும், ஆன்மாக்களின் சன்மத்திற்குத் தகுந்தபடி முதல்வனே சமயங்கள் வகுத்துவைத்தானென்பார், விளையாட்டல்லால் மாறுபடுங்கருத்தில்லை எனவும், எல்லா நதிகட்கும் சமுத்திரமிடங் கொடுத்திருப்பதுபோல, எல்லாச் சமயங்கட்கும் முதல்வனிடங் கொடுத்திருக்கின்றமையின், வாரிதியினதித்திரள்போல் வயங்கிற்றம்மாவெனவும் கூறினர். (௬௮௧)

அம்மாவீததி சயந்தானன்றோ வன்றோ
வகண்டநிலையாக்கி யென்னையறிவாம் வண்ணஞ்
சும்மாவேயிருக்க வைத்தாயையா வாங்கே
சுகமயமாயிருப் பதல்லாற் சொல்வானென்னே.

(இ - ள்.) அம்மா - ஆச்சரியம், ஈது - இது, அதிசயந்தான் அன்றோ அன்றோ - அதிசயமல்லவோ அல்லவோ, அகண்டநிலை ஆக்கி - வியாபகநிலையினை விளைவித்து, என்னை-அடியேனை, அறிவுஆம் வண்ணம்-அறிவு மயமாகும்வண்ணம், சும்மாவே இருக்கவைத்தாய்-சும்மாவே இருக்கும்படிவைத்தனை, ஆங்கே-அவ்விடத்தே, சுகமயமாய் இருப்பது அல்லாமல்-சுகசொரூபமாகியிருப்பது அல்லாமல்,சொல்வான்-வேறு சொல்லுதலுக்கு இடமியாது, என்க.

மாக்களெல்லாம் முதல்வனிடத்தும், அம்முதல்வன் மாயாதி தனு வினுயி
க்குயிராயும் வியாபித்து நிற்றலால், என்னை வேறே தனிவைத்ததற்கு
ஏகதேசப்பட்ட பொருளோ வென்பார், ஏகதேசம் பூரணத்துக்குண்டே
என்றனர். (௬௬௨

புகலரியநின் விளையாட்டென்னே யெந்தாய்
புன்மையறிவுடைய வென்னைப் பொருளாப்பண்ணி
யிகல்விளக்கு மலமாயைகன் மத்தூடே
யிடருறவுஞ் செய்தனையே யிரக்கமீதோ.

(இ - ள்.) புகல் அரிய - எடுத்துப்பேசுதற்கரிய, நின் விளையாட்டு
உன் திருவிளையாடல், என்னே - யாதோ, எந்தாய் - எந்தையே, புன்மை
அற்பமாகிய, அறிவு உடைய - அறிவினை வாய்ந்த, என்னை - அடியேனை
பொருள் ஆ பண்ணி - ஒரு பொருளாகமதித்து, இகல் விளக்கும் - பே
விளக்கும், மலமாயைகன் மத்தூடே - மலமாயா கன்மங்களினிடையே,
டர் உறவும் - துன்பம் அடையவும், செய்தனையே - பண்ணினையே, இரக்க
(ஆன்மாக்களின் மீதுவைத்த) இரக்கமானது, ஈதோ - இது தானோ, என்

(வி - ரை) சிற்றறிவுஞ் சிறுதொழிலுமுடைய என்மாட்டுக் கருணை
வையாது மலம் மாயை கன்மம் முதலியவற்றிற் கட்டுப்பட்டுத் திண்டாட
செய்யும் திருவிளையாடல் நினது கிருபைக்கு நலமோஎன்பார், இரக்கமீதோ
என்றனர். (௬௬௩

இரக்கமொடு பொறையீத லறிவாசார
மில்லேனல் லோர்களீட்டங் கண்டாற்
கரக்குமியல் புடையேன்பாழ் நெஞ்சமெந்தாய்
கருந்தாதோ வல்லுருக்கோ கரியகல்லோ.

(இ - ள்.) இரக்கமொடு-இரக்கத்துடன், பொறை-பொறுமை, ஈத
கொடை, அறிவு - ஞானம், ஆசாரம் - ஒழுக்கம், இல்லேன் - இல்லாதவ
கிய, நான் - நான், நல்லோர்கள் - சிவனடியார்கள், ஈட்டம் - திருக்கூட்ட
தினை, கண்டால் - தரிசித்தால், கரக்கும்-ஒளிக்கின்ற, இயல்பு உடையேன்
இயற்கையுடையேன், பாழ் நெஞ்சம் - என்னுடைய பாழ்மனமானது,
தாய் - எந்தையே, கருந்தாதோ - இரும்போ, வல்உருக்கோ - வலிய உ
குத்தானோ, கரியகல்லோ - கருங்கல்லோ, என்க.

(வி - ரை.) சன்மார்க்க நெறியினின்றவர்கட்கு இரக்கம், பொறு
கொடை, ஞானம், ஆசாரம், நல்லோர் கூட்டுறவு முதலியாவசியம் வேண்
மெனவும், இவையில்லாதவனுடைய மனம் இரும்பு, உருக்கு, கருங்கல் மு
லியவற்றை யொக்குமெனவும் கூறினர் (௬௬

---

## * பராபரக்கண்ணி.

சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதற்
பாராதியாண்ட பதியே பராபரமே.

(பொழிப்புரை.) சிறப்புவாய்ந்த தெய்வத்தன்மை பொருந்திய திருவருளென்னும் பூமி முதலாக சிவவுலக முதலாயபூமிகளை யாண்டருளிய தலைவனே பராபரமே.

திருவருளாம் பூமியென்றது முப்பத்தாறு தத்துவங்கட்கும் ஆதாரபூதமாயுள்ள சிவசத்தியினை. (௧)

கண்ணாரக்கண்டோர் கருப்பொருள் காணாமலருள்
விண்ணாடிருந்த வின்பவெற்பே பராபரமே.

பொ-ரை. (தேவரீரைக்) கண்ணாரத் தரிசித்தோர்கள் பிறப்பென்னும் உண்மையினை அடையாமல் வாழும்படிசெய்தருள் சிதாகாயத்தில் எழுந்தருளியிருந்த வானந்தமலையே. (௨)

சிந்தித்தவெல்லா மென்சிந்தை யறிந்தேயுதவ
வந்த கருணை மழையே பராபரமே.

பொ-ரை. (அடியேன்) நினைத்த வெல்லாவற்றையும் என் கருத்தறிந்து அருள் செய்யும்பொருட்டு எழுந்தருளிவந்த வருள்மழையே. (௩)

ஆராவமுதே யரசேயானந்த வெள்ளப்
பேராறேமோனப் பெருக்கே பராபரமே.

பொ-ரை. தெவிட்டாத வமுதமே, தலைவனே, சுகப்பெருக்கோடும் பெரியநதியே, மவுனவெள்ளமே. (௪)

ஆரறிவாரென்ன வனந்தமறை யோலமிடும்
பேரறிவே யின்பப் பெருக்கே பராபரமே.

பொ-ரை. தேவரீரைத் தெரிந்துகொள்ள வல்லவர்யாரென்ன அநேகமானவேதங்கள் முழங்குகின்ற பெரியஞானமே ஆனந்த வெள்ளமே.

உரைபிறந்த வன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரையிறந்த வின்பக் கடலே பரர்பரமே,

பொ-ரை. மவுனமுற்ற வடியார் மனத்தினிடத்தே பெருஞ்சோதியாய் வளர்ந்து அளவற்றுநின்ற சுகக்கடலே. (௬)

* இக்கண்ணிகளில்வரும் அரியவிஷயங்கள் பெரும்பாலும் முன்னமுள்ள விருத்தப்பாக்களில் வந்திருத்தலினாலும், அவ்வரிய விஷயங்களைப் பிரமாணவாயிலாக அங்கங்கே நன்குவிளக்கியிருத்தலினாலும், மீண்டும் விசேஷங்களெழுதாமல் அத்தியாவசியமான விஷயங்கள்மாத்திரம் பொழிப்புரையுள் வளைவிற்குள் குறிக்கப்பட்டிருக்கின்றன.

எத்திக்குந்தானுகி யென்னிதயத் தேயூறித்
தித்திக்கு மானந்தத்தேனே பராபரமே.

பொ-ரை. எத்திசையினும் வியாபகமுற்று அடியேனிருதயத்திலுஞ் சிறந்து சுகத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கு மின்பத்தேனே. (எ)

திக்கொடுகீழ் மேலுந் திருவருளாம் பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக்கனியே பராபரமே.

பொ-ரை. எட்டுத்திசைகளுடனே பூமியினும் ஆகாயத்தினும் வியாபித்திருக்கும் தேவரீர் திருவருளுண்மை யினைத்தெரிந்த (ஞானிகள்) உள்ளங்கை நெல்லிக்கனியே. (அ)

முத்தேபவளமே மொய்த்தபசும் பொற்சுடரே
சித்தேயென் னுள்ளத்தெளிவே பராபரமே.

பொ-ரை. முத்தே, பவளமே, பசுமைதங்கிய பொன்னெளியே, அறிவே அடியேன்மனத்தெளிவே. (கூ)

கண்ணேகருத்தே யென்கற்பகமே கண்ணிறைந்த
விண்ணே யானந்தவியப்பே பராபரமே.

பொ-ரை. பகிர்முக விஷயங்களைக் கிரகிக்கும் நேத்திரமே, அந்தர்முக விஷயங்களைக் கிரகிக்கும் மனமே, விரும்பினவற்றைத் தந்தருளுங்கற்பக விருட்சமே. தரிசிக்கத்தகுந்த சிதாகாயமே, ஆனந்த முதவுமாச்சரியப்பொருளே. (க0)

வாக்காய்மனதாய் மனவாக்கிறந்த வர்பாற்
றூக்காதேதாக்குந் தனியே பராபரமே.

பொ-ரை. வாக்காகி மனமாகி சொல்லும் நினைவுங்கடந்த ஞானிகளிடத்து முற்பட்டு விளங்காது அகத்தில்விளங்கும் ஒப்பற்றவஸ்துவே. (கக)

பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த் தோன்றவொரு
வார்த்தை சொல்லவந்தம்னுவே பராபரமே.

பொ-ரை. கண்டவிடமெல்லாம் சிதாகாயமாகத் தரிசிக்க ஒரு சித்தாந்த மகாவாக்கியத்தை வுபதேசிக்க வெழுந்தருளிய மந்திரவடிவே. (கஉ)

வானந்தமண்ணினந்தம் வைத்து வைத்துப் பார்க்கவெனக்
கானந்தந் தந்த வரசே பராபரமே.

பொ-ரை. ஆகாயத்தின்மேலும் பூமியின்கீழும் தேவரீர் வியாபகத்தினைநோக்கி நோக்கித் தரிசிக்க அடியேனுக் கின்பமுதவிய வரசனே (கங)

அன்பைப்பெருக்கி யெனதாருயிரைக் காக்கவந்த
வின்பப் பெருக்கேயிறையே பராபரமே.

பொ-ரை. (என்பால்) அன்பினை விளைவித்து அடியேனது அருமையான வுயிரினைவாதரிக்க வெழுந்தருளிய வானந்தவெள்ளமே தலைவனே.

வானமெல்லாங் கொண்ட மௌனமணிப் பெட்டகத்துக்
கானபணி யான வணியே பராபரமே.

பொ - ரை. சிதாகாயமனைத்தினையும் தன்னுள்ளேவைத்த மவுன நிலையாகிய வழகிய பெட்டியினிடத்து வைக்கத்தகுந்த பூஷணமே. (௧௫)

ஓடு மிருநிதியு மொன்றாகக் கண்டவர்க
ணாடும் பொருளான நட்பே பராபரமே.

பொ - ரை. ஓட்டினையும் பெரிய திரவியத்தினையும் சமத்துவமாகப் பார்க்கத்தகுந்த ஞானிகள் நாடத்தகுந்த பொருளாகிய நண்பே. (௧௬)

சித்த நினைவுஞ் செயுஞ்செயலு நீயெனவா
ழுத்தமர்கட் கான வுறவே பராபரமே.

பொ - ரை. மனத்தின்கண்ணே யுதிக்குமெண்ணமும், அவ்வெண்ணத்தின்படி செய்யுஞ்செய்கையும் தேவரீரே (கன்மத்திற்குத் தகுந்தபடி பிரேரபிப்பவர் என்று) வாழ்கின்ற ஞானிகளுக்குத் தகுதியான சுற்றமே. (௧௭)

போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றியெனும்
வேதாந்த வீட்டில் விளக்கே பராபரமே.

பொ - ரை. ஞானக்கொழுந்தாக விளங்கும் புண்ணியவான்கள் போற்றி சய போற்றியென்று தோத்தரித்து, (சித்தாந்தப்பொருளைத் தெரிந்தி ற்கு அப்பொருளடங்கியிருக்கும்) வேதாந்த வீட்டிலேற்றிய தீபமே.

முத்தாந்த வீதி முளரிதொழு மன்பருக்கே
சித்தாந்த வீதிவருந் தேவே பராபரமே.

பொ - ரை. மோட்சமடவளாகத்தில் விளங்குகின்ற தேவரீர் திருவடித்தாமரையினை வணங்குகின்ற அன்பர் நிமித்தமே சித்தாந்தம் (என்னும் ராஜ) வீதியி லெழுந்தருளிவருகின்ற தெய்வமே. (௧௯)

ஈனந் தருமுடல மென்னதியா னென்பதற
வானந்தம் வேண்டி யலந்தேன் பராபரமே.

பொ - ரை. இழிவினையுண்டாக்குகின்ற சரீரத்தினை யென்னுடையதெனவும் மமகாரம் அகங்காரத்துடன் பேசும் பேச்சொழிய (தேவரீர்) சுகத்தினை விரும்பியது (கிடைக்கப்பெறாது) துன்படைந்தேன்.

என்புருகி நெஞ்ச மிளகிக் கரைந்துகரைந்
தன்புருவாய் நிற்க வலந்தேன் பராபரமே.

பொ - ரை. எலும்பு நெக்குருகி, மனங்கரைந்து, உருகியுருகி (தேவரீர்) அன்புமயமாக நிற்கவெண்ணி (யதுபெறாது) துன்படைந்தேன். (௨௧)

சுத்த வழிவாய்ச் சுகம்பொருந்தி னல்லாலென்
சித்தந் தெளியாதென் செய்வேன் பராபரமே.

பொ - ரை. கலக்கமற்ற அறிவுருவாகி யானந்தத்தை யடைந்தாலல்லாமல் அடியேன் மனம் தெளிவடையாது. இதற்கியான் என் செய்யக்கடவேன்? (உஉ)

மாறு வனுபூதி வாய்க்கினல்லா லென்மயக்கந்
தேறுதென் செய்வேன் சிவமே பராபரமே.

பொ - ரை. வேறுபடாத சிவானுபவம் பெற்றாலல்லாமல் என் மன மயக்கம் தெளியாது. இதற்குயான் என்செயக்கடவேன் சிவமே. (உ௩)

தாகமறிந் தின்பகிட்டை தாராயே லாகெடுவேன்
றேகம் விழுந்திடினென் செய்வேன் பராபரமே.

பொ - ரை. (அடியேனுக்குண்டாகியிருக்கிற) அவாவினைத் (தேவரீர்) தெரிந்து சுகநிஷ்டையினைக் கொடாயாயின் ஆ கெடுவேன்! உடல் நழுவி விடில் பின்னர் யான் என்செய்வேன் (உ௪)

அப்பாவென் னெய்ப்பில்வைப்பே யாற்றுகிலேன் போற்றி
செப்புவதல் லால்வேறென் செய்வேன் பராபரமே. [யென்று

பொ - ரை. என்றந்தையே! அடியேனுக்கு உன்னிடத்துதவும் திரவியமே (பிறப்பாலாகிய துன்பத்தினை) சகிக்கிலேன். (இதனை நீக்கிக்கொள்ள தேவரீருக்குத் துதி சொல்லுவதல்லாமல் வேறுவகையாக யானென் செய்யவல்லேன்? (உ௫)

உற்றறியு மென்னறிவு முட்கருவி போற்சவிமாண்
டற்றுமின்பந் தந்திலையே யையா பராபரமே.

பொ - ரை. புறக்கருவிகள் மூலமாகப் பொருந்தியறியு மென்னறிவும் உட்கருவிகளாகிய அந்தக் கரணங்களைப்போல வொளிமழுங்கியும் (இன்னம்) அடியேனுக்குச் சுகமளித்தாயில்லையே ஐயனே. (உ௬)

சொல்லா லடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கி
னல்லாலென் றாக மறுமோ பராபரமே.

பொ - ரை. (மவுனநிலையினா லறிவதல்லாமல்) சொல்லாற் சொல்லுதற்கரிய ஆனந்த சாகரத்தில் வாய்வைத்துண்டாலன்றி அடியேனுக்குண்டாயிருக்கிற மோட்சவிச்சை நீங்குமோ (உஎ

பாராயோ வென்னைமுகம் பார்த்தொருகா லென்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.

பொ - ரை. (குருமூர்த்தி கோலங்கொண் டெழுந்தருளிவந்து) என்னைப் பிரத்தியட்சமாகப் பாராயோ (அங்ஙனம்) ஒருகால் பார்த்து (அடி யேன் துன்பத்தை நீக்காயோ திருவாய்மலர்ந்தருளுவாய். (உ

ஓயாதோ வென்கவலை யுள்ளேயானந்த வெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே.

பொ - ரை. அடியேன்கவலை யென்னை விட்டொழியாதோ அடியேன் மனத்தில் சுகானந்தவெள்ளம் பெருகாதோ ஐயனே யருளிச்செய்வாய். ()

ஓகோ வுனைப்பிரிந்தா ருள்ளங் கனலில்வைத்த
பாகோ மெழுகோ பகராய் பராபரமே.

பொ - ரை. ஒகோ! தேவரீரைப் பிரிந்தவடியர்மனம் நெருப்பிலிட்ட பாகோ அன்றி நெருப்பிலிட்ட மெழுகோ வருளிச்செய்வாய் (கூ0)

கூர்த்தவறி வத்தனையுங் கொள்ளைகொடுத் துன்னருளைப்
பார்த்தவனு னென்னைமுகம் பாராய் பராபரமே.

பொ - ரை. (அடியேன் என்றுடைய) நுண்ணியவறிவு முழுதினையும் தேவரீருக்குக் கொள்ளையாகக் கொடுத்துவிட்டுத் தேவரீர் திருவருளொன்றினையே யெதிர்பார்த்துக் கொண்டிருப்பவனுன் ஆகலின் அடியேன் முகம்பார்த் தருளவேண்டும். (கூக)

கடலமுதே தேனேயென் கண்ணே கவலைப்
படமுடியா தென்னைமுகம் பார்நீ பராபரமே.

பொ - ரை. பாற்கடலிலுதித்த வமுதமே, தேனே, என்னிருகண்னே, அடியேன் பிரபஞ்சக் கவலையானது இனியனுபவித்து முடியாது ஆகலின் அடியேன் முகத்தினைத் தேவரீர் பார்த்தருளவேண்டும். (கூஉ)

உள்ள மறிவா யுழப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே.

பொ - ரை. (அடியேனுடன் தேவரீர் எக்காளும் பிரிவறநிற்பவராதவால்) அடியேன் மனக்கருத்தை யுணர்வாய், அடியேன் துன்பமுணர்தலை யுணர்வாய் ஆகலின் தேவரீர் அடியேனை யேற்றருளாது தள்ளிவிடுவையாயின் அறிவிலியாகிய நான் மிக வருந்துவேன். (கூங)

கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலவெனக்
கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய் பராபரமே.

பொ - ரை. (சுதந்தரமற்ற) இளமையான கன்றினிமித்தம் ஈன்றணிமையையுடைய பசு இயற்கைக்கருணையினால் மனமுருகி யிரங்குதல்போல, கருணையுருவாய்ந்த பிதாவே என்பொருட் டிரங்கி யருள்வாய் (கூச)

என்றுதவென்னமெலா மென்னிவென்னியேழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே.

பொ - ரை. (பெட்டெனக்கரிய பலவற்றை நினைந்த மனத்தில்) எண்ணக்கூடாத வெண்ணங்களையெல்லாம் எண்ணியெண்ணி யேழையேனுடைய மனமானது புண்படச்செய்தது இனிபோதும். (கூரு)

ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை
பாழிற் றிரிவதென்ன பாவம் பராபரமே.

பொ - ரை. தேவரீருடைய வடிமையாகிய நான் சமுத்திரத்தினிடைப் பட்ட திரணம்போல, (சுவர்க்க நரகங்களாகிய) அங்குமிங்கும் (எண்ணரிய பிறவிகளில்) வீணேயலைவது என்ன பாவப்பயன். (௩௬)

கற்றவறி வாலுனைநான் கண்டவன்போற் கூத்தாடிற்
குற்றமென்றன் னெஞ்சே கொதிக்கும் பராபரமே.

பொ - ரை. (பிரபஞ்சக்) கல்விகற்ற (சாமர்த்தியத்தினை முன்னிட்ட) அறிவினால் அடியேன் தேவரீரைப் பிரத்தியட்சமாகக் கண்டவன்போல நடித்தால் அங்ஙன நடித்தல் குற்றமென்று அடியேன் மனமே வாதிக்கும். ()

ஐயோ வுனைக்காண்பா னாசைகொண்ட தத்தனையும்
பொய்யோ வெளியாப் புகலாய் பராபரமே.

பொ - ரை. ஐயோ! தேவரீரைத் தரிசிக்கும்பொருட்டு அடியேனாசை கொண்டு (பாடுபட்ட) தெல்லாம் பொய்யாய் முடியுமோ தேவரீர் வெளிப் படையாகச் சொல்லவேண்டும். (௩௮)

துன்பக்கண் ணீரிற் றுளைந்தேற்குன் னருந்த
வின்பக்கண் ணீர்வருவ தெந்நாள் பராபரமே.

பொ - ரை. (பிரபஞ்ச சம்பந்தமாக) துன்பத்தினால் வடிகின்ற கண்ணீரிற்படிந்த வடியேனுக்கு அந்தர்முகத்தில் தேவரீர் நிரதிசய சுகத்தினாலுளதாகும் இன்பக்கண்ணீர் வடிருவது எந்நாளோ. (௩௯)

வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றுயுளறு
நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான் பராபரமே.

பொ - ரை. வஞ்சனையையும் பொய்யினையும் மனத்துள்ளேவைத்துப் பொறாமையுடையேனாகித் தடுமாறுகின்ற வடியேனுக்கும் சன்மார்க்கம் சித்திக்குமோ. (௪0)

பாசம்போய் நின்றவர்போற் பாராட்டி யானுமு
மோசம்போ னேனுன் முறையோ பராபரமே.

பொ - ரை. பிரபஞ்சப்பற்று நீங்கின ஞானிகள்போல அடியேனடித்து எந்நாளும் மோசம்போய்விட்டேன் இது கிரமமோ! (௪௧)

நன்றறியேன் றீதறியே னானென்று நின்ற...
ரென்றறியே னேழை யென்னே பராப... 

பொ - ரை. நன்மை ஈதென்றறியேன் தீமை ... வறியேன் நான் என்னும் அகங்காரத்துடன் நின்றவனின்னானென ...யேன். ஆகலின் அடியேனறிவில்லாதவன் இதற்குக் காரணமென்னே... (௪௨)

இன்று புதிதன்றே யெளியேன் படுந்துயர
மொன்றுமறியாயோ வுரையாய் பராபரமே.

பொ-ரை. எளியேன் அநுபவிக்கும் துன்பம் இந்தச்சன்மத்தில் மாத்திரமாகவந்ததன்றே பலசன்மத் தொடர்ச்சியன்றோ? இதனைத் தேவரீர் சிறிதுமுணர்ந்திலையோ சொல்லாய். (௪௩)

எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைநான் பட்டதுய
ரத்தனையு நீயறிந்த தன்றோ பராபரமே.

பொ-ரை. அடியேன் பலவுலகிலெடுத்த சென்மங்கள் எத்தனைகோடி யச்சென்மங்கடோறும் அடியேனனுபவித்த துன்பங்களெவ்வளவு, அவற்றையெல்லாம் தேவரீரறிந்ததல்லவோ? (௪௪)

இந்நாட் சற்று மிரங்கிலையேற் காலன்வரு
மந்நாட் காக்கவல்லா ரார்காண் பராபரமே.

பொ-ரை. இந்நாளில் சிறிது அடியேன்மீ திரக்கஞ்செய்திலையாயின் மனெருங்குமக்காலத்தில் அடியேனைக் காத்தருளவல்லவரார் (காலகாலராகிய) தேவரீரே யாலோசிக்கவேண்டும். (௪௫)

உற்றுற்று நாடி யுளமருண்ட பாவியைநீ
சற்றிரங்கி யாளத் தகாதோ பராபரமே.

பொ-ரை. அடிக்கடி உற்றுற்றுப்பார்த்துத் தேவரீர் தரிசனந்தராமையின் மனத்தின்கண்ணே மிகமருட்சியினைக்கொண்ட பாவியேனைச் சிறிதிரக்கஞ்செய்து தேவரீர் ஆளத்தகாதோ. (௪௬)

எள்ளளவு நின்னைவிட வில்லா வெனைமயக்கிற்
றள்ளுதலா லென்னபலன் சாற்றாய் பராபரமே.

பொ-ரை. எள்ளளவேனும் தேவரீரைவிட வேறு துணையில்லாத அடியேனை மீட்டும் பிறவிமயக்கமாகிய பள்ளத்தில் தள்ளுதலினால் தேவரீர்க் குண்டாம் பயன்யாது சொல்லாய். (௪௭)

பாடிப் படித்துலகிற் பாராட்டி நிற்பதற்கோ
தேடி யெனையடிமை சேர்த்தாய் பராபரமே.

பொ-ரை. (அடியேன் பொருட்டுச் சிறிதும் திருவருளினைத் தேடிக் கொள்ளாது) பற்பல செய்யுட்களைப்பாடியும், பலபல நூல்களைப்படித்தும், [illegible] நிற்கவோ அடியேனை யடிமையாகத் தேடிச்சேர்த்தாய். (௪௮)

சொன்னத்தைச் சொல்வதல்லாற் சொல்லறிவென் சொல்லிறுதி
யென்னத்தைச் சொல்லுவ னெளியேன் பராபரமே. [க்

பொ-ரை. முன்னோர்கள் சொல்லிவைத்தவற்றைச் சொல்லிக்கொண்டிருப்பதல்லாமல் சொல்லற்ற மவுனநிலையைத் தேடிச்சொல்வதற்குநான் சொல்லவல்லேன் ஏழையேன். (௪௯)

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா விருப்பதற்கே
யல்லும் பகலுமெனக் காசை பராபரமே

பொ - ரை. சொல்லாலேயும் அச்சொல்லின் பொருளாலேயும் விவகரிப்பதைவிட்டு மௌனமுற்று வாழ்வதற்கே இரவும் பகலு மெனக்காசையுண்டு. (ருo)

நேச நிருவிகற்ப நிட்டையல்லா லுன்னடிமைக்
காசையுண்டோ நீயறியா தன்றே பராபரமே.

பொ - ரை. (பிரபஞ்சத்தை மறந்திருக்கும்) நிருவிகற்பசமாதியி லன்புஉண்டேயல்லாமல் தேவரீர் அடிமைக்கு வேறிலாசையுண்டோ இவ்வுண்மை தேவரீருணராததல்லவே. (ருக)

துச்சனென வேண்டாமித் தொல்லுலகி லல்லல் கண்டா
லச்ச மிகவுடையே னையா பராபரமே.

பொ - ரை. அடியேனையற்பனென நினைக்கவேண்டாம், இப்பழைய பிரபஞ்சத்தில் உள்ள துன்பங்களைக் கண்டால் அவைகட்கு மிகவு மஞ்சுதலுடையேயேனையனே. (ருஉ)

கண்ணுவா ரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே.

பொ - ரை. அடியேன் கேத்திரங்கட்குச் சமானமானவராயினும் அவர்கள் தேவரீரைக் கைகூப்பிவணங்காராயின் அந்த மண்ணுவார் சினேகத்தினை அடியேனொருபொருளாகமதிக்கேன். (ருங)

கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
வெல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே.

பொ-ரை. (யாதொரு சீவனையும் எதன்பொருட்டேனும்) கொல்லாதிருக்குமோர் விரதமானது இவ்வுலகமுழுதும்பரவ ஆன்மகோடிகட்கெல்லாம் எடுத்துச்சொல்லுதற்கே அடியேனுக்கு விருப்பமுளது. (ருச)

எத்தாற் பிழைப்பேனோ வெந்தையே நின்னருட்கே
பித்தானேன் மெத்தவுநான் பேதை பராபரமே.

பொ - ரை. அடியேன் தந்தையே, எவ்விதமான வுபாயத்தினால் பிழைத்திடுவேனோ (அறியேன்) தேவரீர் திருவருட்பேற்றுக்கே பித்தாகியிருக்கின்றேன். அடியேன் மிகவுமறிவிலேன். (ருரு)

வாயினாற் பேசா மௌனத்தை வைத்திருக்குந்
தாயிலார் போனுன்றளர்ந்தேன் பராபரமே.

பொ - ரை. வாயினாற் பேசக்கூடாததாகிய மௌனவுணர்நிலையை அடியேனூட்டிநிற்கும், (தேவரீரனுக்கிரகமின்மையின்) தாயில்லாத புதல்வர் தளர்தல்போல அடியேன் றளர்ந்தேன். (ருசு

அன்னையிலாச் சேய்போ லலக்கணுற் றேன்கண்ணா
ரென்னகத்திற் றாய்போ லிருக்கும் பராபரமே.

பொ - ரை- தாயில்லாத பிள்ளையைப்போலத் துன்பமடைந்தேன். ண்ணாரவடியேன் மனத்திலே தாயைப்போ லெழுந்தருளியிருக்கும் பரா ரமே. (ருஎ)

உற்றவினைக் கிற்றுயர முள்ளுள்ளே செந்தீயாய்ப்
பற்றநொந்தே னென்னைமுகம் பார்நீ பராபரமே.

பொ - ரை. (அடியேனிலைமையினை) ஆராய்ந்து என்னைப்பார்த்தால் யரமானது மனத்திலுள்ளே நெருப்பினைப்போலப் பற்றியெரிதலால் நொ தேன். தேவரீர் என்னைமுகம் பார்ப்பீராக. (ருஅ)

பொய்யனிவ னென்றுமெள்ளப் போதிப்பார் சொற்கேட்டுக்
கைவிடவும் வேண்டாமென் கண்ணே பராபரமே.

பொ - ரை. இவன் பொய்யனென்று (யாராவது தேவரீரிடத்து) மை ப்போதிப்பவருடைய (கோட்) சொல்லைச் செவியேற்றுத் தேவரீர் என் னக் கைவிடவேண்டாம். அடியேன் கண்போன்றவனே. (ருக)

என்னை மதித்தே யிளைப்பறிந்தே யேழையுய்யும்
வண்ணந் திருக்கருணை வையாய் பராபரமே.

பொ - ரை. அடியேன் எண்ணத்தினையறிந்து அடியேன் மெலிவினை ணர்ந்து ஏழையேன் உய்யுமாறு திருக்கருணை வைத்தல்வேண்டும். (சு0)

நாட்டாதே யென்னையொன் றாட்டி யிதமகிதங்
காட்டாதே யெல்லாநீ கண்டாய் பராபரமே.

பொ - ரை. அடியேனை ஒருபொருளாக மதித்து (தேவரீர் மனத்தில்) ாட்டவேண்டாம். அங்ஙனம் நாட்டி (என் கன்மத்திற்குத்தக்கபடி) நன்மை ீமைகளைக்கூட்டிவைக்கவேண்டாம் எல்லாவற்றிற்கும்(காரணம்)தேவரீரே.

உன்னைநினைந் துன்னிறைவி னுள்ளே யுலாவுமென்னை
யன்னைவயிற் றின்னமடைக் காதே பராபரமே.

பொ - ரை. தேவரீரையே தியானஞ்செய்துகொண்டு தேவரீரது திருவ ருள் வியாபகத்திலேயே சஞ்சரிக்கின்றவடியேனை யின்னமுந் தாய்வயிற்றி லடைக்கவேண்டாம். (சுஉ)

பரமுனக்கென் றெண்ணும் பழக்கமே மாறா
வரமெனக்குத் தந்தருளென் வாழ்வே பராபரமே.

பொ - ரை. அடியேனைக் காத்தருளுதல் தேவரீருக்கே கடனென்று எண்ணிவாழும் பழக்கத்தினையே அழியாதவரமாக அடியேனுக்குத்தந்தருள வேண்டும். என்வாழ்வினுக்குக் காரணமாயுள்ளவனே. (சுங)

வந்தித்து நின்னை மறவாக் கடனாகச்
சிந்திக்க நின்னருள் செய்வாய் பராபரமே.

பொ - ரை. தேவரீரை வணங்கி, மறவாமனினைத்தாலே கடமையாகக் கொண்டு தேவரீரையே சிந்திக்கத் திருவருள் செய்தருளவேண்டும். (௬௪)

எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
றெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே

பொ - ரை. எத்தகைய சிற்றுயிரினையும் என்னருமையான வுயிர்போன்று எண்ணி அவைகட்கிரங்குமாறு தெய்வத்தன்மைவாய்ந்த திருவருளாகிய கருணைசெய்தல் வேண்டும். (௬௫)

வெட்டவெளிப் பேதையன்யான் வேறுகப டொன்றறியேன்
சிட்டருடன் சேரனந்த தெண்டம் பராபரமே.

பொ - ரை. அடியேன் வெளிப்படையான (நெஞ்சினைவாய்ந்த) வறிவிலி வேறுகபடத்தன்மையையறியேன் (ஆகலின் அடியேனுய்யும்பொருட்டு) நினது அடியாருடன் சேர்த்தருளுக (அதன்பொருட்டு) தேவரீருக்கு அனேகமான தெண்டமிடுகிறேன். (௬௬)

இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே.

பொ - ரை. இரவும்பகலுமில்லாத (துரியாதீதத்திலே) ஏகாந்த சிவராஜயோகம் அடியேனுக்குண்டாகவும் அடியேன்மீது தேவரீர் திருக்கருணை வைத்தல்வேண்டும். (௬௭)

மால்காட்டிச் சிந்தை மயங்காம னின்றுசுகக்
கால்காட்டி வாங்காதே கண்டாய் பராபரமே

பொ - ரை. அடியேனுக்குத் (திருவருள் கூட்டிவைப்பதுபோல) ஆசைகாட்டி அந்நிலையினின்று நான் மயங்காவண்ணம் சுகாரம்பம்செய்த பின், பின்வாங்காதருள வேண்டும். (௬௮)

எப்பொருளு நீயெனவே யெண்ணிநான் றோன்றாத
வைப்பையழி யாநிலையா வையாய் பராபரமே

பொ - ரை. தேவரீர் (எங்கும் வியாபித்திருத்தலினால் அவ்வியாபகத்துட்பட்ட) எவ்வகைப் பொருள்களும் தேவரீரே யென்று நினைத்து நான் என்னும் மகங்காரம் தலையெடாத இடத்தை எனக்கு அழியா நிலையாக்கி வைத்தருளவேண்டும். (௬௯)

சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ பராபரமே.

பொ - ரை. (புறக்கரண அந்தக்கரண வியாபாரங்களில்லாமல்) சும்மா விருப்பதே சுட்டுதலில்லாத பரிபூரண நிலையென் றெம்மாலறியப்படுதற் கெளிதாமோ. (௭௦)

முன்னொடுபின் பக்க முடியடிநாப் பண்ணறவின்
றன்னொடுநா னிற்பதென்றோ சாற்றாய் பராபரமே.

பொ - ரை. (தேவரீருடைய) முன், பின், இருபக்கம், முடி, அடி, நடு என்னும் (இடங்களில் அடியேனிற்கும்) தன்மையற்று உன்னுடனே இரண் டறக்கலந்து நிற்பது எந்நாளோ சொல்லாய். (எக)

மைவண்ணந் தீர்ந்த மௌனிசொன்ன தெவ்வண்ண
மவ்வண்ண நிட்டை யருளாய் பராபரமே.

பொ - ரை. அஞ்ஞான நீங்கப்பெற்ற மௌனகுரு (அடியேனுக்கு) உப தேசித்த தெவ்விதமோ அவ்விதமான சிவயோக நிட்டையினை யருள்செய் வாய். (எஉ)

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே.

பொ - ரை. வித்து ஆதாரமாகவல்லது (விருட்சமுதலிய) யாவும் விளை தலுண்டோ (இல்லையதுபோல) தேவரீர் திருவருள் ஞானமின்றி (ஆன்ம கோடிகளாகிய) எங்கட்குச் செயலுண்டோ சொல்லாய். (எ௩)

ஆங்கார மற்றன் னறிவான வன்பருக்கே
தூங்காத தூக்கமது தூங்கும் பராபரமே.

பொ - ரை. அகங்காரமொழிந்து தேவரீர் விஷயஞானருபமான அன் பருக்கே (பிரபஞ்ச வியாபாரத்துடன்) உறங்காமல் (அருள் வியாபாரத்து டன்) உறங்கும் அத்தன்மை யோங்காநிற்கும். (எச)

சிந்தை யவிழ்ந்தவிழ்ந்து சின்மயமா நின்னடிக்கே
வந்தவர்க்கே யின்பநிலை வாய்க்கும் பராபரமே.

பொ - ரை. மனங் கசிந்துகசிந்து ஞானமயமாகிய தேவரீர் திருவடிநீழ லில் வந்தடைந்தவர்க்கே ஆனந்தநிலை கிடைக்கும். (எரு)

சொல்லாடா வூமரைப்போற் சொல்லிறந்து நீயாகி
னல்லா லெனக்குமுத்தி யாமோ பராபரமே.

பொ - ரை. வார்த்தை சொல்லுதற்குக் கூடாத ஊமைகளைப்போலப் பேச்சற்று (சிவோகம் பாவனையில்) தேவரீர் தன்மையடைந்தாலல்லது அடி யேனுக்கு முத்திகிடைக்குமோ. (எசு)

பேச்சாகா மோனம் பிறவா முளைத்தென்றற்
காச்சாச்சு மேற்பயனுண் டாமோ பராபரமே.

பொ - ரை. வார்த்தையற்ற மௌனநிலையானது உண்டாகி விளைந்த தென்றற்கு (எது) ஆயிற்று ஆயிற்று. (அதனால்) இனியதன்பயனாகிய முத்தியெனக்குண்டாமா. (எஎ)

கெட்டியென்றுன் னன்பர்மலங் கெட்டயர்ந்தோர் பூரணமாந்
தொட்டிலுக்குட் சேய்போற் றுயின்றார் பராபரமே.

பொ - ரை. (ஞானசாதனையில் மிகச்) சமர்த்தர் (என்றுலகத்தாரால் சொல்லப்பட்ட) தேவரீரது அன்பர் ஆணவ மலசம்பந்த மொழியப்பெற்று அயர்ந்து ஒப்பற்ற பரிபூரணநிலையாகிய தொட்டிலிலே (சிவராஜயோகானுபவ நித்திரையிலிருந்து) பாலர்போன்று துயின்றார்கள். (எஅ)

காட்ட வருளிருக்கக் காணு திருண்மலத்து
நாட்ட மெனக்குவர னன்றோ பராபரமே.

பொ - ரை. (தேவரீர் தரிசனத்தினைக்) காட்ட உன் திருவருளிருக்க அதனை முன்னிட்டுக்காணுமல் இருளுருவமாகிய ஆணவாதிமலத்தின்கண்ணுட்டம் அடியேனுக்குளதாதல் நன்மையோ. (எக)

எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய் பொறுக்கு
மத்தன்மை நின்னருளு மன்றோ பராபரமே.

பொ - ரை. எந்தவிதமான குற்றத்தைப் பாலர்செய்தாலும் அதனைத் தாயானவள் பொறுத்துக்கொள்ளுவள். தேவரீர் திருவருளும் (எம்போன்றார் குற்றம்பொறுத்தற்கு) அத்தன்மையல்லவோ. (அO)

எத்தனையோ தேர்ந்தாலு மென்னாலே யின்பமுண்டோ
சித்துருவே யின்பச் சிவமே பராபரமே.

பொ - ரை. எத்தனைவிதமாக ஆராய்ந்து பார்த்தாலும் (தேவரீரால் எனக்குச் சுகமுளதேயன்றி) அடியேனால் எனக்குளதாவதோர் சுகமுளதோ அறிவுருவமே சுகத்தையளிக்கின்ற பரமசிவமே. (அக)

மண்ணொடுவிண் காட்டி மறைந்துமறை யாவருளைத்
கண்ணொடுகண் ணுகவென்று காண்பேன் பராபரமே.

பொ - ரை. மண்முதல் ஆகாயமுதலாக வுள்ள பிரபஞ்ச நிலையினைத் தெரிவித்து, மறுபடியும் திரோதனத்தால் மறைந்து மறுபடியு மொவ்வொருகால் தோன்றிக்கொண்டிருக்கிற தேவரீர் திருவருளைக் கண்ணுடன் கூடிய கண்ணொளிபோல எந்நாள் (நீக்கமின்றிக்) காணப்பெறுவேன். (அஉ)

பஞ்சரித்து நின்னைப் பலகா லிரந்ததெல்லா
மஞ்ச லெனும்பொருட்டே யன்றோ பராபரமே.

பொ - ரை. அடியேனுடைய வெளிமைத் தன்மையைக்காட்டி, பலநாளுந் தேவரீரை அடியேன் யாசித்ததெல்லாம், அடியேனை யஞ்சாதேயென்று தேவரீர் சொல்லியருளல் பொருட்டேயல்லவோ. (அங)

எங்கெங்கே பார்த்தாலு மெவ்வுயிர்க்கு மவ்வுயிரா
யங்கங் கிருப்பதுநீ யன்றோ பராபரமே.

பொ - ரை. எவ்விடத்து நோக்கினும் (அவ்வவ்விடங்களில்) எத்தகைய உயிர்களிடத்தும் அவ்வவ்வுயிராயிருப்பது தேவரீரல்லவோ. (அச)

எச்சிலென்று பூவை யிகழ்ந்தோர்க் குனைப்போற்றப்
பச்சிலையுங் கிள்ளப் படுமோ பராபரமே.

பொ - ரை. (வண்டின்) எச்சிலாய்விட்டதென்று பூவை நீக்கினோர் கட்குத் தேவரீரை யருச்சித்துவணங்கப் பச்சிலையும் கிள்ளத்தகுதியாமோ (புட்பத்தைக்கொண்டே மந்திரத்தாற் சுத்திசெய்து அருச்சிக்கவேண்டும்.)

அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே
யெந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே.

பொ - ரை. (மனம் புத்தி சித்தம் அகங்காரம் ஆகிய) அந்தக்கரணங் கள் ஒடுங்கும்படி துறத்தலே எத்தகைய துறவினு நன்மையாம் எந்தையே,

தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே.

பொ - ரை. (ஆன்மாவாகிய) தன்னை இத்தகைய சொரூபனென் றுணர்ந்தால் பரமான்மாவின்மேற் பற்றுண்டாதலன்றி மற்றொருபற்றுமுள தாமோசொல்லாய். (௧௪)

அன்பாற் கரைந்துகண்ணீ ராறுகண்ட புண்ணியருக்
குன்பால் வரவழிதா னுண்டோ பராபரமே.

பொ - ரை. அன்பினால் (மனம்) உருகித் தமது கண்ணில் ஆற்றினைப் போல நீரைப்பெருக்கின புண்ணியவான்கட்குத் தேவரீரையடைய வழிதா னுண்டாமோ. (அத்தகையரே மோட்சமடைவர்). (௧௫)

தன்னை யறிந்தருளே தாரகமா நிற்பதுவே
யுன்னை யறிதற் குபாயம் பராபரமே.

பொ - ரை. ஆன்மாவாகியுந் தன்னை விசாரித்துப் பின்னர் திருவருளை ஆதாரமாக முன்னிட்டுக்கொண்டு அத்திருவருண்மயமாய் நிற்றலே தேவரீ ரைத் தெரிந்துகொள்ளற்குபாயமாம். (௧௬)

கற்றகலை யானிலைதான் காணுமோ காண்பதெல்லா
மற்றவிடத் தேவெளியா மன்றோ பராபரமே.

பொ - ரை. (பிரபஞ்சமுகமாகவிருந்து) படித்த கல்வியின் தேர்ச்சி யினால் உண்மைநிலை யறியப்படுமோ. (முன்னிலைச்சுட்டாக) காணப்படுவன வெல்லாம் தோன்றுவிடத்தன்றோ (உண்மை) வெளியாகும். (௧௭)

கண்மூடிக் கண்விழித்துக் காண்பதுண்டோ நின்னருளாம்
விண்மூடி னெல்லாம் வெளியாம் பராபரமே.

பொ - ரை. கண்ணினைமூடித் (தியானித்தலினாலும்) கண்ணை விழித் துத் (தியானித்தலினாலும்) உண்மையறியப்படுமோ, தேவரீர் திருவருண் மயமாய் ஆகாயமுழுவதுங் கண்டகாலத்து எல்லாவுண்மையும் தோன்றும்.

நேரே நினதருளென் னெஞ்சைக் கவரினென்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே.

பொ - ரை. தேவரீர் திருவருளானது அடியேன்மனத்தினை நேராகக் ரித்துக்கொண்டால் அன்னிய பொருளொன்றினையும் காணேன் சிவான நந்தத்தையுமடைவேன். (கக)

வான்காண வேண்டின் மலைபோற லொக்குமுன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே.

பொ - ரை. தேவரீரை (என் சுதந்தரத்தால்) தரிசிக்கும்பொருட்டுப் பாவனைசெய்கின்ற பாவனை யானது ஆகாயத்தைக்காண விரும்பினேன் லை போறதலை யொக்கும். (திருவருளை முன்னிட்டே பார்தல் வேண்டும்.)

வாதனைவிட் டின்னருளின் மன்னினல்லால் வேறுமொரு
சாதனைதா னுண்டோநீ சாற்றாய் பராபரமே.

பொ - ரை. (பிரபஞ்ச) வாதனையைநீங்கித் தேவரீர் திருவருளினிடத்து அழுந்தினாலல்லாமல் (வீடுபேற்றுக்கு) வேறுமொரு சாதனமும் வேண் டுமோ சொல்லாய். (க0க)

பாரகமும் விண்ணகமும் பற்றாக நிற்பதருட்
டாரகத்தைப் பற்றியன்றோ சாற்றாய் பராபரமே.

பொ - ரை. மண்முதல் ஆகாயம் பரியந்தமுள்ளயாவும் காரியப்படுவதற்கு ஆதாரமாயிருப்பது தேவரீர் திருவருளாகிய வாதாரத்தினைப்பற்றி யல்லவா சொல்லாய். (க0உ)

விளக்குந் தகளியையும் வேறென்னார் நின்னைத்
துளக்கமறச் சிவனென்று சொல்வார் பராபரமே

பொ - ரை. தீபத்தினையும் (அத்தீபமெரிதற்குக் காரணமாயுள்ள) தகளியையும் (ஆகுபெயராலொன்றாகக் கூறினும் உண்மையில்) வெவ்வே றென்றது (ஒன்றாகச்சொல்லு மூடர்களே) தேவரீரை (சிவனைக்காட்டிலும் வேறான சிவனென்றது) தேவரீர் அஞ்ஞானகலுஷித அவிவேகத்தாலே வேறுபினையென்று சொல்லுவர். (க0௩)

பாராதி நீயாப் பகர்ந்தா லகமெனவு
மாராயுஞ் சிவனுநீ யாங்கான் பராபரமே.

பொ - ரை. பிருதிவிமுதலியவைகளைத்தேவரீராகச் சொல்லுமிடத்து மன்னை வசக்கரித்தாராயும் சிவனும் நீயேயாகும். (தேவரீர் பிருதிவியாதி அட்டமூர்த்தமாக விளங்கலின் சிவனைச்சிவனென்றது உபசாரம்) (க0ச)

பொய்யைப்பொய் யென்றறியும் போதத்துக் காதரவாய்
மெய்யருளே யன்றோ விளம்பாய் பராபரமே.

பொ - ரை. காரியரூபமான பதார்த்தங்களைக் காரியரூபமே (காரணமன்று) எனவறியும் அறிவுக்கு அதாரவாகவிருப்பது தேவரீர் மெய்யருளேயன்றோ சொல்வாயாக (திருவருளை முன்னிட்டே பிரபஞ்ச உண்மையினையறியவேண்டுமென்பதாம்) (௧௦௫)

வருவான்வந் தேனெனல்போன் மன்னியழி யுஞ்சகத்தைத்
தெரிவாக வில்லையென்ற நேரம் பராபரமே.

பொ - ரை. நிலையாகக் காணப்பட்டுக் (காரியரூபமாக) மாறுபடும் சகத்தைத் தெளிவாகக் (காரியரூபத்தா) லில்லை யென்றநேரம் இனிவருவானொருவன் துணிவுபற்றி வந்தேனென்றலையொக்கும். (௧௦௬)

மாயா சகமிலையேன் மற்றெனக்கோர் பற்றுமிலை
நீயேநா னென்று வந்து நிற்பேன் பராபரமே.

பொ - ரை. மாயாகாரியமாகிய பிரபஞ்சம் (எனக்குத்தோன்று திருக்குமேல்) எனக்கு வேறுபற்று மிலையாம். (அப்பற்று இலையாகவே தேவரீரைப் பற்றிக்கொண்டு சிவோகம் பாவனையில்) நீயே நானென்று வந்து நிற்பேன். (௧௦௭)

வானாதி நீயெனவே வைத்தமறை யென்னையுநீ
தானாகச் சொல்லாதோ சாற்றாய் பராபரமே.

பொ - ரை. (வியாபகத்தைநோக்கி) ஆகாய முதலியவற்றைத் தேவரீரேயென்று சொல்லிவைத்தவேதம் (அவ்வியாபகத்துட்பட்ட) அடியேனையும் தேவரீராகவே சொல்லாதோ நீ சொல்வாய். (௧௦௮)

வெள்ளக் கருணைமத வேழமா நின்னருட்கென்
கள்ளக் கருத்தே கவளம் பராபரமே.

பொ - ரை. வெள்ளம்போலும் கருணையாகிய மதத்தினைப் பொழியாநின்ற யானையாகிய தேவரீர் திருவருளுக்கு அடியேன் வஞ்சகமாகிய மனமே கவளமாம். (௧௦௯)

வண்டாய்த் துவண்டு மௌன மலரணைமேற்
கொண்டார்க்கோ வின்பங் கொடுப்பாய் பராபரமே.

பொ - ரை. வண்டினைப்போலத் துவண்டு மௌனமாகிய புஷ்பமஞ்சத்திலுற்றவர்கட்குத்தானோ தேவரீர் சுகங்கொடுப்பீர். (ஆம் ஏனையர்க்குக் கொடுக்கமாட்டீர்.) (௧௧௦)

மாயைமுத லாம்வினை நீ மன்னுயிர் நீ மன்னுயிர்தேர்ந்
தாயுமறி வானதுநீயன்றோ பராபரமே.

பொ - ரை. (சடமாகிய மாயையினைத் தேவரீர் காரியப்படுத்தலின்) மாயை முதலாகிய வினைக்கருவிகளுநீ, (தேவரீரறிவிக்க ஆன்மாக்களறிபவர்களாகலின்) அம்மாயைகளாற் றொழிற்பட்டு நிலைபெற்றிருக்கு முயிர்களுநீ, (சன்மத்திற்குத் தக்கபடி வறிவிப்பவரீயாகலின்) நிலைபெற்ற வுயிர்கள் மாயையைக்கடந்து தெளிந்த ஆராயுமறிவாயிருப்பது நீயல்லவோ. (௧௧௧)

என்னறிவும் யானுமென தென்பதுவு மாயிவைக
ணின்னவையே யன்றோ நிகழ்த்தாய் பராபரமே.

பொ-ரை. (எனக்கென யாதொரு சுதந்தரமில்லாதிருத்தலின்) என்னறிவும் நானும் எனதென்பதும் ஆகிய இவையாவும் (தேவரீர் பிரேரேணயாயிருத்தலின்) உன்றனுடையனவே யாமன்றோ சொல்லாய், (ககஉ)

பாரறியா தண்டப் பரப்பறியா துன்பெருமை
யாரறிவார் நானோ வறிவேன் பராபரமே.

பொ-ரை. (திருவருளைமுன்னிட்டன்றி) மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரு நின்னையறியார்கள் (ஆயின்) தேவரீர் பெருமையை யாரறிய வல்லார் (ஒருவருமில்லை அங்ஙனமாக) நானோ அறியவல்லேன். (ககங)

அண்ட மனைத்திலுமா யப்பாலுக் கப்பாலுங்
கொண்டநின்னை யாரறிந்து கொள்வார் பராபரமே.

பொ-ரை. எல்லா அண்டங்களுக்குள்ளும் அவ்வண்டங்களைக் கட வெளியிலும் (வியாபகம்) கொண்டிருக்கிற தேவரீரை யாரறிந்து கொள்ளவல்லவர்கள். (ககச)

ஒப்புயர்வொன் றின்றி பொலிபுகா மோனவட்டக்
கப்பலுக்காம் வான்பொருணீ கண்டாய் பராபரமே.

பொ-ரை. ஒப்பும் உயர்வும் சொல்லக்கூடாத சத்தமற்ற மவுனநிலையெ விருத்தவடிவமான மரக்கலத்திற்கேற்ற மேலாகிய சரக்குநீ.

என்போ லெளியவரு மெங்கெங்கும் பார்த்தாலு
முன்போல் வலியவரு முண்டோ பராபரமே.

பொ-ரை. அடியேனைப்போல் எளியவர்களும், தேவரீரைப்போல் வலியவர்களும் எவ்வெவ் விடங்களிலாராய்ந்து பார்த்தாலும் உண்டோ இல்லை. (ககரு)

பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின் செயலே
யார்க்குஞ் செயலிலையே யையா பராபரமே.

பொ-ரை. விசாரிக்கின் அண்டபிண்ட விரிவெல்லாம் தேவரீரின் கிருபையின் காரியமாகவே யிருக்கின்றன வேறொருவர்க்கும் ஒரு செயலுமில்லை. (ககசு)

ஒன்றே பலவே யுருவே யருவேயோ
வென்றே யழைப்பதுன்னை யென்றோ பராபரமே.

பொ-ரை. ஏகமே, அநேகமே, சகளமே, நிட்களமே, ஓ வென்று முறையிட்டுத் தேவரீரை யழைப்பது எந்நாளோ. (ககஅ)

செப்புவதென் னானுஞ் சிற்பரனே சிந்திப்ப தெல்லாநின்
றொப்பி யியானுமென வோர்ந்தேன் பராபரமே.

பொ - ரை, அடியேன் )தேவரீரைப்பற்றி) பேசுவனயாவு முன்செய மெனவும், (தேவரீரைப்பற்றி அடியேன் சிந்திப்பன யாவும் உன்றியானமெ னவும் ஆராய்ந்தறிந்துசொண்டேன். (கக‌க)

ஆரிருந்தென் னார்போயென் னாமுதா வின்னருளின்
சீரிருந்தா லுய்வேன் சிவமே பராபரமே

பொ - ரை. (மரணத்தினின்றுங் காப்பாற்றக்கூடாத) ஆரிருந்தாலெ ன்னலாபம், ஆர்போனாலென்ன நஷ்டம் (ஒன்றுமில்லை மரணத்தினின்றுங் காப்பாற்றக்கூடிய) அரிய அமிர்தமாகிய உன்றிருவருளின் பலமிருந்தால் அடியேன் பிழைப்பேன் மங்களகரனே.

வஞ்சநமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கு
மஞ்சி யுனையடைந்தே னையா பராபரமே.

பொ - ரை. (மரணத்திற் கேதுவாகிய) கபடத்தையுடைய இயமனு வேதனைக்கும், வலியபிறவி வேதனைக்கும் (ஆற்றாது) அஞ்சி (அவைகளை நீ க்காக்கவல்ல) தேவரீரைத் தஞ்சமடைந்தேன் ஐயனே. (கஉக

எந்தப் படியுன் னிதய மிருந்ததெமக்
கந்தப் படிவருவ தன்றோ பராபரமே.

பொ - ரை. தேவரீர் திருவுள்ளம் (அடியேன் கன்மத்திற்குத்தக்கப எவ்வாறுயிருந்ததோ அவ்வாறுயன்றோ எமக்கு இன்பதுன்பங்களுண்டாவ

எந்தெந்த நாளு மெனைப்பிரியாதென் னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டவருட் டேவே பராபரமே.

பொ - ரை. (இம்மை மறுமையாகிய) எக்காலத்தும் அடியேனைவிட் நீங்காமல் என்னுயிர்க்குயிராய் என்மனத்தின்கண் குடியாகக்கொண்டிருந் அருட்டெய்வமே. (கஉங

அஞ்சலஞ்ச லென்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சி லுணர்த்து நிறைவே பராபரமே

பொ - ரை. தேவரீர்தொண்டனாகிய எனக்கு அப்போதைக்கப்போ பயப்படாதே பயப்படாதேயென்று என்னிதயத்திலிருந்து அறிவிக்கின் பரிபூர்ணமே. (கஉ

என்னையுன் றன் கைக்களித்தார் யாவரென்னை யான்கொடுத்த
பின்னையுன்னாற் பெற்றநலம் பேசேன் பராபரமே.

பொ - ரை. அடியேனைத் தேவரீர்கையிற் பிடித்துக்கொடுத்தவர் வர். யானே வலியவடிமையாகிப்பிறகு தேவரீரால் நானடைந்த நன்ம யினை யெடுத்துப்பேச வலியிலேன். (கஉ

வாய்பேசா வூமையென வைக்கவென்றோ நீமௌனத்
தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே.

பொ-ரை. வாயினாற் பேசுதற்கொண்ணாத ஆமையென்று சொல்லும் படி அடியேனை மவுனநிலையில் வைப்பதற்கென்றுதானோ, நீ மவுனத்தாயாகி வந்து உன்திருவருளை யெனக்குத்தந்தனை. (கஉசு)

தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக்கொண் டென்னபல னெந்தாய் பராபரமே.

பொ-ரை. தேவரீரை அடியேனுக்கு ஆசாரியராகத்தந்து, அடியேனைத் தடுத்தாண்டடிமையாகக்கொண்ட தேவரீர் திருவருளுக்கு என்னாலென்ன பயன்றந்தையே. (கஉஎ)

மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே.

பொ-ரை. மார்க்கண்ட முனிவர் பொருட்டுவந்த இயமன் (தேவரீர் திருவடியாலுதையுண்டு மூர்ச்சித்து விழுந்தமையாகிய) பட்டபாட்டினை ஆலோசித்துப்பார்த்தா லுன்னடியார்க்கென்ன பயமுண்டு. (கஉஅ)

சுட்டியுண ரா மற் றுரியநிலை யாய்வெளியில்
விட்டநின்னை யானோ வியப்பேன் பராபரமே.

பொ-ரை. முன்னிலைச்சுட்டில்லாத துரியநிலையாகிய சிதாகாயத்தில் அடியேனைநிறுத்திய தேவரீரை(பேரறிஞரேயன்றிச்சிற்றறிஞனாகிய)நானோ புகழவல்லேன். (கஉகூ)

சூதொன்று மின்றியென்னைச் சும்மா விருக்கவைத்தா
யீதொன்றும் போதாதோ வின்பம் பராபரமே.

பொ-ரை. (பிரபஞ்சமுகமாக) வஞ்சகஞ் சிறிது மில்லாமல் அடியேனை மவுனநிலையி லிருக்கும்படி வைத்தனை இன்பமடைதற் கிதொன்றுமே போதாதோ. (கங0)

வாயொன்றும் பேசா மௌனியாய் வந்தாண்ட
தேயொன்றும் போதாதோ வின்பம் பராபரமே.

பொ-ரை. சற்றேனும் வாயொன்றும் பேசாத மவுனமூர்த்தியாய் எழுந்தருளிவந்தாண்டதொன்றுமே வெனக்கின்பங்கொடுக்க வமையாதோ.

என்று மிருந்தபடிக் கென்னை யெனக்களித்த
தொன்றும்போ தாதோ வுரையாய் பராபரமே.

பொ-ரை. எக்காலத்தும் என்னை (விடயங்களுக்காளாக்காமல்) நானிருந்தபடி எனக்கு ஆனந்தானுபவத்தைத் தந்ததாகிய வொன்றுமே யமையாதோ (மேலும் செய்யவேண்டிய உபகாரமேதுளது) சொல்லாய். (கஙஉ)

எண்டி சையிற் மேலான வெல்லாம் பெருவெளியாக்
கண்டவிடத் தென்னையுநான் கண்டேன் பராபரமே.

பொ - ரை. எட்டுத்திக்குகளும், பூமி ஆகாயமும் எல்லாம் சிதாகாயமாகக்கண்டவிடத்தில் (தேவரீருடன்) அடியேனையும் கண்டேன். (௧௩௩)

பித்தனையே தும்மறியாப் பேதையனை யாண்டவுனக்
கெத்தனைதான் றெண்ட மிடுவேன் பராபரமே.

பொ - ரை. பித்தனும், (உலகமின்னதெனவறியாத) பேதையனுமாகிய என்னை யாட்கொண்ட வுனக்கு (எவ்வளவுசெய்யினும் கைம்மாறாகாத) தெண்ட மெத்தனைச் சமர்ப்பிப்பேன். (௧௩௪)

தாயர்கர்ப்பத் தூடனமுந் தண்ணீருந் தந்தருளு
நேயவுனை யாரே நினையார் பராபரமே.

பொ - ரை. தாயின்வயிற்றுள் வாழுகிறகாலத்தும் அன்னத்தினையும் தண்ணீரினையும் தந்தாண்டநேடனே தேவரீரை நினையாதவர் யாவரோ (ஒருவருமில்லை.) (௧௩௫)

விரிந்த மனமொடுங்கும் வேளையினு ளாகப்
பரந்த வருள்வாழி பதியே பராபரமே.

பொ - ரை. (பிரபஞ்சமுகமாகப்) பரந்தமனம் (அதோமுகமாகக் குவியும்சமயத்து நானென்று முந்திவந்து பரந்தவுன் திருவருள் வாழக்கடவது இறைவனே. (௧௩௬)

சிந்தனைபோய் நானெனல்போய்த் தேக்கவின்ப மாமழையை
வந்து பொழிந்தனைநீ வாழி பராபரமே.

பொ - ரை. (பகிர்முக விஷயங்களை) நினைத்தலொழித்து, நான் (என்னும் அகங்காரமுனை வு) ஒழித்து (ஆனந்த நிறைந்து) ததும்ப இன்ப மழையினைச் சொரிந்தாய் ஆகலின் நீவாழக்கடவை. (௧௩௭)

தந்தேனை யோர்வசனந் தந்தபடிக் கின்பமுமாய்
வந்தேனே யென்றனைநீ வாழி பராபரமே.

பொ - ரை. (சித்தாந்த மகாவாக்கியமாகிய) ஒரு மொழியினை யுபதேசித்தேனே (அங்ஙனம்)உபதேசித்தவண்ணமே இன்பவடிவாகி வந்தேனே யென்று திருவாய்மலர்ந்தருளினை ஆதலால் நீ வாழக்கடவை. (௧௩௮)

மண்ணும்விண்ணும் வந்து வணங்காவோ நின்னருளைக்
கண்ணுறவுட் கண்டவரைக் கண்டாற் பராபரமே.

பொ - ரை. தேவரீர் திருவருளைப் (பிரத்தியட்சமாக) தரிசிக்க மனத்துள்ளே கண்டவர்களைத் தரிசித்தால் மண்ணுலகினரும் விண்ணுலகினரும் வந்து வணங்காரோ. (௧௩௯)

என்றுங் கருணைபெற்ற வின்பத் தபோதனர்சொல்
சென்றசென்ற திக்கனைத்துஞ் செல்லும் பராபரமே.

பொ - ரை. எக்காலத்தும் கருணையுடன் விளங்கிய சுகசொரூபிகளாகிய தவமுடையார் வாக்கானது எத்திசைகளினுஞ் சென்று செல்வாக்குறும்.

ஆடுவதும் பாடுவது மானந்த மாகநின்னைத்
தேடுவது நின்னடியார் செய்கை பராபரமே.

பொ - ரை (தன்னைமறந்து) கீர்த்தனஞ் செய்தலும், (அன்புமயமாக விருந்து) பாடுதலும், (தலங்கடோறும்) ஆனந்தமாகத் தேவரீரைத் தேடித் திரிதலும் தொண்டர்செய்கை. (௧௪௧)

பொங்கியநின் றண்ணருளைப் புட்கலமாப் பெற்றவர்கட்
கெங்கெழுந்தென் ஞாயி றியம்பாய் பராபரமே.

பொ - ரை. ததும்பிவழியும் தேவரீர் தண்ணிய திருவருளைப் பூரணமாய்ப்பெற்றவர்கட்கு (பிரபஞ்ச சம்பந்தமான) சூரியன் கிழக்கிலுதித்தலையொழித்து மற்றெந்தத்திக்கிலுதித்தால் தானென்ன சொல்வாய். (௧௪௨)

பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே.

பொ - ரை. (யாதொன்றையும் விகற்பியாமல் நிருவிகற்பமாய்க்காண்கின்ற) பாலருடன், (ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம் என்கிற நாலு காரியமுமில்லாத) பேயர், (வைதாரையும் வாழ்த்தினாரையும் சுட்டியறியாத) பித்தர் இவர்களுடைய குணத்தையடைந்திருப்பதே ஒழுக்கமிகுந்த ஞானிகளுடையசெய்கை. (௧௪௩)

உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந்
தொண்டர் விளையாட்டே சுகங்காண் பராபரமே.

பொ - ரை. (அன்னபானாதிகளை) உண்டும், (ஆடை முதலியவற்றை) உடுத்தும், (ஆபரணாதிகளை)பூண்டும் இப்பிரபஞ்சத்தார்போல இவ்விடத்துத் திரிகின்ற தொண்டரது விளையாட்டே அடிமைக்கு இன்பந்தருவதாயிருக்கின்றது. (௧௪௪)

கங்குல்பக லற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
யெங்கு மொருவழியே எந்தாய் பராபரமே.

பொ - ரை. இரவும் பகலுமின்றிச் சதோதய தரிசனமுடையார் கண்ட நெறியெவ்விடத்து மொரேநெறியாகும் எந்தையே. (௧௪௫)

காயநிலை யல்லவென்று காண்பா ருறங்குவரோ
தூயவருட் பற்றாத் தொடர்வார் பராபரமே.

பொ - ரை. சரீரமானது (எத்தனைகாலமிருக்கினும் நிலைபெறாதென்று அநுபவரூபமாக்) விசாரித்துப்பார்த்தவர்கள் நித்திரை செய்வாரோ? (செய்யார் மற்றென்செய்வாரெனின்) பரிசுத்தம் பொருந்திய திருவருளைப் பற்றுக்கோடாகக்கொண்டு தொடர்வார். (௧௪௬)

அப்புமுப்பும் போன்ற வயிக்யபரா னந்தர்தமக்
கொப்புவமை சொல்லவும்வா யுண்டோ பராபரமே.

பொ - ரை. (நீரோடுசேர்ந்த உப்புத் தன்சுவை முழுவது மந்நீர்க்காக் கித்தன்னோடொப்பச் சமன்செய்து நிற்குமாகலின்) நீரும் அதனுடன்கலந்த உப்பும்போன்ற சாயுச்சியமேலான ஆனந்தத்தையுடையவர்கட்குச் சமமாகவு வமித்துச்சொல்லுதற்கும் வாயுண்டோ. (எனவே உயிரைச்சேர்ந்த முதல் வனும் தனக்குரிய எண்குணங்களையு மவ்வுயிரின்கட் பதிப்பித்துத் தன்னோ டொப்புச்செய்து நிற்பனென்பதாம்.) (௧௪௭)

சிந்தந் தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்குங்
கொத்தடிமை யான குடிநான் பராபரமே.

பொ - ரை. மனந்தெளிந்து (சிவோகம்பாவனையில்) சிவமாந்தன்மையடைந்த பெரியாரெல்லார்க்கும் அடியேன் கொத்தடிமையான குடியாவேன்.

தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே.

பொ - ரை. தம்முயிர்போலவே (அன்னிய) எவ்வுயிருமாமென்றெண் ணித்தண்ணிய அருள்மிகுந்த செவ்விய நடையையுடையவருக்கு எக்காலத் தில் ஏவல்செய்யக்கடவேன். (௧௪௯)

விண்ணுக்கும்விண்ணாகி மேவுமுனக் கியான்பூசை
பண்ணிநிற்கு மாறு பகராய் பராபரமே.

பொ - ரை. (பூதசம்பந்தமான) ஆகாயத்திற்கும் (காரணமான) சிதா காயமாகிப் பொருந்துகின்ற தேவரீருக்கு அடியேன் (அந்தரியாமி) பூசை செய்து நிற்கும்வழியை எனக்குச் சொல்லியருளாய். (௧௫0)

நெஞ்சகமே கோயி னினைவே சுகந்தமன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே.

பொ - ரை. (அந்தர்யாமி பூசையில்) என்மனமே கோயிலாகவும், எ ன்சிந்தனையே பரிமளதிரவியமாகவும், என்னன்பே திருமஞ்சனநீராகவும், கொண்டு யான்செய்யும் பூசை யேற்றுக்கொள்ளவாராய். (௧௫௧)

கெட்டவழி யாணவப்பேய் கீழாக மேலான
சிட்டருனைப் பூசை செய்வார் பராபரமே.

பொ - ரை. தீமையான நெறியிற்செலுத்தும் ஆணவமலப்பேய் (தன் சத்தி) கெடமேம்பட்ட பெரியோர்கள் தேவரீரைப் பூசைசெய்வார்கள்.

கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தில்
மேலெழுப்பிற் றேகம் விழுமோ பராபரமே.

பொ - ரை. (மூக்கின்வழியாக வெளிவருகிற) வாயுவை உள்ளடக்கி மூலாதாரத்திலுள்ள நெருப்பினை (அவ்வாயுவினைக்கொண்டு ஆஞ்ஞையின்) மேலுள்ள சந்திரமண்டலத்தில் தாக்கும்படி யெழுப்பினால் இச்சரீரம் (பூமு ...ற் பிணமாக) விழுமோ. (கருரு)

பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே.

பொ - ரை. (பூத சுத்தி, உடற் சுத்தி, திரவிய சுத்தி, ஆன்ம சுத்தி, மந்திரசுத்தி) ஆகிய பஞ்சசுத்திபண்ணித் தேவரீரைச் (சகளரூபமாக) பாவ...ன, செய்து (ஆகமவிதிப்படி) சிவபூசைசெய்தால் மேலாகியஞானம் பிரகா...க்கும். (கருச)

அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டா
லின்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.

பொ - ரை. சிவனடியார்கட்குத் தொண்டுசெய அடியேனை அடிமை ...ாக்கிவிட்டால் சிவானந்தநிலை தானேவாய்த்துவிடும். (கருரு)

மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே

பொ - ரை. (யாத்திரைசெய்து ஆங்காங்குள்ள) சிவலிங்கப்பெருமா...னையும், புண்ணியதலத்தினையும், தீர்த்தத்தினையும்முறையே (தரிசிக்க) ஆரம்...பித்துவருபவர்கட்கு ஒப்பற்ற சித்தாந்த மகாவாக்கியம் உபதேசித்தற்கு ஆ...சாரியரும்வந்து வாய்ப்பர். (கருசு)

விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே.

பொ - ரை. (நல்லவர்களாலே) விரும்பப்பட்டசரியை முதலாக மெய்...ஞ்ஞான மிறுதியாக உள்ள நான்கும் சோபானமுறையில் (முறையே) அரு...ம்பு, மலர், காய், கனிகளைப்போல் (ஒன்றற்கொன்றேதுவாக விளங்கும்) ...அல்லவா. (கருஎ)

தானந் தவந்தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ
ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே.

பொ - ரை. தானம், தவம், தருமம் என்பவற்றை நல்லோர் சிவஞான...த்தை யடையும்பொருட்டு எக்காலமும் செய்வார்கள். (கருஅ)

சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்ற வாணவப்பேய்க்
கின்னல் வருவதெந்நா ளெந்தாய் பராபரமே.

பொ - ரை. ஒருதரம் சொன்ன சொல்லினையே (கோபாவேசத்தால்) ...பலதரமுஞ்சொல்லிப் பதைக்கின்ற ஆணவமலமான பேய்க்குத் துன்பமுண்...டாவது (அதாவது அடக்கிவிடுவது) எக்காலமோ எந்தையே. (கருகூ)

இன்றோ விருவினைவந் தேறியது நானென்றோ
வன்றேவிளைந்ததன்றோ வாற்றேன் பராபரமே.

பொ - ரை. (நல்வினை தீவினையாகிய) இருவினைகள்வந்து எனக்குச் சம்பவித்தது இன்றுதானோ (அன்று) நான் எப்போது உளனுயினேனோ அப்போதே யுண்டானதல்லவோ (ஆகலின்) இவ்வினைகளுக்கு நான் சகியேன்

எண்ணமுந்தா னின்னைவிட வில்லையென்றால் யான்முனமே
பண்ணவினை யேது பகராய் பராபரமே.

பொ - ரை. (அறிவித்தாலன்றி யறியாவளங்கனென்றதற்கேற்ப) தேவரீரையன்றி எண்ணமுதிப்பதில்லையாயின் யான் முற்பிறப்புக்களில் பண்ணுதற்குக்கருமமேது சொல்லாய் (எனவே கருமத்திற்குத்தக்கபடி யெண்ணமுதிப்பிப்பன்.) (௧௬௧)

என்னையின்ன தென்றறியா வேழைக்கு மாகெடுவேன்
முன்னவினை கூடன் முறையோ பராபரமே.

பொ - ரை. (ஆன்மாவாகிய) என்னை இன்ன தன்மையனென்றுணராத எழைக்கும் அந்தோகெடுவேன் பூர்வகன்மம்வந்து பொருந்துதல் முறையாமோ. (௧௬௨)

அறியாநான் செய்வினையையை யாநீ கூட்டுங்
குறியே தெனக்குளவு கூறாய் பராபரமே.

பொ - ரை. அறியாமையால் அடியேன் செய்யுங்கருமங்களை ஐயனே (எனக்கு) நீசேர்ப்பிக்கும்குறிப்பு எத்தகையதுஎனக்குளவு சொல்லக்கடவாய

என்னைக் கெடுக்க விசைந்த விருவினைநோய்
தன்னைக் கெடுக்கத் தகாதோ பராபரமே.

பொ - ரை. அடியேனைக் கெடுத்தற்குப்பொருந்திய இருவினைப் பிணியைக்கொடுத்தற்குத் தேவரீருக்குத்தகாதோ. (௧௬௪)

வல்லமையே காட்டுகின்ற மாமாயை நானொருவ
னில்லையெனி னெங்கே யிருக்கும் பராபரமே.

பொ - ரை. (பிரபஞ்சத்தினைக் காரியப்படுத்துவதில்) சாமர்த்தியத்தினைக்காட்டுகின்ற பெரியமாயையானது நான் (தேவரோடு இரண்டறக் கலந்து) இல்லையாயின் யாருக்குத் (தனு கரண புவன போகங்களாய் விரிந்து) தங்கும். (௧௬௫)

முக்குணத்தா லெல்லா முளைக்கப் பிரகிருதிக்
கிக்குணத்தை நல்கியதா ரெந்தாய் பராபரமே.

பொ - ரை. முக்குணங்களைக்கொண்டு (பிரபஞ்சபோகங்கள்) யாவும் உண்டாகும்படிச் செய்கின்ற பிரகிருதிக்கு (அத்தகைய)குணத்தினைக்கொடுத்ததுயார் எந்தையே. (எனவேயது பிரகிருதிக்கியற்கை, தானா, (௧௬௬)

ஆற்றப் படாதுதுன்ப மையமென்று மென்மனது
தேற்றப் படாதினியென் செய்வேன் பராபரமே.

பொ - ரை. ஐயனே! (பிரபஞ்ச) துன்பம் என்றுஞ் சகிக்கப்படாதிருக்கின்றது என்மனம் (எவராலும்) தெளிவிக்கப்படாததாயிருக்கின்றது இனியென்செய்யக்கடவேன். (கசுஎ)

பூராய மாய்மனதைப் போக்கவறி யாமலையோ
ஆரா யலைந்தே னரசே பராபரமே.

பொ - ரை. கிரமமாய் (சிறிது சிறிதாக) மனதையடக்க வறியாமலையோ அடியேன் என்னவென விளைத்து அலைந்தேனரசனே. (கசுஅ)

சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலு
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

பொ - ரை. கோபம்வராதபடி யப்பியாசித்தாலும், அட்டமாசித்திகளை யடைந்தாலும் மனமொடுங்க வப்பியாசியாதவர்கட்கு (வீணுகப்) பேச்சிருந்தென்ன லாபம். (கசுகூ)

வாதுக்கு வந்தெதிர்த்த மல்லரைப்போற் பாழ்த்தமன
மேதுக்குக் கூத்தாடு தெந்தாய் பராபரமே.

பொ - ரை. சண்டைசெய்ய வந்தெதிர்த்தமல்லர்களைப்போல, பாழாயமனமானது (எதிரிகளில்லாமலே) என்னலாபமடையக் கூத்தாடுகின்ற எந்தையே. (கஎ0)

சூதாடு வார்போற் றுவண்டு துவண்டுமனம்
வாதாடி னென்னபலன் வாய்க்கும் பராபரமே.

பொ - ரை. சூதாடுபவர்களைப்போல ஆட்டத்தில் தோற்புண்டான பாது வுண்டாகும் மனவாட்டம்போல மனந்தளர்ந்து வாதாடினலதற்கென்ன பயனுண்டாகும். (கஎக)

கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க்குரங்காய்க்
கள்ளமனந் துள்ளுவதென் கண்டோ பராபரமே.

பொ - ரை. (கொட்டினல் நெருப்புக்கொள்ளிபோல் எரியச்செய்வதாகிய) கொள்ளித்தேள்கொட்ட அதனல் துடிக்கின்ற பேய்ப்பிடித்த குரங்குபோல வஞ்சகத்தையுடைய மனமானது துள்ளுவது என்னகருதியோ.

வந்ததையும் போனதையும் வைத்துவைத்துப் பார்த்திருந்தாற்
சிந்தை யிதமகிழ்ந் சேரும் பராபரமே.

பொ - ரை, (பிரபஞ்சமுகமாகச் சம்பவித்து) வருகின்ற விஷயங்களையும் அனுபவித்து முடிந்தவிஷயங்களையும் (மனதில்) எண்ணியெண்ணி நோ

க்கிக்கொண்டிருந்தால் அம்மனமானது சுகதுக்கங்களில் பொருந்தும். (அங்ஙனம் பொருந்தவே இறப்புப்பிறப்புக்களிற்படும் ஆகவே சென்றதைக் கருதாமலும் சேர்வதைநினையாமலு மிருக்கவேண்டும். (கஎங)

ஏறுமயிர்ப் பாலமுணர் விந்தவிட யங்கணெருப்
பாறெனவு நன்கு வறிந்தேன் பராபரமே.

பொ - ரை. ஏறிநடக்கின்ற மயிரினாற்செய்த பாலம் அறிவென்றும், (ஐம்பொறிகளாலனுபவிக்கப்பட்ட) விடயங்கள் (அப்பாலத்தின் கீழோடும்) நெருப்பாறு என்றும் நன்றாகத்தெரிந்துகொண்டேன். (எனவே பிரபஞ்ச நிலை யெக்காலத்தும் ஆபத்துடன் விளங்குவது.) (கஎச)

பொறிவழியே யேழை பொறியா யுழல்வதுநின்
னறிவின் விதித்தவிதி யாமோ பராபரமே.

பொ - ரை. ஐம்பொறிகள் வழியாகி அறிவற்றநான் அணுத்தன்மையடைந்து அலைவது தேவரீர் பேரறிவால் நியமித்த நியம மாகுமோ. (கஎ௫)

பாசசா லங்களெல்லாம் பற்றிவிட ஞான வைவாள்
வீசுநா ளெந்நாள் விளம்பாய் பராபரமே.

பொ - ரை. பாசக்கூட்டங்களெல்லாம பற்றற்று நீங்கும்படி ஞானமாகிய கூர்மையானவாளைக் கொண்டுவீசுகின்றநாள் எந்நாளோ சொல்லாய்.

எந்தவுட லேனு மெடுத்தவுட னல்லதென்று
சிந்தைசெய வந்ததிறஞ் செப்பாய் பராபரமே.

பொ - ரை. உலகதனிலெடுத்த, எந்தச்சரீரத்தினும் இப்போதெடுத்த, மானுடசரீரம் நலமானதென்று சிந்திக்கவந்த என்றிறத்திற்குக்காரணமினனதென்று சொல்லாய். (கஎஎ)

பொய்யெல்லா மொன்றாய்ப் பொருத்திவைத்த பொய்யுடலை
மெய்யென்றான் மெய்யாய் விடுமோ பராபரமே.

பொ - ரை. நிலையற்றனவாகிய தத்துவங்களை யெல்லாம் ஒன்றாகத்திரட்டி அவற்றைக்கொண்டு பொருத்திவைத்திருக்கிற நிலையற்றவுடலை மெய்ப் பொருளென்று சொன்னால் மெய்ப்பொரு ளாகிவிடுமோ. (கஎஅ)

மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பியையோ
நின்னை மறக்கை நெறியோ பராபரமே.

பொ - ரை. மின்னலையொத்த பொய்யுடம்பை மெய்யென்று நம்பி ஐயோ தேவரீரை மறந்தொழிதல் எனக்குநல்லமார்க்கமாகுமோ. (கஎகு)

நித்தியமொ ன்றில்லாத நீர்க்குமிழி போன்றவுடற்
கித்தனைத்தான் றுன்பமுண்டோ வென்னே பராபரமே.

பொ - ரை. என்றும் நிலைபெற்றிருக்கக்கூடாத நீர்க்குமிழியினையொத்தசரீரத்திற்கு இத்தகைய துக்கங்களுளவாதல் தகுதியோ. இஃதென்ன வநீதி. (கஅ0)

தேகமிறு மென்றுசுடர் தேம்புவதென் னித்திரையி
னாகமறிந் தாற்பயந்தா னுண்டோ பராபரமே.

பொ - ரை. தேகமழியுமென்று (உடலையேநம்பியிருக்கும்) சாமான்னியர் துன்புறுவது யாதுக்கு? நித்திய சுழுத்தியில் உடலை ஆன்மாநீங்கியிருத்தலாகிய) நித்திரைகாலத்தில் நடக்குஞ்செய்தியை உய்த்துணர்ந்தால் பயமுண்டாமோ. (நைமித்திய சுழுத்தியாகிய மரணமு மங்ஙனமே யன்றோ.)

ஏதைச் சுமையா வெடுப்பா ரெடுத்தவுடற்
சேதமுறின் யாதுபின்னே செல்லும் பராபரமே.

பொ - ரை. எடுத்தசரீர மழியுமாயின் பிறகு எந்தச் சரீரத்தைச் சுமையாக வெடுப்பார்கள். அதன்பின் என்னகாரியம் செல்லும். (சரீரமுள்ளபோதே வேறு சென்மமெடாதபடி செய்துகொள்ளவேண்டும்.) (கஅஉ)

தோற்பாவை நாலாட் சுமையாகுஞ் சிவனென்றிங்
கார்ப்பா லெடுத்ததெவ ராலே பராபரமே.

பொ - ரை. தோலினுற் செய்த பதுமையாகிய வில்வுடம்பு நாலு ஆள் பாரமாகும் சிவனென்று இவ்வுலகில் ஆரவாரத்துடன் எடுக்கப்பட்டது யாவரால். (கன்மத்தால்.) (கஅங)

ஞாலத்தை மெய்யெனவே நம்பிநம்பி நாளுமென்றன்
காலத்தைப் போக்கியென்ன கண்டேன் பராபரமே.

பொ - ரை. பிரபஞ்சத்தைச் சத்தியமென்றே நம்பி நம்பி எந்நாளும் என்காலத்தைக் கழித்து யாது பிரயோசனமடைந்தேன் (ஒன்றுமில்லை.)

பொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரி வாதனையின்
மெய்யருளின் மூழ்கின் விடுங்காண் பராபரமே.

பொ - ரை. காரிய ரூபமாயுள்ள வுலகவாழ்வாகிய புலைச்சேரியின் வாசனையானது தேவரீரது மெய்யாகிய திருவருட்கடலில் மூழ்கினால் நீங்கிவிடும். (கஅரு)

நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவி நன்னூற் போதம் பராபரமே.

பொ - ரை. ஆகாயத்தி லேறுதற்கு நூலேணியும் (அவ்வேணிசெய்துகொள்ளுவதற்காக) அந்நூலின் பொருட்டுப் பருத்தி மரமும்வைப்பவர் போல இலக்கண நூல்களையும், சாத்திரநூல்களையும்) கொண்டு (முத்தியடையலாமென்பது) அமையும். (ஆகவே திருவருளின்றி முத்தி கூடாது.)

சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்கு
மன்னுங்கலைஞான மார்க்கம் பராபரமே.

பொ - ரை. (உலகோபகாரமாக) நிலைபெற்றுள்ள சாத்திரஞான நெறிகள் மிகவும் சிறியகுழந்தைகள் சமைத்த (உண்ணுவதற் குபயோகப்படாத) மணற் சோற்றையொத்துப் பயனற்றனவேயாகும். (பரஞானத்தையடையாயாமல் காலமுழுவதும் அபரஞானத்திலேயே யழுந்திக் கிடத்தல் கூடாது)

வாசகஞா னத்தால் வருமோ சுகம்பாழ்த்த
பூசலென்று போமோ புகலாய் பராபரமே.

பொ - ரை. வாசாகைங்கரியமாகப் பேசுகின்ற ஞானத்தால் சுகம் விளையுமோ பாழாகிய வாக்கு வாதம் பண்ணிக்கொண்டு கிடப்பது என்றொழியுமோ அறியேன். தேவரீரே யருள் செய்யவேண்டும். (கஅஅ)

கேட்டதையே சொல்லுங் கிளிபோல நின்னருளி
னாட்டமின்றி வாய்பேச நன்றோ பராபரமே.

பொ - ரை. கேட்டதனையே (கற்றுக்கொண்டு) அதனையேசொல்லும் கிளிப்பிள்ளைபோல, தேவரீர் திருவருளில் விருப்பமின்றி (பிறர் சொன்னதைக் கற்றுக்கொண்டு அதனையே) வாயாற் பேசுதல் நன்மையாமோ. (அனுபவம் வேண்டும்.) (கஅக)

வெளியா யருளில் விரவுமன்பர் தேக
மொளியாய்ப் பிறங்கியது முண்டோ பராபரமே.

பொ - ரை. சிதாகாய ரூபமாகித் தேவரீரத் திருவருளிற் கலக்கின்ற உன்னன்பர்களுடைய சரீரங்கள் (பூத) ஒளியாகி விளங்கினது முளதோ (சூக்கும மயத்தை யடைந்தார் தூலத்தன்மையில்விளங்கார்.) (ககூ0)

காலமொரு மூன்றுங் கருத்திலுணர்ந் தாலுமதை
ஞாலந் தனக்குரையார் நல்லோர் பராபரமே.

பொ - ரை. நல்லோர்கள் முக்காலச் செய்திகளையுந் தமது கருத்தினால் அறிந்திருப்பினும் அதனை (சாமான்னிய) உலகத்தாருக்குச் சொல்லமாட்டார்கள். (கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்.) (ககூக)

கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே.

பொ - ரை. கொல்லாமையாகிய விரதமொன்றை மேற்கொண்டவர்களே நல்லமனிதர்கள், அவரையொழிந்த (கொல்லுந் தன்மைவாய்ந்த) மற்றையோர்கள் யாவரோஅவர்பேர் சொல்லவறியேன்(பொல்லாரெனக்கூறின் அத்தகையர் மனிதரென வேற்படுமாகலின் அங்ஙனமும் சொல்லவிசையாது. (ஆகவே காட்டில்வாழும் நாய்நரிகளேயாவர்.) (ககூஉ)

இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழிச்
செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே.

பொ - ரை. அழிதற்பாலனவாகிய காரியத்தையிச்சித்து மனம்போன வழியே போகாதிருத்தல் நல்லோர்களுடைய காரியம். (கக௩)

ஏதுவந்து மேதொழிந்து மென்னதியா னென்னூர்கள்
போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே.

பொ - ரை. ஞானநிலையினைக்கண்ட அறிஞர்கள் (எத்தகையசெல்வம்) வந்திடினும், (எத்தகையபொருள்) இழந்திடினும் அவற்றைப்பற்றி என்னது யான் என்று மமகரித்தும் அகங்கரித்தும் பேசார்கள். (கக௪)

ஆயிரஞ்சொன் னூலு மறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே.

பொ - ரை. ஆயிரம் (விதமாக வெடுத்துப்பேசும் சாமர்த்தியமுடைமை) யிருக்கினும் விவேகமில்லாத வஞ்சகமனத்தையுடைய பேயருடன் சேர்ந்தால் அச்சேர்தல் குற்றமேயாம். (கக௫)

மாய மயக்கொழிந்தார் மற்றொன்றை நாடுவரோ
நேய வருணிலையி னிற்பார் பராபரமே.

பொ - ரை. மாயாகாரியங்களா (லுண்டாகிற பிரபஞ்சப் பொருள்களிடத்துண்டாகின்ற) மயக்கத்தை நீங்கினவர்கள் வேறுபொருளை விரும்புவார்களோ, (விரும்பார்கள் மற்றென்னெனின்) அன்புமயமாகிய திருவருள் நிலையில் நிலைபெற்றிருப்பார்கள். (கக௬)

நித்திரையிற் செத்தபிண நேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே.

பொ - ரை. (பிரதிதினமும்) உறங்குங்காலத்தில் செத்தபிணத்திற்குச் சமானமாயிருக்கிற சரீரத்தின்மேல் விருப்பம் வையாத சுத்த (மனத்தை) யுடையவர்களே நல்லதுறவினர். (கக௭)

என்னெஞ்ச மேனு மிரங்குமே நின்னருட்குக்
கன்னெஞ் சருமுளரோ காட்டாய் பராபரமே.

பொ - ரை. தேவரீரது திருவருட்கு எத்தகையமனமாயினும் உருகும். அவ்வாறு உருகாதகல்லை யொத்த வன்மனத்தினையுடையோரும் உளரோ (உளராகார், உளராயின்) நீயே காட்டாய். (கக௮)

மந்தவறி வாகியின்பம் வாயா திருந்தலைந்தாற்
சிந்தைமயங் காதோவென் செய்வேன் பராபரமே.

பொ - ரை. மந்தஞான முடையேனாகிச் சுகங்கிடையாமலிருந்து அலைவேனாயின் என் மனந்திகையாதோ இத்திகைப்பை மாற்றுதற்கு நான் என்னவுபாயஞ் செய்யக்கடவேன். (கக௯)

தேடினேன் நிக்கனைத்துந் தெண்டமிட்டேன் சிந்தைநைந்து
வாடினே னென்மயக்க மாற்றாய் பராபரமே.

பொ - ரை. (ஆசாரிய ரெவ்விடமெழுந்தருளியிருப்பரென) தேடினேன், (தேவரீரது சருவவியாபகத்தையெண்ணி) திசைக ளெல்லாவற்றினும் வணங்கினேன். (காணப்பெறாது) மனநொந்து வாடினேன் (அவ்வாட்டத்தாலுண்டாகிய) என்மயக்கத்தை நீக்கியருளாய். (உ00)

மடிமையெனு மொன்றை மறுத்தன்றோ வென்னை
யடிமைகொளல் வேண்டு மரசே பராபரமே.

பொ - ரை. (தேவரீரை விசாரியாதபடி தடுத்துக்கொண்டிருக்கிறவெனது பாசமாகிய) சோம்பலென்னும் ஒரு பொருளைத்தடுத்தல்லவோ அடியேனை யடிமைகொள்ளவேண்டும் அரசனே. (உ0க)

காலர்பயந் தீரவின்பக் காற்கபய மென்றெழுந்த
மாலை வளர்த்தனையே வாழி பராபரமே.

பொ - ரை. எமதூதர்களுடைய பயமானது ஒழியும்படி சுகத்தைக் கொடுக்கின்ற உன் திருவடிக்கு அபயம் என்று வாயாற்சொல்லி மனத்தின்கண் அதிகரித்தவாசையை விருத்தியடைவித்தனையே தேவரீர் வாழ்வீராக.

நீர்ப்புற் புதமாய் நினைவருட்கே நின்றழியப்
பார்ப்ப தல்லால் வேறுமொன்றைப் பாரேன் பராபரமே.

பொ - ரை. நீரின்குமிழினையொத்த (எனது) மனம் (தேவரீர்) திருவருளின் பொருட்டுக்கரைய எண்ணுதல்லால் வேறொ (பிரபஞ்சப்பொருள்களுள்) ன்றையும் எண்ணேன். (உ0ந)

நீர்க்குமிழி போலென் னினைவுவெளி யாய்க்கரையப்
பார்க்குமிட மெல்லாமென் பார்வை பராபரமே.

பொ - ரை. நீர்க்குமிழினை யொத்த மனமானது சிதாகாயமாய்க் கரையஅடியேன் வேறுபொருளை நோக்குந்தோறும் எங்கும் அதேநோக்கமா (யிருக்கின்றேன்.) (உ0ச)

ஆடியோய் பம்பரம்போ லாசையுட னெங்குமுனைத்
தேடியோய் கின்றேனென் செய்வேன் பராபரமே.

பொ - ரை. சுழன்று, ஆடி ஓய்ந்த பம்பரம்போல அன்புடனே தேவரீரை எவ்விடத்தும்தேடி (காணப்பெறாமையால்) ஓய்கின்றேன். வேறென்னசெய்யக்கடவேன். (உ0ரு)

வேதாந்தஞ் சித்தாந்தம் வேறென்னார் கண்களிக்கு
நாதாந்த மோன நலமே பராபரமே.

பொ - ரை. வேதாந்தம் சித்தாந்தம் (இரண்டும் முறையே பொதுவாகவும் சிறப்பாகவும், வேதாந்தம் சித்தாந்தத்திற்குச் சோபானமாகவு மிருத்தலின்) வெவ்வேறென்னாதவர் தரிசித் தானந்தமடைதற்குரிய நாததத்துவத்தின் முடிவில் விளங்குகின்ற மவுனசுகமே. (உ0சு)

ஆனந்த மானநின்னையன்றியொன்றை யுன்னாத
மோனந் தமியேற்கு முத்தி பராபரமே.

பொ - ரை. சிவானந்த சொருபமான தேவரீரையல்லது வேறுபொ
ருளை யாதமவுனநிலையே அடியேனுக்கு மோட்சம். (உ0எ)

எதுக்கு முன்னைவிட வில்லையென்று லென்கருத்தைச்
சோதிக்க வேண்டாநான் சொன்னேன் பராபரமே.

பொ - ரை. (என்னால் நிகழும்) காரியமனைத்திற்கும் தேவரீரையன்
(சிறிதும் சுதந்தரமில்லாத) எனக்கு வேறுதுணையில்லையென விஞ்ஞா
ஞ் செய்துகொண்டால், என்மனதைச் சோதனைசெய்யவேண்டாம் நான்
ல்லிவிட்டேன். (உ0அ)

முத்தியிலுந் தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்று
ரெத்தனைப்பே ரென்றுரைப்ப தெந்தாய் பராபரமே.

பொ - ரை. முத்திக்காலத்தும் சரீரத்தினிடத்தில் (அருவசித்தி, உரு
தி, அருவுருவசித்தி ஆகிய) மூன்று விதமாகிய சித்தியடைந்தவர் எத்
பேரென்று அளவிட்டுச் சொல்லுவது எந்தையே. (உ0கூ)

நீயன்றி நானார் நினைவாரென் னெஞ்சகமார்
தாயன்றிச் சூதுமுண்டோ சாற்றாய் பராபரமே.

பொ - ரை. தேவரீரையல்லது (ஆட்டுவித்தாலன்றி யாடக்கூடாத
வினைவாய்ந்த) நான் யார், (கன்மத்தினுக்குத் தகுந்தபடி எண்ணும்)
ணம்யார், (சென்மாந்திர வினைக்குத்தக்கபடி சங்கற்பிக்கும்) என்மனம்
தாயையன்றிச் சூதுமுளதோ சொல்லுவாய். (உக0)

அங்கமே நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
யெங்குமே னேனென்ற தென்னே பராபரமே.

பொ - ரை. தேகமே! உன்வடிவமாகி (பிரபஞ்சமுழுவதும் சிவசொ
ாகக்கண்ட) சுகமுனிவர் கூப்பிட நீ யெவ்விடத்தும் ஏன் ஏன் என்று
மொழிகொடுத்ததென்ன வாச்சரியம். (உகக)

கொள்ளைவெள்ளத் தண்ணருண்மேற் கொண்டுசுழித் தார்த்
திழுத்தால், கள்ளமனக் கப்பலெங்கே காணும் பராபரமே.

பொ - ரை. குளிர்ச்சிபொருந்திய உன் திருவருளாகிய பெரியவெள்ள
து மேற்கொண்டுசுழித்து ஒலித்து இழுத்துக்கொண்டு சென்றால் வஞ்
ாமாகிய மரக்கலமானது (அருட் பெருவெள்ளத்தி லழுந்திவிடுவதல்
எவ்விடத்துத்தோன்றும். (உகஉ)

எக்கலையுங் கற்றுணர்ந்தோ மென்றவர்க்குஞ் சம்மதஞ் சொல்
வக்கணையா லின்பம் வருமோ பராபரமே.

பொ - ரை. (இலக்கண விலக்கிய சம்பந்தமான) எத்தகைய நூல் களையும் (ஐயந்திரிபறக்) கற்று அவற்றின் பொருளனைத்தும் நன்கு அறிந் திருக்கிறே மென்று (அகங்கரித்து) கேட்பவர் யாவருக்கும் தக்கசமாதானம் சொல்லுகின்ற விற்பன்னத்தால் சுகம்வாய்க்குமோ. (பதிநூல்களாகிய மெய்கண்ட நூல்களை வாசிக்கவேண்டுமென்பதாம்.) (உகந)

கல்லெறியப் பாசி கலைந்து நன்னீர் காணுநல்லோர்
சொல்லுணரின் ஞானம்வந்து தோன்றும் பராபரமே.

பொ - ரை. கல்லையெறிந்தால் மூடியிருந்த பாசியானது கலைந்து (அத னால் மூடப்பட்டிருந்த) நல்ல நீரானது தோன்றும். (அதுபோல) நல்லவர் களுடைய சொற்களின்பொருளை யாராய்ந்தறிந்தால் ஞானம்வந்து வாய்க்கும்.

நின்னையுணர்ந் தோர்கடமை நிந்தித்த பேயறிஞ
ரென்னகதி பெறுவா ரெந்தாய் பராபரமே.

பொ - ரை. தேவரீரை யுள்ளவாறுணர்ந்தவர்களாகிய (சிவனடியார் களை நிந்தித்த பேயறிவையுடையோர் என்னதுர்க்கதியாகிய (நரகத்தினை யடைவரோ எந்தையே. (உகு)

என்னதியா னென்னலற்றோ ரெங்கிருந்து பார்க்கினுநின்
சன்னிதியா நீபெரிய சாமி பராபரமே.

பொ - ரை. எனது யானென்னும் மமகார அகங்காரங்களை யொழிந்த பெரியோர்கள் எவ்விடத்து நின்று தரிசிக்கினும் (நீ சர்வவியாபியாகலின் அவ்விடமெல்லாம் தேவரீர் சந்நிதியாகவே தோன்றும். தேவரீரே மக தேவன். (உகச

சோற்றுத் துருத்திச் சுமைசுமப்பக் கண்பிதுங்கக்
காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய் பராபரமே.

பொ - ரை. சோற்றை யடைத்துவைக்கும் தோற்பையாகிய சுமை னைநெடுநாள் வைத்திருக்கவெண்ணி(அடயோகஞ் சாதித்து) நேத்திரங்க பிதுங்கப் பிராணவாயுவை (வெளியில் விடாதபடி) உள்ளடக்கித்திரிந்தேன் 'கண்டதொன்றுமில்லை.) (உகரு

உள்ளபடி யொன்றை யுரைக்கினவர்க் குள்ளுறவாய்க்
கள்ளமின்றி யன்பாய்க் களிப்பேன் பராபரமே.

பொ - ரை. (சாஸ்திர சம்பந்தமாகயாதா) மொருபொருளைப் (பெரி யோராகிய) ஒருவர் (சுருதியுக்தி யனுபவங்கட்குப்) பொருத்தமாகச் சொன் னால் அத்தகைய பெரியோர்கட்கு நெருங்கிய சுற்றமாய் வஞ்சகமில்லாம அன்போடு ஆனந்திப்பேன். (உக௬

அடுத்தவியல் பாகவொன்றை யான்பகர்வ தல்லாற்
றெடுத்ததொன்றை யான்வேண்டிச் சொல்லேன் பராபரமே

பொ - ரை. (யாதாமொருகற்பனை செய்யாமல்) தருந்த வியற்கையா (சாஸ்திர சம்பந்தமான) வொருபொருளை நான் (பிறருக்குச்) சொல்வத றிக் கற்பித்தவொன்றை யான் விரும்பிச்சொல்லேன். (உகக)

உள்ளமறி யாதெதாருவ ரொன்றையுன்னிப் பேசிலையோ
துள்ளியிளங் கன்றாய்த் துடிப்பேன் பராபரமே.

பொ - ரை. (உண்மையினை விசாரித்துத்தேர்ந்து தெளிந்திருக்கிற) ர்மனக்கருத்தையுணராமல் ஒருவர் ஒருவிஷயத்தினை (மனத்திற்) சங்கற் ர்துக்கொண்டு பேசினால் அந்தோ (அவர்களறியாமையை யெண்ணி) இள ன்றுபோலத் துள்ளித்துடிப்பேன். (உஉ0)

எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.

பொ - ரை. (உலகத்திலுள்ள) யாவரும் (சிவானந்த) சுகம் அடைந் நக்க நினைப்பதேயல்லாமல் நான் வேறுபொருளை நினைக்கவறியேன்.

முன்னாண்மெய்ஞ் ஞான முனிவர்தவ மீட்டுதல்போ
லிந்நாளிற் காணவெனக் கிச்சை பராபரமே.

பொ - ரை. பூர்வகாலத்தில் உண்மைச் சிவஞானத்தைத்தேர்ந்த முனி கள் தவத்தினைச் சேகரித்ததுபோல இக்காலத்தில் (யாவரும்) சேகரித் லைக் காணவேண்டுமென்று அடியேனுக்கு விருப்பமுண்டு. (உஉஉ)

கன்மமென்ப தெல்லாங் கரிசறவே மெய்ஞ்ஞான
தன்மநிலை சார்ந்ததன்பர் தன்மை பராபரமே.

பொ - ரை. கர்ம்மமென்று சொல்லப்பட்டயாவும் பற்றற்றமெய்ஞ்ஞா மாகிய தர்மநிலையை யடைந்தது அன்பர்குணம் (உஉங)

கண்டுயிலா தென்னறிவின்கண்ணூடே காட்சிபெற
மண்டிய பேரொளி நீ வாழி பராபரமே.

பொ - ரை. நித்திரையினின்று நீங்கிய என்னறிவினிடத்தே பிரத்தி ட்சமாகவே விளங்கிய (அருட்) பெருஞ்சோதி நீயாகையால் தேவரீர் ாழக்கடவது. (உஉச)

நானானதன்மை யென்றுநாடாம னுடவின்ப
வானாகி நின்றனைநீ வாழி பராபரமே.

பொ - ரை. நானென்கிற (சுதந்தரத்) தன்மையை எக்காலத்தும் விரு பாமல் தேவரீரே (கதியென) விரும்ப இன்பச் சிதாகாயமாய் விளங்கினை ாதலால் தேவரீர் வாழக்கடவது. (உஉரு)

அகந்து டனுவணுவா யண்டமெல்லாந் தானாய்
மகத்தாகி நின்றனைநீ வாழி பராபரமே.

பொ-ரை. (சங்காரகாலத்தில்) அணுவுக்குள்ளேபரமாணுவாகி,(தி காலத்தில்) அண்டங்களெல்லாந் தானேயாகி, சிருஷ்டி காலத்தில்) எல்ல வற்றையுங்கடந்த மகத்தாகிநின்றனையாதலால் தேவரீர் வாழக்கடவது.

காரகமாங் கர்ப்பவறைக் கண்ணூடு மென்கண்ணே
வாரம்வைத்துக் காத்தனை நீ வாழி பராபரமே.

பொ-ரை. இருளுக்கிருப்பிடமான கருப்பமாகிய வீட்டினும் என் னிடத்தே யன்புவைத்துக் காப்பாற்றினாய் ஆதலால் தேவரீர் வாழக்கடவது

புரந்தோர்தந் தேசமென்பார் பூமியைப்போ ராடி
யிரந்தோருந் தம்மதென்பா ரென்னே பராபரமே.

பொ-ரை. (பூமியை) யாண்டவர்கள் அதனைத் தமது தேசமென்ப அப்பூமிக்குப் போர்செய்து மடிந்தவர்களும் அதனைத் தமது தேசமென்ப (ஒருவருமிருந்து வாழ்ந்தாரில்லை) இது என்ன வறியாமையின் காரியம்.

மூர்த்தியெல்லாம் வாழியெங்கண் மோனகுரு வாழியருள்
வார்த்தையொன்றும் வாழியன்பர் வாழி பராபரமே.

பொ-ரை. (மகேச்சுர முகூர்த்தங்களாகிய இருபத்துநான்கு)மூர்த் கள் யாவரும்வாழ்க. (அடியேனைத்தடுத்தாட்கொண்ட) எங்கள்மௌன குருவாழ்க. (சித்தாந்த மகாவாக்கியமாகிய) அருள்வார்த்தை என்றும்வாழ்க சிவனடியார்களும் வாழ்க. (௨௧

சொல்லும் பொருளுந் தொடரா வருணிறைவிற்
செல்லும்படிக்கருணீ செய்தாய் பராபரமே.

பொ-ரை. (திருவருளை முன்னிட்டல்லாது) சொல்லாலும்அச்சொ ற்பொருளாலும் விசாரித்துணரக்கூடாத திருவருள் வியாபகத்தில் அடை யும்படிக்கு தேவரீர் அருள்செய்தனை. (௨௯0

இற்றைவரைக் குள்ளாக வெண்ணரிய சித்திமுத்தி
பெற்றவர்க ளெத்தனைபேர் பேசாய் பராபரமே.

பொ-ரை. (புனர்சிருஷ்டி காலமுதல்) இந்நாளளவுக்குள்ளே நினைத் தற்கரிய (அஷ்டமா) சித்திகளையும் (சுத்தாத்துவித சித்தாந்த வைதிகசைவ முத்தியினையும் அடைந்தோர்கள் எத்தனைபேர் சொல்வாயாக. (அளவில.)

நாடு நகருநிசா ளுட்டிய பாளயமு
மீடுசெயுமோமுடிவி லெந்தாய் பராபரமே.

பொ-ரை. நாடும், நகரமும், அடையாளங்குறித்த படையும் முடிவு காலத்தில் பெருமையைக்கொடுக்குமோ எந்தையே. (௨௯௨)

தேடுந் திரவியமுஞ் சொந்தமணிப் பெட்டகமுங்
கூட வருந்துணையோ கூறாய் பராபரமே.

பொ-ரை. (அதிகப்பிரயாசைப்பட்டு)சேகரிக்கிறதிரவியமும், சேர்த் துவைத்திருக்கின்ற இரத்தின நிறைந்த பெட்டியும் (சாங்காலத்தில்) கூடவ ரத்தக்க துணைகளோ சொல்வாய். (௨௯௩

தேடாத தேட்டினரே செங்கைத் துலாக்கோல்போல்
வாடாச் சமனிலையில் வாழ்வார் பராபரமே.

பொ - ரை. (இலகுவில்) தேடப்படாத திருவருட் செல்வத்தையடைந்தவர்களே (வாணிகருடைய) செவ்விய கையினிடத்துள்ள துலாக்கோல் போல், (கேடுவந்தபோது துக்கமும், பெருக்கம்வந்தபோது களிப்புமடையாமல்) மெலிவடையாச் சமநிலையில் வாழ்வார்கள். (உருச)

நீராய்க் கசிந்துருகி நெட்டுயிர்த்து நின்றேனைப்
பாராத தென்னோ பகராய் பராபரமே.

பொ - ரை. (தேவரீரைக்காணாது) நீரைப்போலக் கசிந் துருகிப்பெருமூச்சுவிட்டுநின்ற என்னைக் கடைக்கண்பாராமைக்குக் காரணமென்னையோ சொல்லாய். (உருரு)

உள்ள பொருளாவி யுடன்மூன்று மன்றேதான்
கொள்ளைகொண்ட நீயென் குறைதீர் பராபரமே.

பொ - ரை. என்னிடத்துள்ள பொருள் உயிர் உடம்பு என்ற முப்பொருளையும் (தேவரீர் எதிரிட்ட) அந்நாளே கொள்ளைகொண்டநீ (அதற்குத்தகுதியாக) என்குறைகளைத் தீர்க்கவேண்டும். (உருசு)

ஆழ்ந்தாயே யிவ்வுலகி லல்லலெல்லாந் நீந்தருளால்
வாழ்ந்தாயே யென்றனைநீ வாழி பராபரமே.

பொ - ரை. (தேவரீர் குருமூர்த்தியாகத் தரிசனந்தந்தகாலத்தில் அடியேனைநோக்கி) இப்பிரபஞ்ச வாழக்கையாகிய கடலில் முழுகினையே இப்போது பிறவித்துன்பங்களெல்லாம் நீங்கி யுன்கருணையினால் வாழ்ந்தனையே என்று திருவாய்மலர்ந்தருளினை யாதலால் தேவரீர் வாழக்கடவது. (உருஎ)

தாரா வருளையெல்லாந் தந்தெனையு நின்னருளில்
வாராயோ வென்றனைநீ வாழி பராபரமே.

பொ - ரை. (அந்நாளில்) தரக்கூடாத அருள் முழுதுந்தந்து என்னையும் உன் திருவருளினால் வாராயோவென்று கூவினை ஆதலால் தேவரீர் வாழக்கடவது. (உருஅ)

ஆசையுன்மீ தல்லா லருளறிய வேறுமொன்றிற்
பாசம்வையே னின்கருணைப் பாங்கால் பராபரமே.

பொ - ரை. தேவரீருடைய திருவருட்பாங்கினால் உன்மீது ஆசைவைப்பதல்லது (சத்தியமாக) உன்திருவருளறிய மற்றுமொருபொருளில விருப்பம் வையேன். (உருகூ)

ஆதியந்த நிகுருவா யாண்டதல்லா லின்னையன்றிப்
போதனையுமுண்டோ புகலாய் பராபரமே.

பொ - ரை. (அடியேனைத் தடுத்தாட்கொண்ட) ஆதியிலும், (தேவரீருக்கு அடிமையான) வேறுமொரு போதனையுமுளதோ சொல்லாய்.

தானாக வந்து தடுத்தாண் டெனையின்ப
வானாகச் செய்தவின்ப வானே பராபரமே.

பொ - ரை. வலியவந்து (கருணையே காரணமாக) அடியேனைத் தடுத்தாண்டு சிதாகாய ரூபியாக்கின சுகசொரூபியே. (௨௬௧)

பற்றற் றிருக்குநெறி பற்றிற் கடன்மலையுஞ்
சுற்ற நினைக்குமனஞ் சொன்னேன் பராபரமே.

பொ - ரை. (பிரபஞ்சப் பொருளில்) தொடர்பற்றிருக்கும் நன்னெறியைத் தொடர்ந்தால் என் மனமானது கடலினும் மலையினும் சுற்றித்திரிய நினைக்கின்றது சந்நிதியில் விண்ணப்பம். (௨௬௨)

படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தைத்
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே.

பொ - ரை. (கருவிநூல்களை) படித்தலு மற்று, கேட்டலுமற்று (அநித்திய பதார்த்தங்களில்) ஒன்றைப் பற்றுதலு மற்று,(பிரபஞ்சசம்பந்தமாக) மனோவியாபாரமற்று நின்றவர்க் கல்லவோ ஆனந்த முண்டாவது. (௨௬௩)

சத்தாகி நின்றோர் சடங்க ளிலிங்கமென
வைத்தாரு முண்டோவென் வாழ்வே பராபரமே.

பொ - ரை. (சிவமாந் தன்மை யடைந்தபின்) நித்திய வுருவமடைந்தவர் தமது உடல்களைப் (பட்டினத்துச் சுவாமிகளைப்போல) இலிங்க வுருவாகவைத்தவர்களும் (உலகில்) உளரோ என்வாழ்வே. (௨௬௪)

சித்த நிருவிகற்பஞ் சேர்ந்தா ருடற்றீபம்
வை‸ தகர்ப்பூ ரம்போல் வயங்கும் பராபரமே.

பொ - ரை. மனமானது நிருவிகற்ப சமாதியை யடையப் பெற்றோர்களுடைய சரீரங்கள் (மாணிக்கவாசக சுவாமிகளைப்போல) தீபத்தி விட்ட கர்ப்பூரம்போலப் பிரகாசிக்கும். (௨௬௫)

ஆதிகா லத்திலெனை யாண்டனையே யிப்பானீ
போதியெனி னெங்கேநான் போவேன் பராபரமே.

பொ - ரை. (அடியேனைத் தடுத்தாட் கொண்ட) பூர்வகாலத்திலே அடியேனையாண் டருளினையே இப்பொழுது நீயகன்று போவென்றால் நான் எங்கேபோவேன், (௨௬௬)

நாவழுத்துஞ் சொன்மலரோ நாளுதிக்கும் பொன்மலரோ
தேவையுனக் கின்னதென்று செப்பாய் பராபரமே.

பொ - ரை. (அடியார்கள்) நாவினால் வழுத்தப் பட்டுள்ளவாகின்ற சொல்மலர்களோ பிரதிதினம் மலர்கின்ற அழகிய (நீர்ப்பூ, கோட்டுப்பூ, கொடிப்பூ ஆகிய) நால்வகைமலர்களோ உனக்கு இன்னவைவேண்டுமென்று சொல்வாய். (உசஎ)

கன்னறரும் பாகாய்க் கருப்புவட்டாய்க் கற்கண்டா
யின்னமுதா யென்னு ளிருந்தாய் பராபரமே.

பொ - ரை. கருப்பஞ் சாற்றைக் காச்சிய பாகு போன்றும், கருப்பு வெல்லம் போன்றும், கற்கண்டு போன்றும், இனியவமுதம் போன்றும் என் மனத்தின்கண் ணிருந்தாய். (உசஅ)

சிற்பரமே தற்பரமே தெய்வச் சுருதிசொன்ன
வற்புதமே யன்பே யறிவே பராபரமே.

பொ - ரை. சிற்பரமே தற்பரமே, தெய்வீகமான வேதங்களால் சொல்லப்பட்ட வற்புதமேஅன்பே யறிவே. (உசகூ)

அறிவிப்பா னீயென்று லைம்புலங் கடந்தந்
நெறிநிற் பார்யாரே நிகழ்த்தாய் பராபரமே.

பொ - ரை. மனத்திற்கண்ணே யிருந்து அறிவிப்பவன் நீயேயானால் பஞ்சேந்திரியங்களையும் வென்று அந்த மேலான ஞானநெறியில் நிற்பவர்யாவரோ நீயேசொல்லாய். (அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடியறிவிப்பன்.)

அந்தக் கரணமெனு மாகாத பேய்க ளெனை
வந்துபிடித் தாட்ட வழக்கோ பராபரமே.

பொ - ரை. (ஒன்றைப் பற்றுகிறதும் நிச்சயிக்கிறதும் சிந்திக்கிறதும் அவமானங் கொள்ளுகிறதும் மனம் புத்தி சித்த மகங்காரங்களாதலின்) அந்தக்கரண மென்கிற பொல்லாத பேயர்கள் வந்து என்னைப் பிடித்தாட்ட வழக்குண்டோ. (உருக)

ஐவரொடுங் கூடாம லந்தரங்க சேவைதந்த
தெய்வ வறிவே சிவமே பராபரமே.

பொ - ரை. பஞ்சேந்திரியங்களின் வழியேசெல்லாமல் அடியேனுக்கு (குருமூர்த்தமா யெழுந்தருளி) அந்தரங்க சேவையைக் கொடுத்த தெய்வீகமான ஞானமே சிவமே. (உருஉ)

அருளாகி நின்றசுக மாகாம லையோ
விருளாகி நிற்க வியல்போ பராபரமே.

பொ - ரை. அருள் வடிவமாயிருக்கிற ஆனந்த ரூபமாகாமல் அந்தோ (பிரபஞ்சசம்பந்தமான) இருளுருவாகி நிற்றல் எனக்குப் பொருந்தமாகுமோ,

அன்பரெல்லா மின்ப மருந்திடவும் யானொருவன்
றன்புறுத னன்றோநீ சொல்லாய் பராபரமே.

பொ - ரை. உன்னடியாரெல்லாரும் சிவானந்த சுகத்தை யனுபவிக்கவும் நானொருவனுமே துக்கத்தை யனுபவித்தல் உனக்கழகுதானோ நீசொல்லாய் (பக்குவம்வந்த போதுண்டாம்.) (உருச)

சந்ததமு நின்கருணை சாற்றுவதல் லால்வேறு
சிந்தை யறியேனுன் சித்தம் பராபரமே.

பொ - ரை. எக்காலமும் தேவரீர் (அடியன்மாட்டுள்ள) கருணையினை எடுத்துப் பேசுவதல்லது மற்றொருகாரியத்தைச் சிந்தையாலுஞ் சிந்தித்தறியேன். (இதற்குமே லுன்றிருவுளம். எப்படியோ.) (உருரு)

நானு னெனக்குளறு நாட்டத்தா லென்னைவிட்டுப்
போனுலு முன்னைவிட்டுப் போகேன் பராபரமே.

பொ - ரை. (சுதந்தரங்கொண்டு) நான்நான் என்று கழறுகிற நோக்கத்தினல் தேவரீர் அடியேனை விட்டுநீங்கினும் நான் உன்னைவிட்டு நீங்கேன் (நீயேகதி.) (உருசு)

இக்காயம் பொய்யென்றோ ரீட்டத் துனக்கபயம்
புக்காதா ருண்டோ புகலாய் பராபரமே.

பொ - ரை. இந்தச்சரீரம் அநித்தியமெனத் தேர்ந்த கூட்டத்தார் தேவரீருக் கபயமென வந்தடையாதாரு முளரோசொல்லாய். (ஒருவருமில்லை.)

தானுதல் பூரணமே சாருமிட முண்டுயிரும்
வானுதியுமொழுங்காய் மன்னும் பராபரமே.

பொ - ரை. உயிரினிடத்தும் ஆகாயமுதலிய பஞ்சபூதங்களிடத்தும் கிரமமாக நிலைபெற்றிருக்கும் முதல்வனே தானுதலாகிய உன்பரிபூரண நிலையே அடியேன் தங்குமிடமாயுள்ளது. (உருஅ)

உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய
மின்னுமா னந்த விளக்கே பராபரமே.

பொ - ரை. (பரிபக்குவப்பட்ட ஆன்மாக்கள்) நினைக்கின்ற மனமானது கர்ப்பூர உருண்டைபோலக் கரைந்து போம்படி மின்னுகின்ற ஆனந்த தீபமே. (உருகூ)

நாட்பட் டலைந்த நடுக்கமெல்லாந் தீரவுனக்
காட்பட்டுந் துன்பமெனக் காமோ பராபரமே.

பொ - ரை. (தேவரீரைத் தரிசியாத காலத்தில்) நெடுநாளாயலைந்த நடுக்கங்கள் யாவும்நீங்க நான் உனக்கு ஆளாகியும் எனக்குத் துன்பங்கள் உண்டாகலாமா (இன்னம் பிராரத்துவ மொழியவில்லை.) (உசு)

பாவிபடுங் கண்கலக்கம் பார்த்துமிரங் காதிருந்தா
லாவிக் குறுதுணையா ரையா பராபரமே.

பொ - ரை. பாவியாகிய நான் படுகின்ற கலக்கத்தைச்கண்டும் நீ யிரங்காதிருந்தால் என்னுயிருக்கு உற்ற துணையாவார் யாவரோ ஐயனே.

நின்னிறைவே தாரகமாய் நின்றுசுக மெய்தாம
லென்னிறைவே பாவித்த தென்னே பராபரமே.

பொ - ரை. தேவரீர் வியாபகத்தையே ஆதாரமாகக்கொண்டு நின்று இன்பமனுபவியாமல்எனது வியாபகத்தையே(தேவரீர் வியாபகமாக,மயங்கி) எண்ணினேன் இது என்ன விபரீதபாவனை. (உசுஉ)

நின்னைச் சரண்புகுந்தா னீகாக்கல் வேண்டுமல்லா
லென்னைப் புறம்விடுத லென்னே பராபரமே.

பொ - ரை. தேவரீரைச் சரணமடைந்தால் தேவரீர் அடியேனைக்காக்கவேண்டுமல்லது என்னை (அனியாயமாகப்) புறத்தில்விடுதல் என்ன அநீதி.

மாறாத துன்பமெல்லாம் வந்துரைத்தா னின்செவியி
லேறாத வாறே தியம்பாய் பராபரமே.

பொ - ரை. நீங்காிய துக்கங்களனைத்தையும் (தேவரீர்சந்நிதானத்தில்) வந்து எடுத்துச்சொல்லினல் தேவரீர் திருச்செவியில் ஏறாத விதமென்ன சொல்வாய். (உசுச)

விஞ்சுபுலப் பாடனைத்தும் வீறுதுன்பஞ் செய்யவந்த
வஞ்சுபுல வேடருக்கு மாற்றேன் பராபரமே.

பொ - ரை. மிகுந்த ஞானத்தினருமை யனைத்தினையும் மிக்கதுன்பஞ் செய்யவல்ல ஐம்புலன்களாகிய வேடர்கட்கும் சகிக்கேன். (உசுரு)

கன்னங் கரியசிறக் காமாதி ராக்ஷசப்பேய்க்
கென்னையிலக் காகவைத்த தென்னே பராபரமே.

பொ - ரை. அதிகவிருண்ட நிறத்தினைவாய்ந்த காமமுதலிய அறுவகைப்பட்ட இராக்கதப்பேய்கட்கு அடியேனை இலக்காகவைத்தது என்ன அநியாயம். (உசுசு)

சித்திநெறி கேட்டல் செகமயக்கஞ் சன்மமற
முத்திநெறி கேட்டன் முறைகாண் பராபரமே.

பொ - ரை. அஷ்டமாசித்தி முதலியவற்றையடைய (பெரியோரையடுத்துக் கேட்டுக்கொள்ளுதல் புகழடைய வேண்டியாகலான்) அது உலகமயக்கம். முத்திமார்க்கத்தையடையக் கேட்டுக்கொள்ளுதலே தக்கமுறையாம்.

சிந்தை சிதையச் சிதையாத வானந்த
மெந்தவகை யாலேவந் தெய்தும் பராபரமே.

பொ-ரை. மனமடங்க அழியாத சிவானந்த மானது எந்தவகையாக ச் செய்யுஞ் சாதனத்தால் எனக்குக் கிடைக்கும். (௨௬௮)

கூர்த்தவறி வாலறியக் கூடா தெனக்குரவன்
றேர்த்தபடி தானே திரிந்தேன் பராபரமே.

பொ-ரை. (திருவருளை முன்னிட்டல்லாமல்) நுண்ணிய (தற்போத அறிவினால் அறியக்கூடாதென்று குருமூர்த்தி தெளிவித்தவண்ணமே தெ ரிந்து கொண்டேன். (௨௬௯)

புத்த ரருந்தும் பரமசுகம் யானருந்த
வெத்தனைநாள் செல்லு மியம்பாய் பராபரமே.

பொ-ரை. சிவனடியார்கள் அனுபவித்து வருகின்ற மேலாகிய சிவா னந்தசுகத்தை அடியேனனுபவிக்க எத்தனைநாள் செல்லும்சொல்வாய்.

தீரத்தி னூற்றுறவு சேராம லிவ்வுலகிற்
பாரத் தனம்பேசல் பண்போ பராபரமே.

பொ-ரை. (துணிந்த) தைரியத்தினால் துறவறத்தினை யடையாமல் இவ்வுலகில் (அழுந்தி) வீறுப்புப் பேசிக்கொள்ளுதல் குணமாகுமோ.

இந்த வெளியினையுண் டேப்பமிடப் பேரறிவாத்
தந்தவெளிக் கேவெளியாய்ச் சார்ந்தேன் பராபரமே.

பொ-ரை. இப்பூதாகாயத்தின் உண்மைகண்டு விசாரித்துத் தள்ளிய பெரிதாகிய ஞானகாயத்திற்றனே பகிரங்கமாகச் சேர்ந்தேன். (௨௭௨)

உணர்த்துமுனை நாடா துணர்ந்தவையே நாடி
யிணக்குறுமென் னேழைமைதா னென்னே பராபரமே.

பொ-ரை. (சகலத்தையும்) அறிவிக்கத்தகுந்த உன்னைநாடாமல் (எ ன்றுணரப்பட்ட பிரபஞ்சப் பொருள்களையே) நாடி அவற்றிலழுந்தும் எ ன்னறி விருந்தவாறென்ன. (௨௭௩)

உண்டுபோ லின்று முலகைத் திரமெனவுட்
கொண்டுநான் பெற்றபலன் கூறாய் பராபரமே.

பொ-ரை. (காரிய ரூபத்தால்) இருப்பதுபோலத்தோன்றி (காரண ரூபத்தால்) இல்லாதது போலத்தோன்றும் உலகத்தை நித்தியமெனக்கரு தி நானடைந்தபயனைச் சொல்வாய். (௨௭௪)

உள்ளபடி யாதுமென வுற்றுணர்ந்தே னக்கணமே
கள்ளமனம் போனவழி காணேன் பராபரமே.

பொ-ரை. எல்லாம் திருவருட்சம்மதப்படி நடக்குமென்று எண்ணித் தேர்ந்தேன். அக்கணமே வஞ்சகமனமானது போனவழிகண்டிலேன். (மன மொடுங்கிவிட்டது.) (௨௭௫)

சித்த மவுனஞ் செயல்வாக் கெலாமவுனஞ்
சுத்தமவுன மென்பாற் றேன்றிற் பராபரமே.

பொ - ரை. எனதறிவினிடத்து (அடக்கமாகிய) சுத்த மவுனமுண்டா 5மேல் என்மனமானது மவுனம் செய்கைவாக்கனைத்தும் மவுனம். (௨௭௬)

எண்ணில்பல கோடியுயி ரெத்தனையோ வத்தனைக்குங்
கண்ணிற் கலந்தவருட் கண்ணே பராபரமே.

பொ - ரை. அளவில்லாத பலகோடிவகைப்பட்ட சீவராசிகளெவ்வள 'வா அவ்வளவிலும் கண்ணின்(மணிபோலக்)கலந்திருந்த திருவருட்கண்ணே.

எனக்கினியா ருன்போலு மில்லையென்றால் யானு
முனக்கினியா னாகா வுளவேன் பராபரமே.

பொ - ரை. தேவரீரைப்போலும் அடியேனுக்கு இனியவர் இல்லையா 'ன் அடியேனும் தேவரீருக்கு இனியவனாகாத உளவுயாது. (௨௭௮)

அண்டபிண்டங் காணே னகமும்பு றமுமொன்றாக்
கண்டவென்னை நீகலந்த காலம் பராபரமே.

பொ - ரை. உள்ளும்புறமும் ஒருதன்மையாகத் தரிசித்த என்னிடத் ரி அத்துவிதமான தன்மை தெரிந்தகாலத்தில் அண்டபிண்டங்களின் தாற்றம் கண்டிலேன். (௨௭௯)

எத்தனையோ கோடி யெடுத்தெடுத்துச் சொன்னாலுஞ்
சித்தமிரங் கிலையென் செய்வேன் பராபரமே.

பொ - ரை. கோடிக்கணக்காக எத்தனைவிதமாயெடுத்து முறையிடி ும் தேவரீர்மனம் என்பால் இரங்கவில்லை இனியானென் செய்யக்கடவேன்.

அன்றந்த நால்வருக்கு மற்புதமா நீயுரைத்த
தொன்றந்த வார்த்தையெனக் குண்டோ பராபரமே.

பொ - ரை. பூர்வத்தில் (சனகாதியர் முதலாகிய) அந்த நால்வர்க்கும் ச்சரியமாகத் தேவரீர் உபதேசித்தருளிய (சித்தாந்த மகாவாக்கியமாகிய) ருமொழி எனக்குக்கிட்டுமோ. (௨௮௧)

அப்பனென்று மன்னையென்று மாரியனென் றும்முனையே
செப்புவது முன்னிலையின் சீர்காண் பராபரமே.

பொ - ரை. தந்தையெனவும், தாயெனவும், ஆசாரியனெனவும் தேவ ையே பலவாறுகச்சொல்லுவது (அங்ஙனமெலா மிருக்கும்) உனது நிலை னது சிறப்பாய் முடியும். (௨௮௨)

கட்டுங் கனமுமந்தக் காலர்வரும் போதெதிர்த்து
வெட்டுந் தளமோ விளம்பாய் பராபரமே.

பொ - ரை. சனக்கூட்டமும், பெருமையும் அந்தயமபடர்வருங்காலத் ில் அவர்களை (உனது திருவருளல்லது) எதிர்த்து வெட்டுகின்றபடையாமோ

பேசாத மோனநிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசாம கோசரந்தான் வாய்க்கும் பராபரமே.

பொ - ரை. வாய்விட்டுப்பேசாத மவுனநிலையினை யடைந்தாலன்றோ தேவரீர் அருளாகிய வாக்கினாலறியப்படாத நிலைகிடைக்கும். (௨௮௪)

கற்றாலுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்றாலு மின்பமுண்டோ பேசாய் பராபரமே.

பொ - ரை (உலக நூலனைத்தும்) கற்றாலும், (அவையனைத்தும்) கேட்டாலும், சரீரம் நசிக்காத சித்தியடைந்தாலும் (நின்னுடன் இரண்டறக்கலந்தனுபவிப்பதாகிய) சுகமுளதோ சொல்வாய். (௨௮௫)

கண்டவடி வெல்லாங் கரைக்கின்ற வஞ்சனம்போ
லண்டமெல்லா நின்னருளே யன்றோ பராபரமே.

பொ - ரை. தான் தீண்டிய வுருயாவற்றையுந் (தன்மயமாக) செய்கின்ற அஞ்சனம்போல அண்டங்கள் யாவையும் வியாபித்துள்ள திருவருளின் மேம்பாட்டால் அவை அவ்வருளுருவமே யல்லவோ. (௨௮௬)

தன்செயலா லொன்றுமிலை தானென்று ஞான்பாவி
நின்செயலாய் நில்லா நினைவேன் பராபரமே.

பொ - ரை. என்செயலா (லாவது) சிறிதுமில்லையென நான் தேர்ந்தேனென்றால் பாவியாகிய நான், உன்செயலாய் (எல்லா முடியுமென என் மனம்) நில்லாதநினைவு என்னை. (௨௮௭)

கொலைகளவு கட்காமங் கோபம்விட்டா லன்றோ
மலையிலக்கா நின்னருடான் வாய்க்கும் பராபரமே.

பொ - ரை. கொலையையும், களவையும், கள்ளுண்டலையும், காமத்தையும், கோபத்தையும் விட்டாலல்லவோ உன்றிருவருள் மலையிலக்காகக் கிடைக்கும். (௨௮௮)

தன்னை யறியாது சகந்தானா யிருந்துவிட்டா
லுன்னை யறியவரு ளுண்டோ பராபரமே.

பொ - ரை. (ஆன்மாவாகிய) தன்னை (இன்னதன்மையனென விசாரித்து) உணராமல் (பிரபஞ்சப் பொருள்களிற்பற்றுவைத்து) உலகமேதானாயிருந்துவிட்டால் தேவரீரையறிதற்குக்கருவியாகிய திருவருள் உண்டாகுமோ.

ஒன்றிரண்டென் றுன்னு வுணர்வுகொடுத் துள்ளபடி
யென்றுமென்னை வையா யிறையே பராபரமே.

பொ - ரை. (ஆன்மாவும் பரமான்மாவும்) ஒன்று, (ஆன்மாவும் பரமான்மாவும் வெவ்வேறான) இரண்டு அன்று நினையாத (ஆன்மாவும் பரமான்மாவும் எக்காலத்து மத்துவிதமாயிருப்பது என்றும்) அறிவைத்தந்து எக்காலத்தும் உள்ளபடி என்னை வைக்கவேண்டும். இறைவனே. (௨௯0)

கருதுமடி யார்களுளங் காணவெளி யாகுந்
துரியநிறை வான சுகமே பராபரமே.

பொ - ரை. (திருவருள் முன்னிட்டு) நினைக்கின்ற அடியார்களுடைய
மனமானது தரிசிக்கும்படி சிதாகாயமாகின்ற துரியபூமியில் நிறைந்திருக்கி
ன்ற ஆனந்தமே. (உகக)

பொய்நிறைந்த நெஞ்சனருட் பொற்பறிந்து திக்கனைத்துங்
கைகுவித்து நிற்பதெந்தக் காலம் பராபரமே.

பொ - ரை. பொய் நிறைந்த மனத்தினேன் (தேவரீர்) திருவருளின்
மேன்மையறிந்து (சர்வவியாபகமாக நிற்றலினால்) திசைகளெல்லாவற்றிலும்
கைகூப்பி நிற்பது எந்தக்காலமோ. (உகஉ)

அத்துவித மான வயிக்ய வனுபவமே
சுத்தநிலை யந்நிலையார் சொல்வார் பராபரமே.

பொ - ரை. அத்துவிதமான வயிக்கிய வனுபவமே சுத்தாத்துவித
நிலை. அந்நிலையின் பெருமையை யாவர் சொல்லவல்லார். (உகங)

வைத்த சுவரலம்பின் மண்போமோ மாயையினோர்க்
கெத்தனைபோ தித்துமென்ன மெந்தாய் பராபரமே.

பொ - ரை. (மண்ணினாலேயே) கட்டப்பட்ட சுவரைக் கழுவினால்
மண் போய்விடுமோ (போகாது) அதுபோல, மாயையிற் கட்டுப்பட்டுழல்
வார்க்கு எவ்வளவு போதித்தாலும் (அந்த மாயை நீங்குமோ) ஆகலின் என்ன
பிரயோசனம் எந்தையே. (உகச)

பூட்டற்றுத் தேகமற்றுப் போகுமுன்னே நின்னருளைக்
காட்டத் தகாதோவென் கண்ணே பராபரமே.

பொ - ரை. (நரம்பினாற் கட்டுப்பட்டுள்ள) பொருத்துக்களற்றுச் சரீ
ரம் அழிவதற்கு முன்னமே தேவரீர் திருவருளைக் காட்டத்தகாதோ என்
கண்ணே. (உகரு)

சொல்லிற் பதர்களைந்து சொன்முடிவு காணுகிலார்
நெல்லிற் பதர்போல நிற்பார் பராபரமே.

பொ - ரை. (சாத்திரங்களில் நிறைந்த) சொற்களில் (உலக சம்பந்த
மான) பயனற்ற சொற்களை நீக்கி (பிரயோசனமான) சொற்களால் (பிரதிபா
திக்கப்படுகின்ற) சித்தாந்தத்தை யறியாதவர் நெல்லிலுள்ள பதர் போலப்
பயனற்றவர்களாய் நிற்பார். (உகசு)

அழுக்காற்று னெஞ்ச மழுங்கியபுன் மாக்க
ளிழுக்காற்று லின்பநல மெய்தார் பராபரமே

பொ - ரை. (சன்மார்க்க சமயத்தினரை நோக்கி) பொறுமையால் மனம்வருந்திய (முக்கூற்றுப் புறச்சமயத்தவர்களாகிய) கீழ்மக்கள் தமது துன்மார்க்கத்தால் சுகமாகிய நன்மையை யடையார்கள். (௨௯௭)

தேகாதி பொய்யெனவே தேர்ந்தவுப சாந்தருக்கு
மோகாதி யுண்டோ மொழியாய் பராபரமே.

பொ - ரை. தநுகரண புவனபோகங்களை (காரியத்தால்) பொய்யென்று தெளிந்த உபசாந்தர்களுக்கும் காமக்குரோத லோப மோக மத மாச்சரியம் உளவாமோ சொல்லாய். (௨௯௮)

சாதனையெல் லாமவிழத் தற்போதங் காட்டாதோர்
போதனை நீ நல்குவதெப் போதோ பராபரமே.

பொ - ரை. சாதனங்களெல்லாம் தாமே நழுவிவிடத்தற்போதம் தலையெடுக்காதவகை ஒருபதேசம் எனக்கு நீ யருளிச்செய்வது எந்தக்காலமோ.

ஒன்றுமறி யாவிருளா முள்ளம் படைத்தவெனக்
கென்று கதிவருவ தெந்தாய் பராபரமே.

பொ - ரை. (ஞானசம்பந்தமான) ஒன்றையு முணராத (ஆணவ) விருளுருவமாகிய மனத்தையுடைய எனக்கு நற்கதி யுண்டாவது எந்தக் காலம் எந்தையே. (௩௦௦)

சிந்திக்குந் தோறுமென்னுட் சிற்சுகமா யூற்றூறிப்
புந்திக்கு ணின்றவருட் பொற்பே பராபரமே.

பொ - ரை. (நினது அருட்கோலத்தினை) நினைக்குந்தோறும் என்னுள்ளே ஞானசுகமாய் ஊற்றுச் சுரந்து என்பத்தியில் தோன்றிய திருவருட் பொலிவே. (௩௦௧)

என்றுமடைந் தோர்கட் கிரங்கார் குறிப்பனைத்துங்
கன்றை யுதைகாலி கதைகாண் பராபரமே.

பொ - ரை. எக்காலத்தும் தம்மை (ஒரு பொருட்டாகமதித்து) ஆசிரயித்த (சிவனடியார்கட்கு மனங்கசிந் துதவிசெய்ய) இரங்காதவர்களுடைய நினைவெல்லாம் சமீபிக்கும் கன்றினை அணுகவொட்டாமல் உதைக்கின்ற பசுக்கூட்டத்தின் கதையை நிகர்க்கும். (௩௦௨)

குற்றங் குறையக் குணமே லிடவருளை
யுற்றவரே யாவிக் குறவாம் பராபரமே.

பொ - ரை. (நாளுக்குநாள்) பாவச்செய்கைகள் குறையப் புண்ணியச் செய்கைகள் மேலிட உன்றிருவருளை யடைந்தவர்களே என் ஆன்மபந்து ஆவார்கள். (௩௦௩)

ஒருரையால் வாய்க்குமுண்மைக் கோரனந்த நூல்கோடி
பெருரையாற் பேசிலென்ன பேறும் பராபரமே.

பொ - ரை. (சித்தாந்தமகா வாக்கியமாகிய) ஒருமொழியால் கிடைக்கும் உண்மைப் பொருளின்பொருட்டு (மெய்கண்ட சாத்திரங்கட்கு) சமானமற்ற அளவில்லாத (பொய்கண்ட) சாத்திரத் தொகுதிகளைப் பெரிய வுரைகளுடன் படித்தாலு மென்னபயனுண்டாம். (௩0௪)

சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்கு ளேசுழலு
மல்ல லொழிவதென் றைக் கையா பராபரமே.

பொ - ரை. (ஆன்மாக்கள் கன்மத்திற்குத்தகுந்தபடி) சொல்லப்பட்ட (மூக்கூற்று) சமயமார்க்கமாகிய சுற்றுக்குள் அகப்பட்டுச் சுழலாநின்றதுன்பமானது என்னைவிட்டு நீங்குவது என்று ஐயனே. (௩0௫)

பிடித்ததையே தாபிக்கும் பேராணவத்தை
யடித்துத் துரத்தவல்லா ரார்காண் பராபரமே.

பொ - ரை. (உண்மையினை விசாரிக்க முயலாமல்) தான் (கன்மத்திற்குத் தகுந்தபடி) கைப்பற்றினதையே (சத்தியமெனச் சாதித்துத்) திரப்படுத்துகின்ற பெரிய ஆணவத்தடிப்பை யடித்துத்துரத்த வல்லவர்யாவர் ஒருவருமில்லை. (௩0௬)

நேரத்தா னின்னை நினைக்கு நினைவுடையார்
ஆசைக் கடலி லழுந்தார் பராபரமே.

பொ - ரை. அன்பினால் தேவரீரைத் தியானிக்கின்ற மனத்தையுடையவர் (பிரபஞ்ச) ஆசையாகிய கடலில் அமிழார். (௩0௭)

கள்ளாது கட்டுணவுங் காரியமோ நானொருசொல்
கொள்ளாத தோஷமன்றோ கூறாய் பராபரமே.

பொ - ரை. (நானொரு தீமைசெய்யாதிருக்கவும் எனக்குப் பந்தம் வந்து சேர்ந்திருப்பது) (ஒருவன்) திருடாமலிருக்கவும் கட்டுப்பட்ட காரியம்போலும் (அது) நான் (சித்தாந்த மகாவாக்கியமாகிய) ஒருமொழியைக் (குருவின் மூலமாக) அடையாத குற்றமல்லவோ கூறாய். (௩0௮)

சென்றவிட மெல்லாந் திருவருளே தாரகமா
நின்றவர்க்கே யானந்த நிட்டை பராபரமே.

பொ - ரை. போன இடமெல்லாம் திருவருளை ஆதாரமாகக்கொண்டு (சிவராஜயோகத்தால்) நின்றவர்க்கே ஆனந்தத்துக்குக் காரணமாகிய நிஷ்டையுள்ளது. (௩0௯)

நீட்சி குறுகலில்லா நித்தியசுகா ரம்பசுக
சாக்ஷியா முன்னைவந்து சார்ந்தேன் பராபரமே.

பொ - ரை. (ஒரு காலத்தில்) வியாபித்தலும் (ஒருகாலத்தில்) சுருங்கலும் இல்லாத நித்தியமாகிய சுகத்தொடக்கத்திற்குக் காரணமாய் உலகத்திற்கு (நிமித்த) காரணமாயிருக்கிற உன்னை வந்தடைந்தேன். (௩௧௦)

வானாதி தத்துவமாய் மன்னிநின்ற காரணநீ
நானாகி நிற்பதெந்த நாளோ பராபரமே.

பொ - ரை. (சர்வவியாபகத்தன்மையால்) ஆகாய முதலிய தத்துவங்களை (யதிட்டித்து) அவைகளாய் நிலைபெற்றுநின்ற சர்வகாரணனே (சிவோகம் பாவனையில்) நீயே நானாகிநிற்பது எந்தக் காலமோ (௩௧௧)

கட்டத்தி லங்கி கடையவந்தா லென்னவுன்னும்
நாட்டத்தி னூடுவந்த நட்பே பராபரமே.

பொ - ரை. கடைதலால் விறகினின்றும் (முன்னமே மறைந்திருந்த) நெருப்புண்டானதுபோல நினைக்கின்ற நினைவில் (முன்னமே யத்துவிதமாகவிருந்து) உண்டாகிய என்னுயிர்த்துணையே. (௩௧௨)

நித்திரையாய்த் தானே நினைவயர்ந்தா னித்தநித்தஞ்
செத்தபிழைப் பானதெங்கள் செய்கை பராபரமே.

பொ - ரை. (தற்போத) நித்திரைசெய்து தானே (திருவருள்) நினைவு மறந்தால் நாள்தோறும் எங்கள்செய்கை நித்தியமரணமாய் விட்டது.

இன்பநிட்டை யெய்தாமல் யாதெனினுஞ் சென்றுமனந்
துன்புறுதல் வன்பிறவித் துக்கம் பராபரமே.

பொ - ரை. (சிவராஜயோகமாகிய) சிவானந்த நிஷ்டையடையாமல் மனமானது (பிரபஞ்ச சம்பந்தமான) யாதொருபொருளினும் சென்றழுந்தித் துக்கமடைதல் வலியபிறவித்துன்பம். (௩௧௪)

பொய்யகல மெய்யான போதநிலை கண்டோர்க்கோ
ரையமில்லை யையமில்லை யையா பராபரமே.

பொ - ரை. (காரிய ரூபமான பிரபஞ்சம்) பொய் நீங்கும்படி (திருவருளென்னும்) உண்மையாகிய ஞானநிலையைக் கண்டவர்களுக்கு (மோட்சமடைய) ஒரு சந்தேகமில்லை ஒரு சந்தேகமில்லை ஐயனே. (௩௧௫)

மந்திரத்தை யுன்னி மயங்கா தெனக்கினிமேயார்
தந்திரத்தை வைக்கத் தகாதோ பராபரமே.

பொ - ரை. (வேதாதிகளால் கொண்டாடப்பெறாத) மந்திரத்தை நினைத்து மயங்காமல் இனியொரு உபாயத்தைக் கற்பிக்கத்தகாதோ.

விண்கருணை பூத்ததென மேவி யுயிர்க்குயிராய்த்
தண்கருணை தோன்றவருள் டாய்நீ பராபரமே.

பொ - ரை. சிதாகாயமானது கருணையைப் பூத்தாற்போல உயிர்க்கு ராய்ப்பொருந்தி (ஆன்மாக்களின் இருதயாகாயத்தில்) தண்ணிய கிருபை தான்ற அருள்செய்கின்றதாய் நீயே. (௩௱௪௭)

நன்மயமாய் நின்றநிலை தானேதா னாகிநின்று
னின்மயமா யெல்லா நிகழும் பராபரமே.

பொ - ரை. (சுதந்தரங்கொண்டு) ஆன்மாவாகிய தன்மயமாய் (பிரப ஞ்சமிருப்பது என நின்ற நிலையே (சுதந்தரமிழந்து ஆன்ம சொரூபமறிந்து) ன் சொந்தநிலையாக நின்றால், (அக்காலத்து அவ்வான்மாவைத் தேவரீர் ரக்ஷி டித்துக்கொள்ள பின்பு நிகழ்வன வெல்லாம்) நின் தன்மையாக நடக்கும்.

ஏங்கி யிடையுநெஞ்ச வேழையைநீ வாவென்றே
பாங்குபெறச் செய்வதுன்மேற் பாரம் பராபரமே.

பொ - ரை. (திருவருளடைதலின் பொருட்டு) ஏக்கத்தையடைந்து ங்கின்ற மனத்தையுடைய எளியேனை நீவாவென்றழைத்துத் (திருவருளா ய) பாங்கினைப் பெறச்செய்வது உன்மீதுள்ள பாரம். (௩௱௪௯)

ஆண்டநின்னை நீங்கா வடிமைகள்யா மாணவத்தைப்
பூண்டதென்ன கன்மம் புகலாய் பராபரமே.

பொ - ரை. (எங்களை யடிமையாக) ஆண்டுகொண்ட நின்னைவிட்டுப் ரியாத அடிமைகள் நாங்கள் (அங்ஙனமாகவும்) நாங்கள் ஆணவமாகிய வக காரத்தை ஆபரணமாகப் பூண்டிருப்பதற்குக் காரணம் என்ன கர்மமோ சால்வாய். (இன்னந்தீவிர பக்குவம் வரவில்லை யென்பதாம்) (௩௱௫௦)

எங்கணுநீ யென்று மிருந்தபடி யெய்தாம
லங்குமிங்கு மென்றலைய லாமோ பராபரமே.

பொ - ரை. எவ்விடத்திலும் நீ (சர்வவியாபகமாய்) நிறைந்திருக்கின்று யென்றால் இருந்தபடியே யுனையடையாமல் அங்குள்ளது இங்குள்ளது என (சுட்டி) அலையவொண்ணுமோ. (௩௱௫௧)

கற்குமது வுண்டு களித்ததல்லா லின்னருளி
னிற்குமது தந்ததுண்டோ நீதான் பராபரமே.

பொ - ரை. கல்வியாகிய (அபர) ஞானத்தேனைப்பருகிக் களித்ததல் மல் நீதான் உன் திருவருளினிற்றலென்னும் (பரஞானத்) தேனைக்கொ த்ததுண்டோ. (௩௱௫௨)

அண்டபகி ரண்ட மறியாத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டாற் கதியாம் பராபரமே.

பொ - ரை. (திருவருளை முன்னிட்டு) அண்டபகிரண்டங்களில் உள் வரெல்லாம் அறியாத தேவரீர் திருவுருவினைச் சேவித்தவடியவரைச் சேவி த அடியவரானால் மோட்சமுண்டாம். (௩௱௫௩)

கலக்கமுற நெஞ்சைக் கலக்கித் திரும்பத்
துலக்குபவ னீயலையோ சொல்லாய் பராபரமே.

பொ - ரை. (கன்மத்திற்குத் தக்கபடி) கலக்கமடைய மனத்தைக் கலங்கப்பண்ணி மறுபடியும் (கன்மத்தொலை யொத்தவவசரத்து) தெளியப் பண்ணுவோன் நீயல்லவோ சொல்லாய். (௬௨௪)

சிந்தையுமென் போலச் செயலற் றடங்கிவிட்டால்
வந்ததெலா நின்செயலா வாழ்வேன் பராபரமே.

பொ - ரை. மனமும் என் (அறிவினைப்) போலச் செய்கையற்று ஒடுங்கிவிட்டால் நேரிட்டதெல்லாம் உன் (திருவருட்) செயலாகவே பாவித்து வாழ்ந்திருப்பேன். (௬௨௫)

பந்தமெலாந் தீரப் பரஞ்சோதிநீ குருவாய்
வந்த வடிவை மறவேன் பர்ாபரமே.

பொ - ரை. சிவபரஞ்சுடரே என் பிறவிப்பிணிப்பு அவிழும்படி தேவரீர் குருவடிவாய்வந்த திருமேனியை அடியேன் மறக்கமாட்டேன். (௬௨௬)

தானந்த மான சகச நிருவிகற்ப
வானந்த நிட்டையரு ளையா பராபரமே.

பொ - ரை. தன்னளவிலேயே முடிவடைந்த (தனக்கு மேலொன்று மில்லாத) இயற்கையாம் விகாரமின்றிநின்ற சிவானந்த சிவயோக நிஷ்டையை அருள்செய்யவேண்டு மையனே. (௬௨௭)

அல்லலெல்லாந் தீரவெனக் கானந்தமாக வொரு
சொல்லையென்பால் வைத்ததையென் சொல்வேன் பராபரமே.

பொ - ரை. (பிரபஞ்ச) துன்பமெல்லா மொழியும்படி அடியேனுக்கு இன்பமுண்டாக (சித்தாந்த மகாவாக்கியமாகிய) ஒருமொழியை யெனக்குக் கிருபைசெய்ததைப்பற்றி என்சொல்லிப் புகழ்வேன். (௬௨௮)

சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையுநான் றந்தேன் பராபரமே.

பொ - ரை. மனமயக்கந் தீரும்படி (ஆக்கும்) சித்துருவாய் எழுந்தருளிய தேவரீரை என்னிருதயத்தி லெழுந்தருளும்படி தந்த வுனக்குத் (அல சித்துருவாகிய) நான் என்னையும் (அடிமையாக்) கொடுத்தேன். (௬௨௯)

மைகாட்டு மாயை மயக்கமற நீகுருவாய்க்
கைகாட்ட வுங்கனவு கண்டேன் பராபரமே.

பொ - ரை. (ஆணவ) இருளுருவமாகிய மாயாமயக்கமொழிய தேவரீர் ஆசாரியகோலங் கொண்டெழுந்தருளிவந்து (சின்முத்திராங்குசமாகக்) கை காட்டவும் சொப்பனங்கண்டேன். (௬௩௦)

மால்வைத்த சிந்தை மயக்கறவென் சென்னிமிசைக்
கால்வைக்க வுங்கனவு கண்டேன் பராபரமே.

பொ-ரை. (பிரபஞ்ச சம்பந்தமாக) ஆசைவைத்த மனமயக்கமற அடியன் சிரமீது தேவரீர் திருவடி நிட்சைசெய்யவும் சொப்பனங்கண்டேன்.

மன்னான மாயையெல்லா மாண்டுவெளி யாகவிரு
கண்ணார வுங்கனவு கண்டேன் பராபரமே.

பொ-ரை. பிருதிவி ரூபமாயுள்ள (பிரகிருதி) மாயையெல்லாம் என் இருதயத்திற் றோன்றாதவகை) சிதாகாயமாத்திரந்தோன்ற இரண்டுகண்களாரக் கண்டேன். (௲௨)

மன்னீர்மை யாலே மயங்காதுன் கையாலென்
கண்ணீர் துடைக்கவுநான் கண்டேன் பராபரமே.

பொ-ரை. பிரபஞ்சமாயையாலே மயங்காமல் தேவரீர் (ஆசாரியகோலங்கொண்டுவந்து) திருக்கரத்தினால் அடியேன் கண்ணீரைத்துடைக்கவும் நான் கனவுகண்டேன். (௲௩)

உள்ள துணரா வுணர்விலிமா பாவியென்றோ
மெள்ளமெள்ளக் கைநெகிழ விட்டாய் பராபரமே.

பொ-ரை. மெய்கண்டறியாத அறிவில்லாத மகாபாபியென்று தானோ (என்பாற்றோன்றாது) மெள்ள மெள்ள கைசோரவிட்டனை. (௲௪)

எல்லா நினைதுசெயலென்றெண்ணு மெண்ணமுநீ
அல்லா லெனக்குளதோ வையா பராபரமே.

பொ-ரை. சருவமும் தேவரீர் திருவருட்செயலேயென்று நினைக்கிற நினைவும் (உன் திருவருள் விலாசத்தாலன்றி) எனக்கென்று ஒரு எண்ணமுண்டோ ஐயனே. (௲௫)

பந்த மயக்கிருக்கப் பற்றொழிந்தே னென்றுளறு
மிந்த மயக்க மெனக்கேன் பராபரமே.

பொ-ரை. பிறவிப்பிணிப்பின் மயக்கமிருந்துகொண்டிருக்க (பிரபஞ்ச) பற்று விட்டேனென்று உளறுகின்ற விம்மயக்கமெனக்கேன்.

காட்சியெல்லாங் கண்ணைவிடக் கண்டதுண்டோ யாதினுக்கு
மாட்சி யுனதருளே யன்றோ பராபரமே.

பொ-ரை. (பிரபஞ்சமுமாக வனுபவிக்கப்படும்) காட்சியனைத்தும் கண்ணைத்தவிர (வேறுவிதத்தால் பார்த்ததுண்டோ இல்லை யதுபோல) எல்லாவற்றிற்குந் தேவரீரது திருவருளே தாரகமன்றோ. (௲௭)

எட்டுத் திசையுமொன்று யின்பமாய் நின்றவுன்னே
விட்டுப் பிரியவிடம் வேறே பராபரமே.

பொ-ரை. எட்டுத்திக்குகளிலும் ஒரே வியாபகமாகி இன்பவடிவாய் எழுந்தருளியிருக்கிற தேவரீரை நீங்கி (அடியேன் வாழுதற்கு) இடம் வேறுளதோ. (௩௩௮)

பிரியா துயிர்க்குயிராய்ப் பின்னமற வோங்குஞ்
செறிவே யறிவே சிவமே பராபரமே.

பொ-ரை. (ஆன்மாக்களைவிட்டுப்) பிரியாமல் (அவ்வான்மாக்களின்) உயிர்க்குயிராகிவேறற வோங்கும் கலப்பே அறிவுமயமே சிவமே. (௩௩௯)

ஏதேது சொன்னாலு மெள்ளளவு நீயிரங்காச்
சூதே தெனக்குளவு சொல்லாய் பராபரமே.

பொ-ரை. (அடியேனுடைய குறைகளையெல்லாம்) என்னென்னவிதமாகவெடுத்துச் சொன்னாலும், எள்ளளவும் தேவரீர் (என்மாட்டு) இரங்காதிருக்கும் கபடத்தன்மையாது அடியேனுக்குபாயம் சொல்லுவாய்.

கற்பனையாய் பாடுகின்றேன் கண்ணீருங் கம்பலையும்
சொப்பனத்துங் காணேனென் சொல்வேன் பராபரமே.

பொ-ரை. (கற்றகல்வியின் சாமர்த்தியத்தால்) அலங்காரமாகப்பாடுகின்றேன் (அல்லது அன்புமயமாகவிருந்து) கண்ணீரும் நடுக்கமும் (என்னிடத்துக்) கண்டேனில்லை, என்வினையை யென்னவெனச் சொல்லுகேன்.

வன்பொன்று நீங்கா மனதிறப்ப மாறுப்பே
ரன்பொன்றும் போதுமெனக் கையா பராபரமே.

பொ-ரை. கடினத்தன்மையொன்றினை நீங்கப்பெறாத எனது மனமானது அடங்க, என்றும் மாறுபடாத பேரன்பொன்றுமே எனக்குப் போதும் ஐயனே! (௩௪௨)

ஏதுந் தெரியா வெளியேனை வாவெனநின்
போதநிலை காட்டிற் பொறாதோ பராபரமே.

பொ-ரை. (உண்மைத்தன்மை)யொருசிறிதுந்தெரியாத எளியேனை (தேவரீர் சந்நிதானத்தால்) வாவென்றழைத்துத் தேவரீர் ஞானநிலைமையினைத் தரிசிப்பித்தால் அத்தன்மை அடியேனால் தாங்கமுடியாதோ?

ஓராம லெல்லா மொழிந்தேற்குந் தெய்வவரு
டாரா திருக்கத் தகுமோ பராபரமே.

பொ-ரை. (பிரபஞ்சமூகமாகவுள்ள விடயங்கள்) எல்லாவற்றையும் ஆராயாமல் தனித்திருக்குமெனக்குத் தேவரீரது தெய்வீகமான கிருபையினைப் புரியாதிருந்தால் அத்தன்மை தேவரீருக்குத் தகுதியாமோ? (௩௪௪)

மோனந் தருஞான முட்டி யெனக்குவட்டா
வானந்த வாழ்க்கை யருளாய் பராபரமே.

பொ - ரை. மௌனநிலையினைத் தருதற்கு(ஏதுவாகவுள்ள) ஞானத்தினை (அடியேனுக்கு) உதிப்பித்து அடியேனுக்குத் தெவிட்டாத சிவானந்தவாழ்வினை யருளவேண்டும். (௫௪௫)

வாடுமுகங் கண்டென்னை வாடாம லேகாத்த
நீடுங் கருணை நிறைவே பராபரமே.

பொ - ரை. (தேவரீரைத் தரிசியாததினால்) வாடுகின்றமுகத்தினைப்பார்த்து அடியேனைவாடாதிருக்கும்படி காத்தருளியபெருங்கருணைப்பூரணமே.

புத்தியினு லுன்னடியைப் போற்றுகின்ற மெய்யடியார்
சிந்தையிறப் போமின் றியானம் பராபரமே.

பொ - ரை. நற்புத்தியினைக்கொண்டு தேவரீர் திருவடியினை மனத்தினால் வணங்குகின்ற உண்மையடியார்கள் மனமொடுங்கிய விடத்திலோ உன் தியானம் (பலிப்பது.) (௫௪௭)

உனக்குவமை யாக்கருணை யுள்ளவரும் வன்மைக்
கெனக்குவமை யானவரு மில்லை பராபரமே.

பொ - ரை. தேவரீருக்கு ஒப்பாகக்கருணை வாய்ந்தவரும், கடினசித்தத்தில் எனக்கு ஒப்பானவரும் இல்லை. (௫௪௮)

தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போ லெவ்விடத்து
நீயிருந்து நான்றளர்ந்து நின்றேன் பராபரமே.

பொ - ரை. (பெற்றெடுத்த அருமைத்) தாயார் இருந்தும் அவள்பிள்ளை (பசியால்) தளர்ச்சியினை யடைதல்போல, சர்வவியாபகமாகத் தேவரீரிருந்தும் (திருவருளிருக்கு) அடியேன் மனத்தளர்ச்சியுற்று நின்றேன்.

வாயாற் கிணறுகெட்ட வாறேபோல் வாய்பேசிப்
பேயனார்க் கின்பமுண்டோ பேசாய் பராபரமே.

பொ - ரை. வாயிருந்ததினாலேயே (பதன் மூலமாக மண்விழுந்து) கிணறு தூர்ந்து விட்டதுபோல, வாயொன்றிருந்ததினாலேயே (பலபடப்) பிதற்றிப் பேய்க்குச் சமானமானவர்கட்குச் சுகம்விளையுமோ அருள்வாய். (௫௫௦)

பாவமென்றாலேதும் பயமின்றிச் செய்யவிந்தச்
சீவனுக்கார் போதந் தெரித்தார் பராபரமே.

பொ - ரை. பாவத்தொழில்களென்றால் சிறிதும் அச்சமின்றிச்செய்ய இந்தச் சீவனுக்கு ஆர் அறிவூட்டினார். (௫௫௧)

இன்ப நிறைவெய்து மின்றே லன்றெனிலோ
துன்பம் பொறுப்பரிது சொன்னேன் பராபரமே.

